# கேரள நாட்டின் கமலம்

## சகோதரி அல்போன்ஸா

" கிறீஸ்துநாதர் எனக்கு ஜீவன்
மரணம் எனக்கு ஆதாயம் "
பிலிப். 1 : 21

ஆக்கியோன்
செ. புதுமை

# சமர்ப்பணம்

குணக்குன்ருய்
குன்றின்மேலேற்றிய ஒளிர்சுடராய்
அணைக்குந் தாயாய்
அறம் போற்றி மறங்களையும் அப்பனுய்
ஆயர் சேனையின் அணியாய்
மதுரை மேற்றிராசனத்தின் மகிபனுய்
விளங்கா நிற்கும்
வந். பீற்றர் லெயோனுர்டு ஆண்டவரவர்களின்
சஷ்டி பூர்த்தி வைபவத்தில்
அவர்கள் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்த
சிறியதோர் காணிக்கை

[29-12-1889 — 29-12-1948]

# முன்னுரை

அல்போன்ஸா சகோதரி என்னும் புண்ணியவதியின் அதிசய ஜீவிய சரிதையைப் படித்து அறிந்தவர்களில் ஆச்சரியப்படாத வர்கள் யாருமில்லை என்பதில் ஐயமில்லை. ஆச்சரியப்படுவதற்குக் காரணம், ஏற்கனவே மானிடர் கண்ணுக்குப்படாத ஓர் அரிய பொக்கிஷம் திடீரென வெளிப்பாடானதுதான். இப்பொக்கிஷமோ எங்கேயோ அகப்பட்ட அரும் பெரும் புதையலல்ல, யாரோ அதிர்ஷ்ட வசமாய்க் கண்டெடுத்த விலையுயர்ந்த மாணிக்கமுமல்ல. உண்மையில், லௌகீக திரவியங்களைச் சார்ந்ததன்று இது; ஞான இராட்சியத்துக்குச் சம்மந்தமான அதிசயபொருள் ஆகும். ஆத்தும சுத்தி, ஆத்துமார்த்த ஆபரணம், மேலான ஆஸ்தி. அதோடு உலக ஐசுவரியமெல்லாம் ஒப்பிடத்தக்கதல்ல. "பொன்னுபரணத்தைப் பார்க்கிலும் புகழாபரணமே மேல்" என்ற ஓர் பழமொழி வழங்கி வருகிறது. வேதபோதனையும் இதற்கு அத்தாட்சி. உன் திரவியத்தை உன்னத கடவுளின் கட்டளைகளில் வை; பொன்னைவிட உனக்கு அது அதிக பிரயோசனமாகும்" (சர்வபிர. 29-ம், 14); "நான் நீதியின் பாதைகளிலும் நியாய வழிகள் மத்தியிலும் உலாவுகின்றேன். என்னை நேசிக்கின்றவர்களைச் சம்பன்னராக்கவும், அவர்களுடைய பொக்கிஷங்களை நிறைக்கும்படியாகவுந்தான்" (பழமொழி. 8-ம், 20, 21) என்கிற வேதவாக்கியங்களுக்கு ஆட்சேபிப்பார் உண்டா?

இவ்வாக்கியங்கள் அல்போன்ஸா சகோதரி விஷயமாய் முற்றிலும் உண்மையாயிருக்கின்றன. தேவ சிநேகம் ஓர் ஆத்துமத்தில் பூரணமான ஆட்சி புரிந்தால், பரமகர்த்தர் அந்த ஆத்துமத்தில் தமது சிம்மாசனத்தை ஏற்படுத்தி, அதைத்தமது பொக்கிஷங்களால் அலங்கரித்து வருகிறார் என்பது விசுவாச படிப்பினை. இதன் தக்க எடுத்துக்காட்டாக விளங்கியுள்ளாள் அல்போன்ஸா சகோதரி. மெய்தான், அந்தம்மாள் உயிரோடு இருக்கும்மட்டும் "இராசாவின் குமாரத்தியான அவளுடைய சகல மகிமையும் உள்ளத்திலிருக்கின்றது" (சங்கீ. 44-ம், 14) என்பதற்கேற்ப, அவளுடைய சிறந்த புண்ணியாலங்காரம் இருதயத்திலுள்ள ஆழ்ந்த இரகசியங்களை ஆராய்ந்து கொள்ளும் திவ்விய ஆண்டவருக்குத் தெரிந்ததொழிய, மானிடரில் பெரும்பாலருக்குப் புரியவில்லை. மிக அதிசயமான அதை ஓர் அளவாக உத்தேசிக்கக் கூடியவர்கள் ஓர் சிலரே. ஆனால், அவள் நல்ல மரணமடைந்ததும், அவள் மன்றாட்டின் மூலம் அற்புதமான சம்பவங்கள் நிகழத் துவக்கின. இவ்வற்

புதங்களைப்பற்றி பொதுமக்கள் கேட்டவுடனே: "யார் இவள்? சர்வேசுரனிடத்தில் இவள் அத்தனை அதிகாரம் பெற்றதெப்படி?" என்று வினவ நேரிட்டது. அப்பொழுதுதான் அவளுடைய ஜீவியத்தின் முக்கியமான அம்சங்களை அறிந்து கொள்வதாகிய ஆசை ஜனங்களைக் கவர்ந்து கொண்டது. கொஞ்சக் காலத்துக் கெல்லாம் அவளது கீர்த்தி தென் இந்தியாவெங்கும் பரவிவிட்டது.

உத்தம கன்னியாஸ்திரி; சிறிய மடத்தில் ஒதுங்கிய சிறந்த புண்ணியவதி. வெளிப்புறத்தில் நெடுநாள் கொடூரவியாதி வேதனையால் பீடிக்கப்பட்டதுடன் உட்புறத்திலும் ஓயாத துன்பப்பட்டு வாழ்நாட்களைக் கழித்துவந்த நிகரற்ற ஓர் தியாகி. துன்பங்களின் மத்தியில் தேவசித்தத்துக்கமைந்து தேவ சிநேகாக்கினியால் எரிந்தொளிர்ந்த புனித ஓர் தகனபலி. அவ்வளவுதான். இது தான் இந்த சிரோன்மணியில் துலங்கிலங்கிய உத்தமதனத்தின் அஸ்திவாரம். சர்வேசுரனிடத்தில் அவள் பெற்றுக்கொண்ட சிபாரிசு வல்லமையின் இரகசியமும் இதுவே.

ஆனல் இதைப்பற்றி ஆச்சரியப்படுவதேன்? திவ்விய சேசுநாதர் சிலுவையில் அவஸ்தையாய்த் தொங்கி தமது பிராணனை பலியாக ஒப்புக்கொடுத்த போதே, மோட்சபிதாவுக்கு அதிமிக்க மகிமை வருவித்ததுமன்றி, உலக இரட்சணியமாகிய உன்னத அலுவலை சித்தியனுகூலமாய் நிறைவேற்றினர் அல்லவா? இது போலவே, அல்போன்ஸா சகோதரி எத்தனை துன்பங்களை அனுபவித்தாலும் சிறிதேனும் சலியாமல், முறையிடாமல், தேவசித்தமே என் ஆனந்தமென்று கூறி, பாடுபட்ட திவ்விய இரட்சகரோடு ஐக்கியமாய் ஒன்றுபட்டு தன்னைத்தானே பலிப்பொருளாக சமர்ப்பித்துள்ளாள். அதற்குப்பயன் என்ன? கிறீஸ்துநாதருடைய திருப்பாடுகளில் பங்காளியாக மனபூர்வமாய் சம்மதிக்கிறவன் எவனே, அவன் கிறீஸ்துநாதருடைய மாட்சிமையிலும் ஒருபங்கு அடைவான் என்பது உறுதி. இந்த முறைக்கொப்ப, சொல்லரிய வேதனைகளை உதார குணத்தோடு சகித்தனுபவித்த நமது சகோதரி இப்போழுது தன் அரும் பெரும் பொறுமையின் சம்பாவனைப் பெற்று மகிழ்வது அபூர்வமான காரியமன்று. "பட்டவர்களுக் குண்டு லாபம்"; "பொறுத்தார் பூமி ஆள்வார்" என்பது உண்மை.

ஆகவே, பின்வரும் அழகிய வரலாற்றை வாசிப்பவர்களுக்கு ஓர் ஆலோசனை. அதாவது, நமது சகோதரியை சர்வேசுரனுக்கு அவ்வளவு உகந்த மகளாக்கினது அவள் இருதயத்தில் எரிந்து வளர்ந்த புனித தேவ சிநேகமும், சிநேகத்தின் விளைவாக அவள்

செய்துவந்த தாராளமான சுயபரித்தியாகமும்; ஆனபடியினல் அவளை நாம் மிகவும் புகழ்ந்து பாராட்டுவதுடன் அவளது சுகிர்த முன்மாதிரிகையைக் கண்டுபாவித்து ஒழுகவேண்டுமென்பதே. வியாதியோ, கஸ்தியோ, கஷ்ட நஷ்டமோ என்னதான் வந்தாலும் அதைரியத்துக்கு இடங்கொடுக்காது அஞ்சாத நெஞ்சத்தோடு பொறுமையாயிருந்து ஆராதனைக்குரிய தேவ சித்தத்துக்கு அமைந்து நடத்தல் புண்ணியமென்று கருதி, "என்னைச்சூழ்ந்திருக்கிற துன்பங்களில் எனக்கு அடைக்கலமும் நீரே; என் சந்தோஷமுமாகிய கர்த்தாவே! என்னை வளைந்து கொண்டிருக்கிறவர்களிடத்தில் நின்றென்னை காத்தருளும்" (சங்கீ. 31-ம், 8) என்று அருமை அல்போன்ஸா சகோதரியைப்போல் நாமும் முழு நம்பிக்கையோடு பிரார்த்தித்துப் பழகக்கடவோமாக.

✠ ஜே. பி. லெயோனர்டு, சே. ச.
மதுரை மேற்றிராணியார்

# பொருளடக்கம்

# படங்கள்

# முகவுரை

1946ம் வருஷம் ஜூலை 28ம் தேதி, ஞாயிற்றுக்கிழமை, மலையாள நாட்டில் ஒரு சிறு கிராமத்திலுள்ள மடத்தில், சங். அல்போன்ஸாளின் ஆத்துமம், இம் மண்ணுலகை நீத்துத் தனது பரலோக பிதாவிடம் பறந்து சென்றது. அவளோடு வசித்துவந்த, அந்த மடத்திலுள்ள சகோதரிகளெல்லாம், ஒரு அர்ச்சியசிஷ்டவள் தங்கள் மத்தியிலிருந்தும் பிரிந்து விட்டாள் என்று ஏக்கங் கொண்டார்கள். அவளை நவசன்னியாசத்தில் விசாரித்து வந்த சங். ஊர்சுலாத் தாயாருக்கு அவளுடைய ஞானஜீவியத்தைப் பற்றி மற்றவர்களை விட நன்ருகத் தெரியும். அதனுல் அவளுடைய சரித்திர வரலாறுகளையும், ஞான அநுபவங்களையும் அவளுடைய வாய் மொழியாகவே எழுதிக் கொண்டால் உலகத்துக்குப் பெரிதும் பயன்படும் என்று தாயார் கருதினுர்கள். அதனுல் ஒருநாள், அவளுடைய மரணத்துக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு, அல்போன்ஸாளிடம் சென்று இதைப்பற்றி பேச ஆரம்பித்தார்கள். அதன் விபரத்தை சங். ஊர்சுலா தாயாரே கூறுவதாவது :

"அல்போன்ஸா அதிகப் பலவீனமாக இருந்தார்கள் ; அவர்களால் எழுதமுடியாது. ஆனுல் அவர்களுடைய ஜீவிய வரலாறுகளையும் ஞான அநுபவங்களையும் அவர்கள் சொன்னுல் எழுதிக்கொள்ளலாம் என்று யோசனை கூறினேன். அதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை. "தாயாரே, எனது ஜீவிய வரலாறுகளும், அநுபவங்களும் ஒன்றும் உங்களுக்குத் தேவை இல்லை. எழுதிக் கொள்ளத் தக்கவிஷயம் என் ஜீவியத்தில் என்ன இருக்கிறது? நான் பல சமயங்களிலும் எழுதிய குறிப்பு நோட்டுகளை இனி வைத்திருக்கக்கூடாது. அவைகளையெல்லாம் எடுத்துக் கிழித்துப் போட்டுவிடுங்கள்" என்று இரக்கத்தோடு கேட்டாள்.

"அவைகளை எடுத்து அங்கேதானே தனக்கு முன்பாகக் கிழித்துப் போடவேண்டும் என்று பிடிவாதமாகக்

கேட்டாள். அப்படிச் செய்வதற்கு எனக்குக் கொஞ்சமும் மனம் வரவில்லை. அதைப்பார்த்து அவள் அழத் துவக்கினுள். "தாயாரே, சீக்கிரம் உங்களை இன்னொரு மடத்துக்கு மாற்றி விடுவார்கள். நானே எழுந்திருக்க முடியாதபடி பாயும் படுக்கையுமாய்க் கிடக்கிறேன். மற்றவர்கள் வந்து என் பெட்டியைத்திறந்து பார்த்தால், அவைகளை வாசிக்க நேரிடும். என்னைப்பற்றி உலகில் ஒருவரும் அறியக்கூடாது. நான் என்ன, ஒரு புழுவுக்குச் சமமானவள்தானே! என்னைப்பற்றி யாரும் என் மரணத்துக்குப்பின் நினைப்பதற்கு என்ன முகாந்திரமிருக்கிறது? என்னிடத்தில் ஒரு சொற்பப் புண்ணியங்கூட கிடையாது. காற்று அடித்துக் கொண்டுபோகும் ஒரு தூசு என்று என்னை நினைத்துக் கொள்ளுங்கள். எழுதிக் கொள்ளக்கூடிய விசேஷ சம்பவம் என் ஜீவியத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் உங்களை மன்றுடியும் கேட்டுக்கொள்கிறேன், அந்த நோட்டுக்களை எடுத்துக் கிழித்துப் போடுங்கள்" என்றுள்.

"எனக்கு இன்னும் அவைகளைக் கிழித்துப்போட மனம் வரவில்லை. அதனுல் திரும்பவும் சொல்வாள்: "தாயாரே, நீங்கள் ஏன் இதைப்பற்றி இவ்வளவு கவலைப் படுகிறீர்கள்? சருவேசுரனுல் கூடாதது ஏதாவது அதில் எழுதியிருக்கிறதா? என்னிடத்தில் ஏதாவது புண்ணியமிருந்தால், அல்லது என் மரணத்துக்குப் பின் என் பெயர் பிரஸ்தாபப் படவேண்டுமென்று சருவேசுரனுக்குச் சித்தமானுல், இந்த நோட்டுகள் இல்லாமலே, அது நிறைவேறிவிடும். அதைப்பற்றி நீங்கள் சிரமப் படவும் வேண்டாம்; கவலை கொள்ளவும் வேண்டாம். எஜிப்து மரியம்மாளைப்பற்றி நாம் வாசிப்பதில்லையா? அவளை எவ்விதம் சருவேசுரன் உலகத்துக்குப் பகிரங்கப் படுத்தினுர்! அவள் தன்னந்தனியே ஒரு வனுந்தரத்தில் வசித்தவள். அவளைப்பற்றி அவள் உயிரோடிருக்கும் போது யாருக்குத்தெரியும்! அப்படியிருக்க என்னைப் பற்றி நீங்கள் ஏன் இவ்விதம் கவலைப்படுகிறீர்கள்."

"இந்த வார்த்தைகளைக்கேட்டு எனக்கு மனம் இளகினது. உடனே அவளுடைய குறிப்புக்களடங்கிய நோட்டுகளை எடுத்து அவளுக்கு முன்பாகவே கிழித்து எறிந்து

விட்டேன். அவளும் திருப்தியடைந்தாள். இப்போது அவளைப்பற்றித் தெரிந்ததெல்லாம், என் கைக்குத் தப்பிய சில குறிப்புக்களும், அவளையறிந்தவர்கள் கூறும் வாய் மொழியும், அவள் எழுதிய சில கடிதங்களுமே."

அல்போன்ஸா சகோதரி இறந்து இரண்டு வருஷங்கள்தான் ஆகியிருக்கின்றன. இருந்தாலும் அவளைப் பற்றி புத்தகரூபமாகவும், பத்திரிகைகளில் கட்டுரைகள் வாயிலாகவும் அதிகம் எழுதப்பட்டிருக்கின்றன. அவளுடைய சரித்திரத்தை சங். ரோமுலுஸ் சுவாமியவர்கள் மலையாளத்தில் எழுதியிருக்கிறார்கள். சுவாமியவர்கள் பர்ணஞான மடத்தில் ஆத்தும குருவானவராயிருந்தபடியால் அவர்களுக்கு அல்போன்ஸாளைப்பற்றி நன்றாகத் தெரியும். அல்போன்ஸாளைத் தெரிந்தவர்கள் மூலமாகவும் பல விஷயங்களை நேரில் கேட்டு அறிந்துகொள்ள அவர்களுக்குப் போதிய சந்தர்ப்பங்களுமுண்டு. அவர்கள் எழுதிய புஸ்தகத்தின் பெயர் : "சிநேகபலி, அல்லது அல்போன்ஸம்மா." இதை அடிப்படையாகக் கொண்டு திரு. சாக்கோ B. A., B. L., அவர்கள் ஆங்கிலத்தில் அல்போன்ஸாளின் சரித்திரம் ஒன்றை எழுதியிருக்கிறார்கள்.

இந்த இரண்டு புஸ்தகங்களையும் தழுவி எழுதப்பட்டது, தமிழில் வெளியாகும் இந்த அல்போன்ஸம்மாளின் சரித்திரம். தவிர, அல்போன்ஸம்மாள் மரணத்தின் இரண்டாவது ஆண்டு ஞாபக மலரிலிருந்தும் சிற்சில விஷயங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆகையால் இப்புஸ்தகங்களின் ஆசிரியர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். மேலும், மலையாளப் புஸ்தகத்தை வாசித்துப் பொருள்கூறி, எனக்கு உதவி செய்த சகோதரர் ஜார்ஜ் மனலேல் அவர்களுக்கும், கையெழுத்துப் பிரதியைப் பார்வையிட்டு அரிய ஆலோசனைகள் கூறிய சங். முத்துமாலை சே. ச. சுவாமியவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி. தே நொபிலி அச்சகத்தார் இதை தங்கள் அச்சுவேலைகளில் ஒன்றாகக் கருதாமல், ஒரு அன்பின் கைங்கரியமாகக் கொண்டு செய்துள்ளார்கள் என்பது நோக்கத்தக்கது. அச்சக மனேஜர் சே. ச. சங். பாவர் சுவாமியவர்களே நேரில் பர்ணஞானம், அல்போன்ஸா பிறந்த ஊர், முதலிய

இடங்களுக்குச் சென்று போட்டோக்கள் எடுத்துக் கொண்டுவந்து, இப்புத்தகத்தில் காணும் படங்களைத் தயாரித்திருக்கிறார்கள். அவர்களுக்கும் எனது நன்றி.

இந்தியாவில் ஆதிமுதல் கிறீஸ்தவர்கள் இருந்து வரும் நாடு, மலையாளம் என வழங்கும், கேரள நாடு. சேசுநாதர் பரலோகத்துக்கு எழுந்தருளிப் போனபின் சில வருஷங்களுக்குள் அர்ச். தோமையார் அங்கு வந்து வேதம் போதித்தார் என்று சொல்லப்படுகிறது. அல் போன்ஸாளின் பிறப்பிடமாகிய குடமலூரில் கி. பி. மூன்றும் நூற்றாண்டு முதல் கிறீஸ்தவர்கள் வாழ்ந்து வரு கிறார்கள். அல்போன்ஸாள் பிறந்த முட்டத்துப் பாடத்தி என்ற குடும்பமும் அங்குள்ள ஆதிக் கிறீஸ்தவக் குடும்பங் களுள் ஒன்று. ஆகையால் அவளுடைய முன்னோர் அர்ச். தோமையார் காலந்தொட்டு கிறீஸ்தவர்களாயிருந்தது வருகிறார்கள் என்று எண்ண இட முண்டல்லவா! இவ் விதம் தொன்றுதொட்டு கிறீஸ்தவப் பழமையைக் கொண்ட ஒரு நாட்டில், கிறீஸ்தவ ஒழுக்கத்தின் உயர்ந்த புண்ணியங்களோடு விளங்கும் முதல் புனித ஆத்துமா தோன்றியிருக்கிறது என்றால், அது மிகவும் பொருத்த மானதல்லவா?

நம் நாட்டு மலர்களுள் சிறந்ததாகக் கூறப்படுவது கமலப்பூ. "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்பர். "அல்போன்ஸாளைப்போல, சருவேசுரன் முன்பாக பரி சுத்ததனத்தில் உயர்ந்து நிற்கும் வேறொரு ஆத்துமம், நமது நாட்டில், இந்த இரண்டாயிரம் வருஷங்களாக தோன்றியதில்லை என்று துணிவுடன் கூறுவேன்" என்று சங். ரோமுலூஸ் சுவாமியார் கூறுகிறார்கள். ஆகையால் இந்நாட்டுக் கிறீஸ்தவர்களுள் சிறந்த இப்புனிதையை, "கேரள நாட்டின் கமலம்" என்று அழைப்பது நியாயமே. இதுவே இப்புத்தகத்தின் பெயருக்கும் காரணம்.

S. P.

# அறிக்கை

ஞானதிகாரிகளின் அநுமதியோடு பிரசுரிக்கப்படும் இப்புத்தகத்தில், சங். அல்போன்ஸா சகோதரியின் ஜீவிய வாலாறுகளில், தேவ அருளால் அவளுக்குண் டான பல ஞான வரங்களைப்பற்றி குறிப்பிடுகிறேன். ஆனல் இவ்விஷயத்தில் சர்வ அதிகாரமும் திருச் சபைக்கே உரியதென்றும், சகலத்திலும் பரி. பிதா எட்டா வது ஊர்பான் பாப்பானவருடைய சட்டத்துக்கு முற்றி லும் அமைந்திருக்கிறேனென்றும், இதனல் அறிவித்துக் கொள்கிறேன்.

ஆசிரியர்



கோட்டயத்துக்கு மேற்கேயுள்ள வேம்பநாட்டுக்காயல். பர்ணஞானந்துக்குப் போகும் வழியிலுள்ளது.
இருபுறமும் மனோகரமான இயற்கைக் காட்சிகள்.

# முதல் அதிகாரம்

ஞான ஜீவியத்தில் ஒரு "சிறு வழியை"க் காட்டியவள் அர்ச். குழந்தை தெரசம்மாள். அவள் காட்டிய இந்தச் சிறு வழியைக் கைக்கொண்டு, அர்ச்சியசிஷ்டதனத்தின் சிகரத்துக்கு ஏறிச்சென்ற ஆத்துமாக்கள் அநேகம். இவர்களில் சிலருடைய ஜீவிய வரலாறுகள் தான் நமக்குத் தெரியும். ஏனெனில், அவர்களை முன் மாதிரியாகவும், தூண்டுதலாகவும் கொண்டு, நாமும் பரிசுத்த தனத்தில் முன்னேற வேண்டுமென்பது சருவேசுரனுடைய சித்தம். இந்தப் பரிசுத்த ஆத்துமாக்களில், சகோதரி அல்போன்ஸாளும் ஒன்று என்று கூறலாம்.

திருவிதாங்கூர் சமஸ்தானத்தில், அப்போஸ்தலர்கள் காலந்தொட்டு, கிறீஸ்தவர்கள் இருந்து வருகிறார்கள் என்று அநேகருக்குத் தெரியாமலிருக்கலாம். தொன்று தொட்டு கிறீஸ்தவக் கொள்கைகள் வழங்கிவரும் இந் நாட்டில், சங்கனாச்சேரி மேற்றிராசனத்தைச் சார்ந்த, பர்ணஞானம் என்ற ஒரு கிராமத்திலேயே அல்போன்ஸாளின் மகிமை வெளிப்படவேண்டுமென்று சருவேசுரன் சித்தங் கொண்டார். இவ்வூர் திருவிதாங்கூர் சமஸ்தானத்தின் தலைநகராகிய திருவனந்தபுரத்திலிருந்து 120 மைல் தூரத்திலுள்ளது. இவ்வூரின் விசேஷம் அங்குள்ள கத்தோலிக்கத் தேவாலயமும், அதையடுத்துள்ள மடமும் பாடசாலைகளுமாம். இப்போது நடைபெறும் பெரும் யாத்திரைக்குக் குறிக்கோளாயிருப்பது அங்குள்ள மடமும், அதையடுத்த கல்லறையும்.

அல்போன்ஸா சகோதரி மரணமானது 1946-ம் வருஷம் ஜூலை மாதம் 28-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை. அன்று துவக்கி அவளைப்பற்றிய பிரஸ்தாபமும், அவள் வசித்து

வந்த இடத்துக்கு யாத்திரைகளும் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. தினந்தோறும் அவளுடைய கல்லறையைச் சுற்றி நின்று ஜெபித்துக்கொண்டிருக்கும் ஜனக் கூட்டத்தைப் பார்த்தால், உண்மையாகவே சருவேசுரனுடைய விசேஷ கடாக்ஷத்துக்குப் பாத்திரமான ஒரு பரிசுத்தவதி இங்கே இருக்கிருள் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். மரணம் அல்போன்ஸாளை வெல்லவில்லை; சாவு அவளுடைய பிரதாபத்தைக் குறைக்கவில்லை. அங்குவரும் ஜனங்களும் "மரணமே, உன்வெற்றி எங்கே? சாவே, உன் கொடுக்கு எங்கே?" என்று சொல்லி, அர்ச். சின்னப்பர் அடைந்திருந்த மன ஆக்கத்தை அடைகிருர்கள் என்ருல் பொய்யாகாது.

அல்போன்ஸாளின் பிறப்பிடம் சங்கனச்சேரி மேற்றிராசனத்திலுள்ள குடமலூர். இது நாட்டின் தலைநகராக ஒரு காலத்தில் விளங்கிவந்தது என்று பாரம்பரையாகச் சொல்லப்படுகிறது. கிறீஸ்தவர்களுடைய இராஜ விசுவாசத்தைக் கண்டு, செம்பகசேரி என்ற அரசன் அவர்களை இவ்வூரில் குடியேற அநுமதித்தானும். கிறீஸ்தவர்கள் இங்கு குடியேறியது கி.பி. மூன்ரும் நூற்ருண்டு என்கிருர்கள். இவர்களுடைய வேதவிசுவாசமும், நாகரீகமும் எங்கும் பிரசித்தி பெற்றது. இவர்களில் முட்டத்துப்பாடத்து என்று ஒரு குடும்பம்: இந்தக் குடும்பந்தான் அல்போன்ஸா தோன்றுவதற்குப் பாக்கியம் பெற்ற குடும்பம். சங். ஜோசப் முட்டத்துப்பாடத்து, சங். பிலிப்பு ஆண்டுமாலில் என்ற சுவாமிமாரும், காலஞ்சென்ற பொனிபாஸ், எம்மானுவேல் என்ற கர்மேல் சபைக் குருக்களும் நம் சகோதரிக்கு நெருங்கிய உறவினர்.

அல்போன்ஸாளின் பெற்ருேர் ஜோசப், மேரி என்பவர்கள். அவர்களுக்குப் பிறந்தது நாலு குழந்தைகள். ஒரு பையன் இளமையிலேயே இறந்து போனுன். மற்ற மூன்றும் பெண்கள்; கடைசிப் பெண்தான் அல்போன்ஸா.

அவளுடைய மூத்த சகோதரிகள் இருவரும் குடமளூரில் வசித்துவருகிறார்கள். சங். ஜோசப் முட்டத்துப்பாடத்து சுவாமியார் அல்போன்ஸாளின் தகப்பன் வழிப்பாட்டன். அவளுடைய கல்வி விஷயமாகக் கவனித்துவந்தவர். கடைசிவரை அவளுக்கு ஆதரவாயிருந்தவரும் அவரே. அல்போன்ஸா மரணமாகும்போது அவருக்கு வயது 80. பிறந்த சில நாட்களிலேயே, தாயில்லாப் பிள்ளையாய்ப் போன அல்போன்ஸாளை வளர்த்துவந்த அவளுடைய பெரிய தாயாருக்கு நாலு ஆண்கள். அவர்களெல்லாரும் இப்போது நல்ல ஸ்திதியிலிருக்கிறார்கள்: மத்தேயு B.A., B.L., லூக்கா, ஜார்ஜ் M.A., B.L., ஜோசப். இந்த நாலு ஆண்குழந்தைகளின் மத்தியில், தனது ஒரே பெண்ணாகப் பாவித்து பெரியதாயார் அல்போன்ஸாளைச் செல்லமாக வளர்த்தது ஆச்சரியமில்லை.

அல்போன்ஸாளுடைய ஜீவியத்தின் பிரதான அம்சம் வியாதி துன்பங்களை அநுபவிப்பதற்கு அவளுக்குள்ள ஆசையும், அர்ச். குழந்தை தெரசம்மாளுக்கு இருந்ததுபோன்ற எதார்த்த குணமும். பின் காலத்தில், "ஆண்டவரே, எனக்கு இன்னும் அதிகத் துன்ப துரிதங்களை அனுப்பியருளும்" என்று மன்றாடிய இவள், இளமையிலேயே துன்ப துயரங்களால் சூழப்பட்டிருந்தாளென்று சொல்லலாம்.

அல்போன்ஸா தாயின் கர்ப்பத்திலிருக்கும்போது, ஒருநாள் அவளுடைய பெரியதாயார் தன் சகோதரியின் வீட்டுக்கு வந்திருந்தாள். உஷ்ண காலமாயிருந்ததால், இரவில் இரு சகோதரிகளும் முற்றத்தில் பாய்விரித்துப் படுத்து, பேசிக் கொண்டிருந்தார்கள். கடைசியாக, அங்கேயே தூங்கிவிட்டார்கள். திடீரென்று அல்போன்ஸாளின் தாய், மேரி, திடுக்கிட்டு எழுந்து கூச்சல் போட்டாள். பெரிய பாம்பு ஒன்று அவளுடைய கழுத்தைச் சுற்றிக் கொண்டிருந்தது. பயத்தில் அவளே பாம்பை எடுத்து உதறிவிட்டாள். நல்லவேளை, கடி ஒன்றுமில்லை.

ஆனல் பூரண கர்ப்பிணியான அவளுக் குண்டான அதிர்ச்சியின் விளைவாக, மாதம் எட்டேதான் ஆகியிருந் தாலும், குழந்தை பிரசவமானது. அல்போன்ஸா பிறந்த நாள் 19, ஆகஸ்டு 1910. சில நாட்களுக்குள் தாயும் பர லோக பிராப்தியானுள்.

குழந்தைக்கு அன்னுள் என்று பெயரிட்டார்கள். அல்போன்ஸா என்பது அவள் கன்னியர் வஸ்திரம் தரித்தபோது தெரிந்துகொண்ட பெயர். அவளுடைய தாயார் தனது மரணத்துக்கு முன்பு, தன் சகோதரி அன்னம்மாளிடம் குழந்தையை ஒப்படைத்து, அவளைக் கவனித்துக் கொள்ளும்படி கேட்டுக்கொண்டாள். ஆகை யால் நம் சகோதரி, தன் பெரிய தாயாரையே தாயாக மதித்து, அவளையே "அம்மா" என்று அழைத்து வந் தாள். அன்னம்மாளும் தன் சகோதரியின் மகளைத் தான் பெற்ற குழந்தையாகக் கருதி, "அன்னக்குட்டி" என்று செல்லப் பெயரிட்டு வளர்த்து வந்தாள்.

நாலு வயது நடக்கும்போதே அன்னுள் வியாதியின் கொடுமையை அநுபவிக்க நேர்ந்தது. பலதடவை கரப் பான் வியாதிகண்டு வருந்தினுள். ஒரு சமயம் உயிருக்கே ஆபத்து வந்துவிடும் போலிருந்தது. ஆனல், இன்னும் எத்தனையோ கொடிய வியாதிகளையெல்லாம் அவள் அநுபவிக்க வேண்டுமென்பது தேவ சித்தமல்லவா!

அவள் படிக்கச் சென்ற முதல் பாடசாலை ஆர்ப்புக் கரையிலுள்ள கத்தோலிக்கப் பள்ளிக்கூடம். பிறகு முட்டுச்சிறையிலுள்ள சர்க்கார் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பப்பட்டாள். சனிக்கிழமைதோறும் அவளுக்குப் பாவசங்கீர்த்தன தினம்; தபசு காலத்தில் வெள்ளிக் கிழமை. பாவசங்கீர்த்தனம் செய்து நற்கருணை உட் கொண்ட நாட்களில் அவள் முகத்தில் ஒரு தனி சோபை யும் இனிமையும் துலங்கும் என்று அவளுடன் பள்ளித் தோழியாயிருந்த சகோதரி கபிரியேல் கூறுகிறுர்கள்.



ஆற்றுமார்க்கமாக பர்ணஞானந்திலிருந்து, அல்போன்ஸாளின் பிறப்பிடமாகிய குடமலூருக்குப் போகும் வழியில் இவ்வித இரமணியமான இயற்கைக் காக்ஷிகளைக் காணலாம்



அல்போன்ஸா சகோதரியின் பிறப்பிடமாகிய குடமளூருக்குப் போகும் படகு.
பர்ணஞானத்திலிருந்து சுமார் இரண்டு பர்லாங்கு தூரம் ஆற்று மார்க்கமாகச் செல்லவேண்டும்

சகோதரி கபிரியேலுக்கும் அல்போன்ஸாளுக்கும் நெருங்கிய சிநேகமுண்டு. இருவரும் கீழ்வகுப்புக்களிலிருந்து பள்ளிக்கூடப்படிப்பு முடியும்வரை ஒன்ருகவே படித்தார்கள். இரண்டுபேரும் ஒரே நாளில் மடத்திலும் சேர்ந்தார்கள். அல்போன்ஸா தனது வியாதி, கஷ்டங்களை ஒருவருக்கும் தெரியாமல் அநுபவிக்கவேண்டும் என்று ஆசிப்பாள். ஆனால் சகோதரி கபிரியேல் எப்படியாவது அதை அறிந்துகொண்டு, அவளுக்கு சிசுருஷை செய்யத் தவறுவதில்லை. இதை அல்போன்ஸா தான் எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிடுகிருள். துறவற ஜீவியத்திலும் இருவருக்கும் பரஸ்பர அன்பு உண்டு என்பது அல்போன்ஸாளின் மரணத்துக்குமுன் நடந்த ஒரு சம்பவத்தால் விளங்கும்.

பெரியதாயார் எல்லா விஷயங்களிலும் தன் அன்னக்குட்டியை உருக்கத்தோடு கண்காணித்து வந்தாள்: வீட்டில் மட்டுமல்ல, பள்ளிக்கூடப்படிப்பிலும், கோவில் பக்தி முயற்சிகளிலும் அவளை சிரத்தையோடு கவனித்து வந்தாள். அவள் மிகுந்த பட்சம் காட்டினுலும், கண்டிப்பதற்கும் தவறுவதில்லை.

கண்டிப்பாகத் தன்னை வளர்த்து வந்ததின் பலன் என்னவென்று, அல்போன்ஸா சகோதரியே கூறுகிருள். "சிறு குற்றத்துக்கும் அம்மா என்னை ரொம்பக் கோபிப்பாள். அவள் கோபிக்கும்போது நான் வாய்திறக்கக் கூடாது. அப்படிப் பேசாமல் எல்லாவற்றையும் சகித்துக்கொண்டிருந்தபடியால் தான், இப்போது யார் என்ன சொன்னுலும், அதற்கு வேடிக்கையாகக்கூட பதில் சொல்ல என்னுல் முடிகிறதில்லை. வீட்டில் நான் சுயாதீனமாக நடமாட முடியாது. பேசும்போது, மெல்ல தாழ்ந்த குரலில்தான் பேசவேண்டும். என்னுடைய நடமாட்டமெல்லாம் அடிக்கடி சமயலறைக்குப் போவதும் வருவதுந்தான். வீட்டுக்கு வெளியே எனக்கு ஒன்றும் தெரியாது. குறிப்பிட்ட இரண்டொருவரைத் தவிர,

வேறு ஒருவரோடும் பள்ளிக்கூடத்தில் பேசக் கூடாது; பள்ளிக்கூடத்துக்குப் போகும்போதும், வழியில் அங்கு மிங்கும் திரும்பிப் பார்க்கக்கூடாது. நானும் ஒருவரிட மும் பேசமாட்டேன். பிள்ளைகள் என்னை "ஊமச்சி" என்று பட்டப்பெயர் சொல்லிக் கூப்பிடுவார்கள். அம்மா என்மேல் அடிக்கடி எரிச்சல்படுவாள். இது எனக்கு ரொம்ப மனவேதனையாயிருக்கும். அவளைப் பார்த்தால் போதும், நான் நடுங்கி விடுவேன். என் பெற்றதாயை இழந்துபோனதால்தான் நான் அவ்விதம் நடுங்கினேனோ, என்னமோ! அவள் என்னைக் கோபிக்கும்போது, நான் குற்றவாளியல்ல என்று சொல்லும்படி வாயெடுத்தால் கூட, அதிகமாகச் சீறிவிழுவாள். நான் பேசாமல் மௌனமாயிருந்தாலும், பிடிவாதக்காரி என்று திட்டு வாள். 'வாயில் என்ன கிடக்கிறது, நான் சொல்வதற் கெல்லாம் பதில் சொல்லாமல் நிற்கிறாயே' என்பாள். நான் ஏதாவது சொல்ல வாய் திறந்தாலோ, 'என்னை எதிர்த்துப் பேசவும் துணிந்து விட்டாயா?' என்று கர்ச்சிப்பாள்.

"ஆனால், கண்டிப்பதுபோல, அம்மா மிகுந்த பக்ஷ மும் காட்டுவாள். அவள் வீட்டு வேலைகளையெல்லாம் முடித்த பிறகு, வீட்டில் செங்கல் பாவின தரையைப் பெருக்கிவிட்டு, அதில் படுத்திருப்பது வழக்கம். அப் போது கோபமொன்றும் இராது. என்னைத் தன் பக்கத் தில் அழைத்து, இரண்டு கைகளாலும் அணைத்துக் கொண்டு பலதடவை முத்திசெய்வாள். அவளுடைய முத்தங்களினாலும், அரவணைப்பாலும் என் வருத்தங்க ளெல்லாம் காற்றாய்ப் பறந்துபோகும். பிறகு வேலை ஏதாவது இருந்தால் எழுந்து போய்விடுவாள். திரும்ப வும் பழய கதை ஆரம்பித்துவிடும்; எனக்குப் பயமும் நடுக்கமுந்தான். 'பெருத்த சோம்பேறி; அவளுக்கு என்ன சொல்லித்தான் என்ன; என்னுடைய குணத்தில் கொஞ்ச மாவது அவளுக்கு வருமா' என்று அடிக்கடி முணு முணுத்துக் கொள்வாள்.

"என்ன கோபப்பட்டாலும், என்மீது அவளுக்கு மிகுந்த அன்பு உண்டு என்று எனக்குத்தெரியும். எனது சாப்பாட்டு விஷயத்தைப்பற்றி ரொம்பக் கவனிப்பாள். சாப்பாட்டுக்கு இடையில் பெற்றோர் குழந்தைகளுக்கு ஏதாவது தின்பண்டங்கள் கொடுப்பார்களே, எனக்கு அப்படி ஒன்றும் கிடையாது. சாப்பாட்டு வேளையிலும் சுருக்கமாகத்தான் சாப்பிடவேண்டும். எனக்குப் பழமென்றால் ரொம்பப் பிரியம். ஆனால், பழம், எண்ணெய்ப் பலகாரங்கள் எல்லாம் குழந்தைகளுக்கு ஆகாது என்பது அவளுடைய அபிப்பிராயம்.

"ஒரு நாள், நானும் அண்ணன்மாரும் அம்மாவுக்குத் தெரியாமல் பப்பாளிப்பழம் பறித்துத் தின்றுகொண்டிருந்தோம். இதைப் பார்த்ததுதான், அம்மாவுக்குக் கோபம் பொங்கிக்கொண்டுவந்தது. அண்ணன்மாரைப் பிடித்து நன்றாக அடித்தாள். என்னை அடிக்கவில்லை; ஆனால் கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளிவிட்டாள். நானும், திரும்பவும் அவள் என்னைக் கூப்பிடுவதுவரையில், வீட்டுக்குள் நுழைவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டேன். ஆகையால் ஒரு தென்னம் ஓலையை எடுத்துப்போட்டு அதன்மேல் உட்கார்ந்திருந்தேன். மத்தியானம்வரை அவ்விடத்தைவிட்டு அசையவில்லை. அதற்குப் பிறகு அம்மா வந்து என்னைக் கூட்டிக்கொண்டு போய் சோறு தந்தாள்."

எதுவிஷயத்திலும் அல்போன்ஸா எச்சரிக்கையாகவே நடந்துகொள்ள வேண்டும். எப்போதும் அடக்க வொடுக்கமா யிருக்கவேண்டுமென்று பெரியம்மா அவளுக்கு அடிக்கடி போதிப்பாள்.

இவ்விதம் பெரியதாயார் அன்னக்குட்டியைக் கண்டிப்பாக நடத்தினாலும், அவள்மீது எல்லையற்ற வாஞ்சை கொண்டிருந்தாள் என்பதற்கும் சந்தேகமில்லை. குழந்தையைப்பற்றிய ஒரு தனி மதிப்பும் பெருமையும்

அவளுக்கு உண்டு. எப்போதும் விலை உயர்ந்த நல்ல உடுப்புகளும் ஆபரணங்களுமே அவளுக்கு வாங்கிக் கொடுப்பாள். “அம்மா என்னை நன்றாக உடுத்தி கோவிலுக்குக் கூட்டிக்கொண்டு போவாள். நல்ல பட்டுத் துணியில், வெள்ளி, தங்கச் சரிகைகளும், லேஸ்களும் வைத்துத் தைத்த உடுப்புகளையே நான் சாதாரணமாய் அணிந்திருப்பேன். சுற்றுப்பக்கத்தில், இதுவரை எந்தக் குழந்தையும் போட்டிராத மாதிரி, எனக்கு உடுப்புத் தைத்துக் கொடுப்பதில் அம்மாவுக்கு அதிக விருப்பம். கோவிலில் யாராவது புதுமாதிரி உடுப்புப் போட்டிருந்தால், வீட்டுக்கு வந்ததும், இன்னார் இன்னமாதிரி உடுப்புப் போட்டிருக்கப் பார்த்தேன்; என் அன்னக்குட்டிக்கும் அது மாதிரி உடுப்புத் தைத்துப்போட்டால், எவ்வளவு அழகாயிருக்கும் என்பாள். எனது அண்ணன்மார் திருவனந்தபுரம் அல்லது கோட்டயத்துக்குப் போகும்போது எனக்கு நல்ல உடுப்புக்கள் வாங்கி வரவேண்டுமென்று இவ்விதம் சொல்வதுமுண்டு. அவர்கள் ஒன்றும் வாங்கிக்கொண்டு வராவிட்டால், ‘என்னமாதிரி அண்ணன்மார் நீங்கள்!’ என்று கோபித்துவிட்டு, ‘நான் இறந்துபோனால், என் பிள்ளையை இப்படித்தான் கவனித்துக் கொள்வீர்களோ’ என்று அவர்களைப் பரிகாசமும் செய்வாள்.

“நான் பள்ளிக்கூடத்துக்குப் போகும்போது, விலை உயர்ந்த ஆடையாபரணங்களை அணிந்துகொண்டு போக வேண்டுமென்று கட்டாயப்படுத்துவாள். பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் என்னைப்பார்த்து, “புதுப்பெண்” “கலியாணப்பெண்” என்றெல்லாம் சொல்லிச் சிரிப்பார்கள். நான் சில சமயங்களில் அம்மாவுக்குத் தெரியாமல், சாதாரண உடுப்புக்களைப் போட்டுக்கொள்வேன். நான் இங்கு (பர்ணஞானத்துக்கு) வந்த பிறகு, சகோதரிகள் என்னைப் பார்த்து, “இந்தப் பகட்டான உடுப்புக்களெல்லாம் கன்னியாஸ்திரியாகப் போகிறவளுக்கு உதவாது”, என்றார்கள். அதனால், ஒரு நாள் ஒரு சாதாரண வெள்ளைத்

தாவணி ஒன்றை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப்போனேன். அதைக்கண்டதும் அம்மாவுக்கு வந்த கோபத்தைப் பார்க்கவேண்டுமே!"

அன்னக்குட்டியின் ஆடையாபரணங்களைப்பற்றி அவளுடைய அம்மா இவ்வளவு சிரத்தை காட்டினாலும், தற்கால நவநாகரீக உடுப்புக்களை அவள் ஒருபோதும் விரும்பியதில்லை. அவளுக்கு ஒரே ஒரு ஆசைதான்: அன்னக்குட்டி வளர்ந்து வயதானபின், கலியாணம் செய்துகொண்டு, தன்னைப்போல பிள்ளைகுட்டிகளோடு ஒரு பெரிய மனுஷியாக வாழ்ந்துவரவேண்டும் என்பதே. அதனால் அவளுடைய சுகத்தைக்கூட பெரிதாகக் கருதாமல், வீட்டுவேலைகளில் அவளைப் பழக்கிவந்தாள். குழந்தை நல்லொழுக்கமுள்ளவளாக வளர்ந்து வருவதைக்காண அவளுக்கு மிகுந்த சந்தோஷம்.

வீட்டில் மற்றவர்கள், அல்லது வேலைக்காரர், குற்றம் செய்தால் அவர்களுக்காகத் தன் அம்மாவிடம் நம் சகோதரி பரிந்து பேசுவாள். சில சமயம் அவர்கள் செய்த குற்றத்தைத் தானே செய்ததாக ஏற்றுக்கொள்வதுமுண்டு. பின் காலத்தில் பிறருக்காகவும் தன் வியாதி துன்பங்களால் பரிகாரம் செய்யவேண்டுமென்றிருந்த அந்தப் பேராவல், இப்பொழுதே ஆரம்பித்திருந்தது. அதைப்பற்றி அவளே குறிப்பிடுவதாவது: "என்னுடைய இளம் பிராயத்தில், இப்போது இருப்பதைவிட, ஞான ஜீவியத்தில் அதிகமாக விருத்தியடைந்து வந்தேன். அப்போது, ஆஹா, சருவேசுரனை எவ்வளவு வாஞ்சையோடு சிநேகித்தேன்! அவருக்கு விரோதமாக ஒரு குற்றமும் செய்யக்கூடாது என்பது எனது பேராவல். நான் புதுநன்மைக்கு ஆயத்தம் செய்தபோது, பாவசங்கீர்த்தனத்தில் சொல்லுவதற்கு என்னிடம் விசேஷ குற்றம் ஒன்றும் இருக்கவில்லை. ஒரு அர்ச்சியசிஷ்டவளாகவேண்டும் என்ற ஆசை அதிகம். அர்ச். குழந்தை தெரசம்மாளின் சரித்திரத்தை வாசித்துக் கொண்டிருக்

கும்போது, இந்த ஆசை பிறந்தது. கர்மேல் மடத்தில் எனக்குப் பந்துவான ஒரு சகோதரி இருந்தார்கள்; அவர்கள் அடிக்கடி என்னிடம், "மகளே, நீ ஒரு அர்ச்சிய சிஷ்டவளாகவேண்டும்" என்று சொல்வதுண்டு. அவர்களுடைய வார்த்தைகளால் எனது ஆசை அதிகரித்தது. இப்போது நான் ஜெபிப்பதைவிட, அக்காலத்தில் எவ்வளவோ அதிக உருக்கத்துடன் ஜெபித்துவந்தேன். எனக்குப் பசிக்கவில்லை என்று சாக்குவைத்துக்கொண்டு ஒருசந்தி பிடிப்பதும் உண்டு. சாப்பாட்டு நேரம் வரும்போது எனக்கு வருத்தமாயிருக்கும். அம்மாவும் என்னோடு சாப்பிட உட்கார்ந்துவிடுவாள். அவள்கூட இருக்கும்போது, ஒறுத்தலுக்காகக் கொஞ்சம் சாப்பாட்டைக் குறைக்கவோ, அல்லது உபவாசமாயிருக்கவோ முடியாது. அதனால் சில சமயம் நான் தந்திரம் பண்ணுவதுமுண்டு: காலையில் என்னைச் சாப்பிடக் கூப்பிடும்போது, நான் வீட்டுப்பாடம் எழுதுவதாகப் பாசாங்கு செய்துகொண்டிருந்துவிட்டு, அம்மா சாப்பிட்ட பிறகு போவேன். உபவாசமிருக்கும் நாட்களில் நான் மீன், மோர் இவைகளைச் சேர்த்துக் கொள்வதில்லை. இவைகளை விலக்கிவைத்து அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு, அவைகளை வேலைக்காரருக்குக் கொண்டு கொடுப்பேன். இந்த ஒறுத்தல் முயற்சிகளையெல்லாம், ஒருவரும் அறியாதபடி, பரிசுத்த தேவதாய்க்கு ஒப்புக்கொடுக்க வேண்டுமென்பது எனது ஆசை.

அல்போன்ஸா கன்னியாஸ்திரியாயிருந்த காலத்தைவிட, சிறு பிராயத்தில், தான் சருவேசுரனுக்கு அதிக உகந்தவளாக இருந்ததாகக் கூறுவது தாழ்ச்சியினால் என்று யாருக்குத்தான் தெரியாது! இருந்தாலும் இளம் வயதிலேயே அவள் எவ்வளவு மேலான பரிசுத்ததனத்தை அடைந்திருந்தாளென்று இதனால் விளங்குகிறது.



அல்போன்ஸா சகோதரி பிறந்து வளர்ந்துவந்த கூரை வீடு. இப்போது இந்த வீட்டில் அவளுடைய மூத்த சகோதரி தன் குடும்பத்தோடு வசித்துவருகிருள். படத்தில் அந்த சகோதரியும் சகோதரியின் மகளும் காணப்படுகிருர்கள்.



குடமளூரில் படகில் நின்றும் இறங்கும் துறை. அல்போன்ஸாள் பிறந்த விடு இதிலிருந்தும் நூறு கஜ தூரத்திலுள்ளது

# இரண்டாம் அதிகாரம்

அர்ச். குழந்தை தெரசம்மாளின் சரித்திரத்தை வாசித்ததிலிருந்து, நம் சகோதரிக்குத் தானும் ஒரு அர்ச்சியசிஷ்டவளாகவேண்டும் என்ற ஆசை அதிகரித்தது. அதற்காக அவள் செய்த ஒறுத்தல்களும் ஜெபங்களும் அநந்தம். ஒரு நாள் அவள் உலாத்திக்கொண்டிருந்தபோது, ஒரு கார்மேல் சபைக் கன்னியாஸ்திரி அவளிடம் வந்து, துறவற ஜீவியத்தின் உயர்வைப்பற்றி வெகுவாய்ப் புகழ்ந்தபின், "நீயும் ஒரு கன்னியாஸ்திரியாகப் பிரயாசைப்படு" என்ருள். இவ்விதம் ஒரு கார்மேல் சகோதரி தனியே வந்ததைப்பற்றி அப்போது அல்போன்ஸா ஒன்றும் நினைக்கவில்லை. பின்காலத்தில் அதைப்பற்றி நினைக்க நினைக்க அவளுக்கு ஆச்சரியமுண்டானது. கார்மேல் மடத்துக் கன்னியர் தனியே ஒருபோதும் வெளியே வரமுடியாது. அப்படியானல் தன்னிடம் வந்தது யாராயிருக்கலாம்! ஒருவேளை அர்ச். குழந்தை தெரஸ்தான் அப்படி வந்தாளோ என்று எண்ணி ஆச்சரியப்பட்டாள்.

இதிலிருந்து தான் ஒரு கன்னியர் மடத்தில் சேர்ந்து, உலகத்துக்கு மறைந்து ஜீவித்தால்தான், பரிசுத்த தனத்தில் அதிகம் வளரமுடியும் என்று அல்போன்ஸா மனதில் பட்டது. ஆனல் அம்மா தனது பிரிய அன்னக்குட்டிக்கு கலியாணம் முடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தாள். அவளுடைய விருப்பத்துக்கு மாருக கன்னியர் மடத்துக்குப் போவதெப்படி? அவளோ தன்னைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்த அம்மா. அவளுடைய விருப்பத்துக்கு மாருகப் போகவேண்டுமே என்ற பயம் அன்னக்குட்டியின் மனதை வாட்டியது. அவள்

செய்யக்கூடியதெல்லாம் ஜெபம் ஒன்றுதான். வீட்டில் ஸ்தாபித்திருந்த திரு இருதயப் படத்துக்கு முன்பாக, இரவும் பகலும் பலதடவை முழந்தாளில் நின்று ஜெபித்தாள். எப்படியும் சேசுவின் திரு இருதயம் தனது பெரியம்மாளின் மனதை மாற்றி, தான் கன்னியர் மடத்தில் சேர்வதற்கு உதவிசெய்வார் என்ற பூரண நம்பிக்கையை விடவில்லை. பரிசுத்த தேவதாய்க்குத் தன்னை முழுவதும் ஒப்புக்கொடுத்து, கலியாணம் செய்துகொள்வதைவிட மரணத்துக்குத் தயாராயிருக்கிறேன் என்று தீர்மானித்துக் கொண்டாள். அர்ச்சியசிஷ்டவர்களின் மன்றாட்டுக்களை சருவேசுரன் கேட்டதுபோல, தனது பிரார்த்தனையையும் கேட்டருளவேண்டுமென்று, சிறு கற்களைப்பரப்பி அவற்றின்மேல் முழந்தாளிலிருப்பாள்; உபவாசம் அநுசரிப்பாள்; கைவிரித்து வெகுநேரம் வேண்டிக்கொள்வாள். இதைப்பார்த்து மற்றப் பிள்ளைகளெல்லாம் சிரிப்பார்கள். அதையும் ஒரு ஒறுத்தல் முயற்சியாகக்கொண்டு, தன் மன்றாட்டு அநுகூலமாக வேண்டுமென்று ஒப்புக்கொடுப்பாள்.

ஆனால், எல்லாம் அவள் விருப்பத்துக்கு மாறுகவே நடந்தன. கலியாணப்பேச்சு அதிகமாயிற்று. இன்னார் தான் மாப்பிள்ளை என்றும் பேசிக்கொண்டார்கள். இனி பேசாமலிருப்பது சரியல்ல, கட்டாயம் தனது மனதிலிருப்பதைச் சொல்லியாகவேண்டும், தாமதிப்பது ஆபத்து என்று தெரிந்தது. ஒரு நாள் மனதை நன்றுகத் தைரியப்படுத்திக்கொண்டு, தன் பெரியப்பாவிடம்போய், ரொம்பவும் விநயத்தோடு, "நமதாண்டவருடைய ஐந்து திருக்காயங்களைக்குறித்து நான் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்: என்னைமட்டும் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தாதீர்கள்" என்று மன்றுடினள். இப்படி மன்றாடிக் கொண்டிருக்கும்போதே உணர்ச்சி வேகத்தில் அவளுக்கு மயக்கம் வந்துவிட்டது. பெரியப்பாவின் மனம் இரங்கினது. "உன் விருப்பப்படியே செய்" என்று தேற்றினர். ஆனல் பெரியம்மா

வின் மனம் இரங்கவில்லை. "நீ மடத்துக்குப்போக நான் ஒருபோதும் சம்மதிக்க மாட்டேன்" என்று இரக்க மில்லாமல் சொன்னாள். அதோடு நின்றுவிடவில்லை, ஒரு வாலிபனுக்கு அன்னக்குட்டியைக் கலியாணம் செய்து தருவதாகவும் உறுதிகூறிவிட்டாள்.

காரியம் மோசமான கட்டத்துக்கு வந்துவிட்டது; இனி பரிசம்போடுவதை **(Betrothal)** எப்படியாவது தடுக்கவேண்டும் என்று அன்னக்குட்டிக்கு மனதில் பட்டது. இவ்வித சந்தர்ப்பங்களில் முன்காலத்தில் பரிசுத்த கன்னியர் என்ன செய்தார்கள் என்று நினைத்துப் பார்த்தாள். அவள் மனதில் ஒரு தீர்மானம் தோன்றினது: "பரிசம்போடுகிற அன்று, கோவிலுக்குப் போகமுடியாத படி என் சரீரத்தை ஊனப்படுத்திக்கொள்வேன்" என்று முடிவுகட்டிக்கொண்டாள்.

இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றினது எவ்விதம் என்று அவளே ஒரு சகோதரியிடம் சொல்லியிருக்கிறாள்: "இதைப்பற்றி நான் சங். ஞானப்பிரகாசியார் சுவாமியாரிடம் மட்டும் சொல்லியிருக்கிறேன். எனக்குப் பதின் மூன்று வயது நடக்கும்போதே என்னுடைய கலியாணத்தைப்பற்றி முடிவு செய்துவிட்டார்கள். எனக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. கலியாணம் முடித்து விட்டுத்தான் வேறுகாரியம் பார்க்கவேண்டும் என்பது அம்மாவின் தீர்மானம். நகைகளெல்லாம் ரொம்ப அவசரத்தில் செய்தாகிவிட்டது. இந்த நிலைமையில் எனக்கு ஒரு எண்ணம் வந்தது: என் உடலை ஊனப் படுத்திக்கொண்டால், யார் என்னை விரும்புவார்? அன்று இராத்திரி முழுவதும் எனக்குத் தூக்கமில்லை, ஜெபந் தான். எங்கள் வீட்டுக்கருகில் இருந்த குழியில், அறுவடையில் கொண்டுவந்த சாவி, சண்டுகளையெல்லாம் போட்டு நிரப்பி, நெருப்பு மூட்டியிருந்தார்கள். நான் காலையில் எழுந்திருந்ததும் நேரே அந்தக் குழிக்குப் போய், ஒரு காலைத் தீயில் வைத்தேன். ஆனால் அவ்

விதம் காலைத் தூக்கித் தீயில் நீட்டும்போது, மறுகாலும் வழுக்கிவிட்டதால், குழிக்குள் விழுந்தேன். குழியோ என் உயரத்துக்குமேல் ஆழம். எனக்கு ஏறமுடியவில்லை. குழியின் இந்தப்பக்கமும் அந்தப்பக்கமும் போய் ஏற முயன்று கொண்டிருக்கும்போது, என்னுடைய உடுப்பில் தீப்பற்றிக்கொண்டது. எனது தலைரோமம் கட்டாமல் தொங்கிக்கொண்டிருந்தபடியால், அதன் நுனியிலும் நெருப்புப் பிடித்தது. கடவுள்தான் என்னைக் காப்பாற்றினர்; அல்லாவிட்டால், குழியில் கிடந்து எரிந்து போயிருப்பேன். எப்படி நான் கரைக்கு வந்தேன், எனக்கே தெரியவில்லை. எப்படியும் தப்பிப் பிழைத்தேன். உடனே விட்டுக்கு ஓடி, என் பெட்டியைத் திறந்து, வேறு ஒரு உடுப்பை எடுத்து, கால் தெரியாமல் நன்ருக இழுத்துப் போட்டுக்கொண்டேன்.

"அம்மாவுக்கு அப்போது காய்ச்சல். "ஏன் இப்போது உடுப்பு மாற்றுகிருய்" என்று கேட்டாள். "காலில் கொஞ்சம் நெருப்புப் பட்டுவிட்டது" என்றேன். அதற்குள் என்னல் நிற்கமுடியாமல், மயங்கி விழுந்துவிட்டேன். அம்மா எழுந்து ஓடிவந்தாள். என் நிலைமையைக்கண்டதும் பொறுக்க முடியாமல், அழுது கூப்பாடு போட்டுவிட்டாள். அயல் வீட்டாரெல்லாம் என்ன, என்னவென்று கூடிவிட்டார்கள். உடனே பெரியப்பாவுக்கு ஆளனுப்பினர்கள். இதற்குள் அம்மாவுக்குக் கொஞ்சம் மனந்தேறினது. "என் குழந்தையை அவளுடைய காவல் சம்மனசுதான் காப்பாற்றினர்; அல்லது இதற்குள் தீயில் வெந்து சாம்பலாய்ப் போயிருப்பாளே" என்று சொல்லிக்கொண்டாள். பள்ளிக்கூடத்துக்கும் இச் செய்தி எட்டியதால், உபாத்திமாரும் பிள்ளைகளும் என்னைப் பார்க்க வந்துவிட்டார்கள். என் காலிலுள்ள தண்டைகளைத் தட்டான்வந்து கழற்ற வேண்டியதாயிற்று. சில தினங்களில், இரண்டு கால்களிலும் புண் விரிந்து, சீழ் வைத்துவிட்டது. சகிக்கமுடியாத துர்நாற்றம். எங்கள் வீட்டுக்கு முன்னுலுள்ள ரோட்டில்

போகிறவர்களும்கூட மூக்கைப் பிடித்துக்கொண்டு போவார்களாம். என்னுடைய அத்தான் ஒருவர் என்னைப் பார்க்கவந்தவர், நாற்றத்தைப் பொறுக்கமுடியாமல், மயக்கம்போட்டு விழுந்து விட்டாராம். டாக்டர் தினந்தோறும் புண்களிலுள்ள சீழை வழித்துவிட்டு, பஞ்சு வைத்துக் கட்டுவார். என்னுடைய கால் விரல்களெல்லாம், ஒன்றோடு ஒன்று சேர்ந்து, ஒரே புண்ணாயிருந்தன. அவைகளை வேறு வேறாகப் பிரித்து, தனித்தனியே ஒவ்வொன்றுக்கும் மருந்து வைத்துக் கட்டுவார். ஆ, என்ன சொல்லொண்ணு வேதனை! எல்லாவேதனைகளையும் எனது ஒரே ஆசை நிறைவேறவேண்டுமென்று சருவேசுரனுக்கு ஒப்புக்கொடுத்தேன். புண்களெல்லாம் நன்றாக ஆறுவதற்கு தொண்ணூறு நாட்கள் பிடித்தன.

"ஒரு நாள், அம்மா என்னைப் பார்த்து, "நீ எப்படி அந்தக் குழிக்குள் விழுந்தாய்" என்று கேட்டாள். "கொஞ்சம் உமிக்கரி எடுக்கப்போனேன், கால் தவறி விட்டது" என்றேன் நான். அதற்கு அவள், "உன்னைப் பசாசுதான் குழிக்குள் தள்ளியிருக்கவேண்டும். கொஞ்ச நாளைக்கு முன்னல், நான் கோயிலுக்குப் போகும்போது, ஒரு பேய்பிடித்தவள் என்னைப்பார்த்து, "உனக்கு ஒரு மகள் இருக்கிறாள்; அவளை நன்றாக உடுத்தி அழகு பார்ப்பது உனக்கு அலுவலாயிருக்கிறது. எப்படியாவது அவளை நான் பிடிக்கிறேன், பார்" என்றாள். அந்தப் பிசாசுதான் உன்னைக் குழிக்குள் தள்ளினதோ, என்னமோ" என்று சொன்னாள்.

"நான் சுகமானதும் சங்கனச்சேரியிலுள்ள பாரேல் அர்ச். அமலோற்பவமாதா கோவிலுக்கு நன்றி செலுத்தும்படியாகப் போனோம். என் காலிலுள்ள தீப்பட்ட தழும்பைப் பார்த்து அநேகர் அரோசிகப் பட்டார்கள். இது அம்மாவுக்கு ரொம்ப வருத்தம்.

"புண் ஆறிவிட்டாலும், அநேகம் நாட்களாக என்னால் நடக்கமுடியாமல் போயிற்று. கால்கள், இப்போது

இருப்பதுபோல, இயல்பான நிலைமைக்குவருமோ என்று கூட சந்தேகப்பட்டார்கள்." புண் ஆறி பூரண சுக முண்டானலும், தீப்பட்ட தழும்புமட்டும் மாறவில்லை.

உண்மையில் அல்போன்ஸா வேணுமென்று நெருப்பில் கால்வைத்த விஷயம் அவளுடைய பெரியதாயாருக்கும், அப்பாவுக்கும் அவள் மரணமான பிறகுதான் தெரியும். நவசந்நியாசத்திலிருக்கும்போது, சங். ஞானப்பிரகாசம் சுவாமியாரிடம் இதைப்பற்றித் தெரிவித்தாள். "இப்படிச் செய்தது தப்பிதம்" என்று அவர் கண்டித்த போது, "நான் என்னசெய்வேன் சுவாமி, குழியில் அவ்வளவு நெருப்பு இருந்தது என்று எனக்குத் தெரியாது" என்று சிரித்துக்கொண்டு சொன்னளாம்.

இந்தச் சம்பவமே அல்போன்ஸாளின் ஆசை நிறைவேறுவதற்குக் காரணம். பெரியதாயார் கலியாணத்தைப்பற்றிப் பிறகு அதிகமாகப் பேசவில்லை. இவ்விதமாக சருவேசுரன் இந்தச் சிறுபெண்ணின் தியாகத்தை ஏற்று, அவளுடைய மன்ருட்டுக்கு இரங்கினர். அர்ச். பிரான்சிஸ் அஸிஸியையும், அர்ச். அக்குயினஸ் தோமையாரையும் கற்புக்கு விரோதமான சோதனைகளினின்றும் சருவேசுரன் காப்பாற்றினரல்லவா, அப்படியே அன்னக்குட்டியையும் அவளுடைய ஜீவியகால முழுதும் அவ்வித சோதனைகளினின்றும் காப்பாற்றினர். சிறுப்பத்திலேயே அவளுக்கு மிகுந்த தியாக சிந்தையுண்டு. அதனலேயே பின்காலத்தில் அவ்வளவு பெரிய வேதனைகளின் சிலுவையைச் சுமக்கும் வரத்தை யடைந்தாள்.

தான் கன்னியர்மடம் சேரவேண்டுமென்று அவள் செய்துகொண்டுவந்த ஜெபதபங்களைப்பற்றிக் கேள்விப்பட்ட சில கன்னியர் அவளுடைய பெரியதாயாரிடம் சிபார்சு பேசினர்கள். நாள் போகப்போக யாருடைய மனமும் மாறுமல்லவா! அம்மா இனி ஆக்ஷேபிக்கமாட்டாள் என்று தெரிந்தவுடன், எந்தச் சபையில் சேரலாம் என்ற யோசனை பிறந்தது. துறவறத்தில் விசேஷமாக

அவளுடைய மனதைக் கவர்ந்த புண்ணியம் தரித்திரம். இப்புண்ணியத்தை வெளிப்படையாகப் பெரிதும் போற்றும் ஒரு சபையில் சேரவேண்டுமென்பது அவளுடைய ஆசை. பக்கத்திலுள்ள கார்மேல் மடத்தில் சேர அவளுக்கு மனமில்லை. ஆத்தும குருவோடு ஆலோசித்த போது, அவர் அர்ச். கிளாரம்மாளின் எளிய சபையில் சேரும்படி சிபார்சு செய்தார். அவர்மூலமாக பர்ணஞானம் மடத்திலுள்ள கிளாரார் மடத்துக் கன்னியரில் சிலருடைய பரிச்சயமும் அவளுக்கு உண்டானது. அதனால் அங்குள்ள அவர்களுடைய பள்ளிக்கூடத்திலேயே உட்பிள்ளையாகச் சேர்ந்தாள்.

பள்ளிக்கூடத்தில் மாணவர் சங்கம் ஒன்று உண்டு. அன்னக்குட்டி வாய்ச் சாதுரியமாகப் பேசவும், நன்றாக எழுதவும் கூடியவளானதால், சீக்கிரம் சங்கத்தின் காரியதரிசியானாள். ஏழாம் வகுப்பில் சேர்ந்த அவள், அங்குள்ள மற்ற மாணவிகளுக்கு ஒரு முன்மாதிரிகையாக விளங்கினாள். படிப்பில் அவளுக்கிருந்த சிரத்தையும் கரிசனமும், மற்றவர்கள் மட்டில் காட்டிய அமைவும் அன்பும் எல்லாருடைய மனதையும் கவர்ந்தன. இங்கு மட்டுமல்ல, வாழப்பள்ளியில் மலையாள உயர்தரப் பாடசாலையில் படிக்கும்போதும் இரண்டு வருஷமாக அவளுடைய சிறந்த குணத்தை மெச்சாதவர்களில்லை.

கன்னியர் மடத்தில் நவசந்நியாசத்தில் உட்படுவதற்குமுன், அபேட்சகரென்று ஆறுமாதம் இருக்கவேண்டும். நம் சகோதரி 1928-ம் வருஷம் ஆகஸ்டுமாதம் 8-ம் தேதி, அபேட்சகர் உடுப்பணிந்து, அவர்கள் கூட்டத்தில் சேர்ந்தாள். அன்று அர்ச். அல்போன்ஸ் திருநாள். இதுவே துறவறத்தில் அல்போன்ஸா என்ற பெயரை அவள் தெரிந்துகொண்டதற்குக் காரணம். துறவறத்தில் முதல் அடி எடுத்துவைத்தாயிற்று. இனி முழுமனதோடும், மிகுந்த பற்றுதலோடும் தன்னைத்தானே தேவசிநேக ஜீவியத்துக்குக் கையளித்தாள்.

அவள் எவ்வளவு மனப்பூர்வமாகத் தன்னை சருவேசுரனுக்கு ஒப்புக்கொடுத்தாலும், உலகம் அவளை மறந்துவிடவில்லை. இன்னும் அவளைக் கலியாணம் செய்துகொள்ளலாம் என்று சில வாலிபர் முயற்சித்தார்கள். அவர்களெல்லாம் தனவந்தருடைய பிள்ளைகள். அதனால் அவளுடைய பெரியதாயார் கொஞ்சம் ஆசை வார்த்தைகள் சொல்லிவந்தாள். மடத்திலும் அல்போன்ஸாளை மேல்பார்த்துவந்த சகோதரிக்கு, இவள் மடத்தில் சேர்வது சரிதானு என்ற சந்தேகமிருந்தது. அதனால் ஒரு நாள் அல்போன்ஸாளைப்பார்த்து, "நீ வீட்டுக்குப் போய்விடுவது உசிதமாயிருக்கும் என்று நினைக்கிறேன்" என்ருள். ஒருவேளை அவளுடைய மனதைச் சோதிப்பதற்கு இவ்விதம் கூறினளோ, என்னமோ. சில குருக்களும் கூட அவள் தனது தீர்மானத்தை விட்டுவிட்டு, கலியாணம் செய்துகொள்வது நல்லது என்று புத்தி சொன்னர்கள்.

ஒருசமயம் லீவில் ஊருக்குப் போயிருந்தாள். திரும்பவும் கலியாணப் பேச்சுக்களும், ஏற்பாடுகளும் ஆரம்பமாயின. பெரியதாயார் தன்னிடம்வந்து கலியாணத்தைப்பற்றிப் பேசுவதற்கு முன்பே, அல்போன்ஸாளே அவளிடம்போய், "நான் உலகத்தையும் குடும்ப வாட்கையையும் வேண்டாமென்று நிராகரித்து விட்டேன்; இனி நான் முழுவதும் சருவேசுரனுக்குச் சொந்தம். அவரே எனது அன்பர்; அவருக்கு நான் கொடுத்த வாக்கினின்றும் பிறழமுடியாது" என்று உறுதியாகச் சொன்னுள். இதனல் இருவருக்கும் வாக்குவாத முண்டாயிற்று.

பெரியம்மா: "நீ பிறந்தவுடனே தாயில்லாப் பிள்ளையாய்ப்போனுய். உன்னை எடுத்து இவ்வளவுதூரம் வளர்த்துவிட்டதற்காகவா என் சொல்லைத் தட்டிப்பேசுகிருய்?

அல்போன்ஸா : நான் உங்களையெல்லாந்தான் சேசுவுக்காகத் தியாகம் செய்துவிட்டேனே!

பெரியம்மா : என் முகத்தில் கரியைத் தடவிவிட்டாய். நீ மடத்துக்குப் போவதைத்தான் நான் பார்க்கப் போகிறேன்.

இதற்குள் பெரியப்பா குறுக்கிட்டு, தனது மனைவியைத் தடுத்துச் சொல்வார்: "ஏன் இப்படி குழந்தையைக் கோபிக்கிறாய். அவள் இஷ்டம்போல மடத்துக்குப் போகட்டுமே" என்று அல்போன்ஸாளுக்காகப் பரிந்து பேசினார். அவளுடைய மனஉறுதியைக்கண்ட பெரியம்மாவுக்கு மறுத்து ஒன்றும் கூறமுடியவில்லை. பெரியம்மா என்னசெய்வாள்! கலியாணம் என்ற பேச்சை எடுக்கவே வழியில்லாமல்போயிற்று.

1930-ம் வருஷம் மே மாதம் 19-ம் தேதி, சங்கனாச்சேரி மேற்றிராணியார் ஆண்டவரவர்கள், பங்கு விசாரணையின் நிமித்தம் பர்ணஞானத்துக்கு வந்திருந்தார்கள். அன்று அல்போன்ஸா கன்னியர் வஸ்திரம் தரிக்கவேண்டிய நாள். மேற்றிராணியாரே நேரில் இந்த வைபவத்தை நிறைவேற்றிவைத்தார். அன்று நம் சகோதரி நெடு நாளாக ஆசித்திருந்த சுபதினம். அவளுடைய கலியாணத்துக்கென்று செய்து வைத்திருந்த நகைகளையே தரித்துக்கொண்டு, இந்த ஞானகலியாணத்துக்கு ஆஜரானாள். இந்தப் பாக்கியமான நாளைப்பற்றி பேசும்போது அவள் குறிப்பிட்டதாவது: "ஒரு அர்ச்சியசிஷ்டவளாக வேண்டுமென்றே நான் மடத்துக்கு வந்தேன். எத்தனையோ தடங்கல்களையெல்லாம் கடந்துவந்த பிறகு, ஒரு அர்ச்சியசிஷ்டவளாவதைத் தவிர, வேறு எதற்காக நான் மடத்திலிருக்கிறேன்?"

## மூன்றும் அதிகாரம்

புதிதாக நவசந்நியாசத்தில் சேரும் கன்னியர் ஒவ்வொருவருக்கும் ஒருபாடுபட்ட சுருபம் கொடுப்பதுண்டு. எதற்காகவென்றால், அவர்கள் தங்களுக்குப் பத்தாவாகத் தெரிந்துகொள்ளப்பட்டவர், மகாராசனுக வாழ்ந்தவரல்ல, சிலுவையில் தொங்கிய இரட்சகர் என்று அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ளும்படியாக. ஏனெனில் அவர்களும் தரித்திரம், கீழ்ப்படிதல், கற்பு என்ற மூன்று வார்த்தைப்பாடுகளினுல், அவரைப்போல சிலுவையைத் தெரிந்து கொண்டவர்களே. அல்போன்ஸா விஷயத்தில், சிலுவையே அவள் நமதாண்டவரோடு கொண்ட ஐக்கியத்தின் முத்திரையாயிருந்தது.

வஸ்திரம் தரித்த சில மாதங்களுக்குள் அல்போன்ஸாளுக்கு வியாதி வந்தது. எர்ணுகுளம் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் ஆப்பரேஷன் செய்தார்கள். சுகமடைந்தாள் என்றுலும், பூரண சுகமென்று சொல்லமுடியாது. அதனுல் வாகக்காடு என்ற இடத்திலுள்ள மடத்துப் பள்ளிக்கூடத்தில் உபாத்தினியாக நியமிக்கப்பட்டாள். அங்கும் வியாதி அவளை விடவில்லை. இராப்பகலாய் அவள்பட்ட கஷ்டம் கொஞ்சமல்ல. இரவு தூக்கம் கிடையாது; சாப்பாடும் செல்லாது; வேதனையோ அகோரம். இருந்தாலும் எப்போது பார்த்தாலும் குறையாத முகமலர்ச்சியோடு இருந்து வந்தாள். "என்னைப் பின்பற்ற விரும்புகிறவன் தன்னைத்தானே ஒறுத்து, தினந்தோறும் தன் சிலுவையைத் தூக்கிக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவான்" என்ற சுவிசேஷ வார்த்தைகள் அவளுக்கு மிகுந்த ஆறுதலைத் தந்தன.

சரீர வேதனைகள் மட்டுமல்ல அவள் அனுபவித்த சிலுவைப் பாரம்; மனச் சஞ்சலங்களும் அவளை வாதித்தன. நமதாண்டவரை நிந்தித்து, அவர்மீது அபாண்டம் பேசினவர்கள் எத்தனையோபேர்! சகலத்தையும் துறந்து அவரைப் பின்பற்றுகிறவர்களுக்கும் அந்த நிந்தைகளில் பங்கு உண்டல்லவா! கன்னியர் மடத்தில் பல விதமான குணவித்தியாசமும், வெவ்வேறு போங்குமுள்ளவர்கள் ஒன்றுகூடி ஜீவிப்பது இலகுவான காரியமல்ல. தங்கள் சுயேச்சையை அடக்கி, தரித்திரம், கீழ்ப்படிதல், கற்பு என்ற வார்த்தைப்பாடுகளுக்கு அமைந்து வாழ்வது எப்போதும் மனித சுபாவத்துக்குக் கஷ்டமே. இதனலேயே, இவ்வித துறவற ஜீவியத்தை ஒருவிதமான வேதசாட்சியின் ஜீவியம் என்று வேதசாஸ்திரிகள் சொல்வார்கள்.

ஆனல், ஒரு ஆத்துமத்தைப் பண்படுத்தி, பரிசுத்தமாக்கும் இந்த ஜீவியத்தின் சக்தியும், அழகும் எவ்வளவோ விசித்திரம்! மனிதனுடைய சித்தத்தை தேவசித்தத்துக்கு அமைந்திருக்கச் செய்து, அவனில் சமாதானமும் ஞான இன்பமும் சுரக்கச் செய்வது துறவிகளின் இந்தக்கூட்டு ஜீவியமல்லவா!

அல்போன்ஸா சங்கனச்சேரிக்குப் போய் அங்கு மற்றவர்களோடு நவசந்நியாசத்தை ஆரம்பிக்கவேண்டும். அதற்கு வழியில்லாமல் நோய்வாய்ப்பட்டு வருந்தினள். சருவேசுரன் ஒரு புதுமை செய்தாலொழிய, அவள் சங்கனச்சேரிக்குப் போகமுடியாதென்று சிரேஷ்டர்கள் பேசிக் கொண்டார்கள். அல்போன்ஸா அதிகமாக வேண்டிக்கொண்டாள். அவளுடைய மிகுந்த ஆசைக்கேற்க வியாதியும் சற்றுத் தணிந்தது. அதனல் சங்கனச்சேரிக்கு வந்து, 1935-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 12-ம் தேதி அல்போன்ஸா நவகன்னிகையின் ஜீவியத்தை ஆரம்பித்தாள்.

நவசந்நியாசம் ஞானப் பயிற்சியடையும் காலம். சிரேஷ்டர்கள் நவகன்னிகையின் குணாதிசயங்களைக் கவனித்து, அவளுக்கு துறவற அந்தஸ்தின் கடமைகளை நிறைவேற்றத்தக்க திறமையும் பக்திபற்றுதல்களும் உண்டாவென்று ஆராய்வார்கள். அவர்கள்மீது சதா கண்காணிப்பாயிருந்து, அவர்களுக்கு ஊக்கமூட்டி, குறைகளைத் திருத்தி புண்ணியத்தில் அவர்களைப் பயிற்றுவது சிரேஷ்டரின் அலுவல். அவர்களும் சபை ஒழுங்குகளுக்குக் கீழ்படிந்து துறவற அந்தஸ்துக்குரிய கடமைகளில் நன்ருகப் பழகிவரவேண்டும். நவசந்நியாசமே ஞான ஜீவியத்தில் விர்த்திப்பதற்கு அஸ்திவாரம்.

நவசந்நியாசத்தில் பிரவேசிப்பதற்குமுன், அல்போன்ஸா அந்த நாளை ஆவலோடு எதிர்பார்த்திருந்தாள். பரிசுத்ததனத்தின்மீது அவளுக்கு இருந்த ஆவலே இதற்குக் காரணம். நவசந்நியாசமே தனது ஞான ஜீவியத்துக்கு அஸ்திவாரம் என்று அவளுக்குத் தெரியும். அதற்கேற்க தனது நவசந்நியாச நாட்களில், தனது ஞான ஜீவியத்துக்கு பலமான அஸ்திவாரமிட்டுக்கொண்டாள் என்று அவளுடைய ஜீவியத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். சாங்கோபாங்கத்தில் முன்னேறிச்செல்ல அவளுக்கு மிகுந்த ஊக்கம் உண்டானது நவசந்நியாச காலத்திலேயே.

நவகன்னியரின் சிரேஷ்டர் சங். ஊர்சுலா சகோதரி; பன்னிரண்டு வருஷத்துக்குமுன், அன்னக்குட்டி பர்ணஞானத்தில் படித்துக்கொண்டிருந்தபோது, அங்கே தாயாராயிருந்தவர்கள். அதனால் அல்போன்ஸாமீது அவர்களுக்கு விசேஷ பிரியம் ஏற்பட்டது ஆச்சரியமல்ல. நவசந்நியாசத்தில் தன்னை விசாரித்துவந்தவர்களைப் பற்றி அல்போன்ஸா அடிக்கடி புகழ்ந்து பேசுவதுண்டு: "இவர்கள் மூலமாகவே எனது ஞான ஜீவியத்துக்கு அஸ்திவாரமிடப்பட்டது. ஞானத்தில் எனது வளர்ச்சியை அறிந்து, அதற்குத் தக்கபடி என்னை நடத்திவந்தார்கள்.

இவர்கள் செய்த உபகாரம் என் ஜீவியகாலமுழுவதும் எனக்குப் பிரயோஜனமாயிருக்கும்" என்பாள். நவசந்நியாசத்தில் அவளுக்கு ஆத்தும குருவாயிருந்து, துறவற ஜீவியத்தின் முதல் படியில் கால்வைக்க அவளுக்கு உதவியாயிருந்தவர் சங். ஞானப்பிரகாசம் சுவாமியார். பிற்காலத்தில்கூட அவருக்குக் கடிதம் எழுதி ஆலோசனை கேட்டுவந்தாள். அவர் சொன்ன ஞானபோதனைகளை அவள் ஒருபோதும் மறந்துபோகவில்லை. அவைகளை ஆதாரமாகக் கொண்டுமற்றவர்களுக்கும் அவள் ஆலோசனைகள் கூறிவந்தாள்.

சங்கனாச்சேரியிலும் வியாதி அவளை விட்டுவைக்கவில்லை. நவசந்நியாசத்தில் சேர்ந்து ஒருவாரமாவதற்குள் வியாதி ஆரம்பித்தது. அடிக்கடி இரத்தவாந்தி கண்டது. அதனால் பலவீனம் மேலிட்டு, நிலைமை அதிக மோசமாகிக் கொண்டேவந்தது. அதோடு காலிலும் ஒரு கட்டி புறப்பட்டது. இவ்விதம் வியாதியாய் அங்கிருப்பது மற்ற நவகன்னியர் தங்கள் ஒழுங்குகளை அநுசரிப்பதற்கு இடையூறாயிருக்குமென்று, சிரேஷ்டர்கள் அவளை பர்ணஞானத்துக்கு அனுப்பிவிட உத்தேசித்தார்கள். இதை மேற்றிராணியாரிடம் தெரிவித்தபோது, அவர் தாமே நேரில் அல்போன்ஸாளை வந்து பார்த்துவிட்டு, "அவளை எங்கேயும் அனுப்பவேண்டாம். அவள் இங்கேயே மரிப்பது சருவேசுரனுக்குச் சித்தமானால், அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிவிட்டார்.

மூன்று மாதம் அல்போன்ஸா சொல்லமுடியாத வேதனையை அநுபவித்தாள். இந்த அகோர வேதனைகளின் மத்தியிலும் அவளுடைய கவலையெல்லாம், தானும் தன்னைக் கவனிப்பவர்களும் மற்றவர்களைப்போல சபையின் ஒழுங்குகளை அநுசரிக்க முடியவில்லையே என்பதே. அல்போன்ஸா சீக்கிரம் சுகப்படவேண்டுமென்று எல்லாருக்கும் ஆசை. அதனால் சங். குரியாக்கோஸ் சுவாமியாரை நோக்கி எல்லாரும் ஒரு நவநாள் செய்யும்படி

நோவிஸ் சிரேஷ்டர் ஆலோசனை சொன்னார்கள். இந்தக் குரியாக்கோஸ் சுவாமியார் கார்மேல் சபையில் உட்பட்டு மரித்த ஒரு பரிசுத்த குருவானவர். சங்கனாச்சேரி மேற்றிராசனத்தைச் சேர்ந்தவர்; அவர் பிறந்தது 1805-ம் வருஷம்; 1879-ல் மரித்தார். அவரை நோக்கி நம் சகோதரியின் வியாதி தீரும்படி கேட்ட மன்றாட்டு பலித்தது. அதைப்பற்றி நோவிஸ் சிரேஷ்டர் எழுதுவதாவது:

"இராத்திரி அல்போன்ஸாளுக்கு ஆபத்து வரும் என்று எங்களுக்குப் பயம். அதனால் அடிக்கடி நான் அவளுடைய அறைக்குப் போய் அவளைப் பார்த்துவிட்டு வந்தேன். அவள் மிகவும் தளர்ச்சியுற்றுப் போயிருந்தாள். உயிரோடு இருக்கிறாளா என்று அறியவேண்டுமானால், குனிந்து உற்றுநோக்கினால்தான் தெரியும். அவ்வளவு மோசமான நிலைமையிலிருந்தாள். அன்று நவநாளின் கடைசி நாள் இரவு. அறையில் யாரோ பேசிக்கொண்டிருந்த சப்தம் கேட்டது. திடீரென்று ஏதாவது நோவு வந்திருக்கும், அல்லது யாராவது சகோதரிகள் வந்து பேசிக்கொண்டிருப்பார்கள் என்று நினைத்தேன். இரவு கண்டிப்பான மௌன நேரம். அந்த வேளையில் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்க எனக்கு எரிச்சலாயிருந்தது. கதவண்டைபோய் உள்ளே பார்த்தேன். வேறு ஒருவரும் இல்லை. உள்ளே போனேன். அல்போன்ஸா தான் கைகளை ஆட்டி சைக்கினைகள் செய்து பேசிக்கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தால் தூக்கத்தில் புலம்புகிறவளைப்போல தோன்றினது. கடைசியாக, அவளைத் தட்டி எழுப்பி, "இந்த இராத்திரி வேளையில் சத்தம் செய்வது மற்றவர்களுக்குத் தொந்தரவாயிராதா" என்று கேட்டேன். உடனே அவள் எழுந்து உட்கார்ந்துகொண்டு, "இங்கே பாருங்கள், தாயாரே, குரியாக்கோஸ் சுவாமியார்! உங்கள் கண்ணுக்கு அவர் தெரியவில்லையா? வாருங்கள், ஆசீர்வாதம் கேட்போம்" என்று சொன்னாள். அவரோடு நேருக்குநேர் பேசுவதுபோல் பேசினாள். சற்

றுப்பொறுத்து, "எனக்குச் சுகமாகிவிட்டது. குரியாக் கோஸ் சுவாமியார் இங்கே வந்தார். அவர் என்னைத் தொட்டு ஆசிர்வதித்துவிட்டு, 'இந்த வியாதி உன்னைவிட்டு விலகிவிட்டது. இனிமேல் உன்னை அணுகாது. ஆனால் வேறுவிதமாக நீ எப்போதும் துன்பப் படுவாய்' என்று சொன்னார். 'ஆனால் அவர் வந்தது சொற்பனமா, அல்லது மனப்பிரமையா, தெரியவில்லை. ஆனால் நான் சுகமாகி விட்டேன் என்பது நிச்சயம்' என்று சொன்னாள்."

அல்போன்ஸா ஒரு காட்சி கண்டாள் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் அவள் மட்டும், தான் கண்டது ஒரு சொற்பனமாயிருக்கலாம், அல்லது மனரூபிகரமா யிருக்கலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தாள். இப்படி நினைத்தது தாழ்ச்சியினால் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் இந்த விருத்தாந்தத்தைப் பற்றி அவள் அதிகமாக ஒன்றும் பேசினது கிடையாது. எப்படியானாலும், அவள் அற்புதமாக திடீரென்று குணமடைந்தது உண்மை. முந்தினநாள் சாயங்காலம் படுக்கையோடு படுக்கையாய், எழுந்திருக்கவும் சக்தியற்று அபாயகரமான நிலையி லிருந்த ஒரு வியாதிக்காரி, ஒரே இராத்திரிக்குள் பூரண சுகமடைந்து, மறுநாள் காலையில் கோவிலுக்கு நடந்து போய் நன்மை வாங்கினாள் என்றால், இது ஒரு புதுமை இல்லாமல் வேறு என்ன? சங். குரியாக்கோஸ் சுவாமி யார் சொன்னதுபோல, ஆப்பரேஷன் செய்தது முதல் இதுவரை அடிக்கடி வந்துகொண்டிருந்த இரத்த வாந்தி முற்றிலும் நின்றுபோனது. ஆனால் அதற்குப் பதிலாக வேறு அநேகம் நோவு நோக்காடுகள் அவளைப் பற்றிக் கொண்டன.

அல்போன்ஸா சருவேசுரனோடு அதிக அன்னி யோன்னியமாய் ஒன்றித்திருப்பதற்கு உதவியாயிருந் தது, அவள் அநுபவித்துவந்த வேதனை துன்பங்கள் மட்டுமல்ல; அவளுடைய ஜீவியத்தின் ஒவ்வொரு நட படிக்கையும் அதற்கு உதவியாயிருந்தது. அவள் தனது

மனதை முற்றிலும் தேவ சித்தத்துக்குக் கையளித்திருந் தாள். இருந்தாலும் இன்னும் அவளிடம் சிற்சில குற் றங் குறைகள் இல்லாமலில்லை.

யார்மீதும் அதிக வாஞ்சை காட்டுவது அவளுக்கு வழக்கம். இதனால் தனது சிரேஷ்டர்கள்மீது அதிகப் பிரியம் பாராட்டினாள். இதைப்பற்றி அவளே எழுது கிறாள்: "சுபாவமாகவே நான் யார்மீதும் அன்பாயிருப் பேன். சிநேகமே என் இருதயத்தை நிரப்பிக்கொண் டிருப்பதாகத் தெரிகிறது. என்னுடைய விசேஷ சிநே கத்துக்கு உரியவர்கள் மடத்து சிரேஷ்டர்களே. அடிக் கடி அவர்களிடம்போய் செல்லப்பிள்ளை மாதிரி பேசிக் கொண்டிருக்க எனக்கு ஆசைவரும். இது மற்றவர் களுக்கு இடைஞ்சலாயிருக்குமென்று நான் நினைத்தது கிடையாது. இவ்விதம் சுபாவ நாட்டத்தை முன்னிட்டு வாஞ்சை காட்டுவது அவ்வளவு நல்லதல்ல வென்றும் நான் நினைத்ததில்லை. இந்தக் குற்றத்துக்காகத்தான் சருவேசுரன் ஒருவேளை இந்த வேதனைகளைக் கொடுத் திருக்கிறாரோ! நவகன்னிகையாயிருக்கும்போது, இந்த விசேஷ வாஞ்சையைப்பற்றி சங். ஞானப்பிரகாசம் சுவாமியாரிடம் சொல்லியிருக்கிறேன். அவர், 'நீ வாரம் ஒரு தடவை சிரேஷ்டத் தாயாரிடம் போனால்போதும்; அப்போதும் பதினைந்து நிமிஷத்துக்குமேல் அங்கே இருக்கவேண்டாம்' என்று சொன்னார். ஆனால் வாரம் ஒரு முறைகூட அவர்களோடு பேச அவகாசம் கிடைப்ப தில்லை. ஏனெனில், நான் சிரேஷ்டரின் அறைக்குள் நுழைந்தவுடனேயே அவர்கள், 'விசேஷம் ஒன்றுமில்லை, சகோதரி, நீங்கள் போகலாம்' என்று சொல்லி விடுவார் கள். மற்றவர்களோடு தாராளமாய் வெகுநேரம் பேசிக் கொண்டிருப்பார்கள். என்னோடு கொஞ்சமும் பேசுவ தற்கு நேரம் கிடையாது! இதனால் நான் எவ்வளவு மன வருத்தமடைந்தேனென்று என்னால் சொல்லமுடியாது. மதியீனமான இவ்வித மனவருத்தங்களெல்லாம் இப்

போது உண்டாவதில்லை. யாரிடமும் விசேஷ பிரியம் காட்டவேண்டுமென்ற பிரியமும் இப்போது வருவதில்லை. என்னுடைய சிநேகமெல்லாம் சருவேசுரன் ஒருவருக்கே தான்.''

அவள் நவசந்நியாசத்திலிருக்கும்போது எழுதிய குறிப்புக்கள் ஒன்றில் கூறுவதாவது: ''இன்றுமுதல்.... (இன்னார்) மட்டில் காட்டும் அந்த விசேஷ பட்சத்தை விட்டுவிடுவேன். இயல்பாக உண்டாகும் சுபாவ வாஞ்சையை முன்னிட்டு அவர்களைச் சிநேகிக்கக்கூடாது. இயல்பான நாட்டத்தின் தூண்டுதலினால் அவர்களோடு ஒன்று பேசவோ செய்யவோ மாட்டேன். இதில் தவறிப் போகும் ஒவ்வொரு தடவையும் ஒரு சிறு ப்ரிகாரம் செய்வேன். இதுதான் எனது தனி ஆத்தும சோதனை.''

அவளுக்குண்டான வேறு சோதனைகளையும், அவைகளை அவள் மேற்கொண்ட விதத்தையும்பற்றி இன்னொரு இடத்தில் எழுதுகிறாள்: ''வியாதியினால் நான் மிகவும் கஷ்டப்பட்டாலும், அவைகளையெல்லாம் எனது ஆத்தும குருவானவரின் உதவியால் பொறுமையோடு அநுபவித்துக் கொண்டுவருகிறேன். ஆனால் சரீரத்துக்குவரும் இந்த வேதனைகளையெல்லாம்விட, மற்றவர்கள் என்னைப் பற்றிக் குறைகூறுவதைச் சகித்துக்கொள்வதுதான் அதிகக்கடினமாயிருக்கிறது. ஒரு சிறு வார்த்தையைக்கூட மறந்திருக்க முடியவில்லை. இதைப்பற்றி எனது ஆத்தும குருவானவரிடம் சொன்னேன். அவர் என்மீது காட்டிய விசேஷ அநுதாபம் எனக்கு ரொம்பவும் உதவியாயிருந்தது. இனி யாரும் என்னைப்பற்றி குறைவாகச் சொல்லும்போது எதிர்த்துப் பேசமாட்டேன். கூடுமான போதெல்லாம் என் குற்றத்தை ஒத்துக்கொள்ளுவேன்; அல்லது அவர்கள் சொல்வதை சகித்துக்கொள்வேன். மற்றவர்கள் வெறுக்கும்போது, அல்லது இழிவாகப் பேசும்போது, எனது அடைக்கலம் சேசுவின் திரு இருதயமே. என்னைப்பற்றி யாரும் என்னமும் சொல்லிக்

கொள்ளட்டும்; அதுவெல்லாம் சருவேசுரன் எனக்குக் காட்டுகிற விசேஷ சலுகை என்று அவருக்கு நன்றி செலுத்துவேன். எனது கண்களையும் அநாவசியமாய் இங்கும் அங்கும் பார்க்காதபடி காவந்து செய்வது அவசியம். கண்பார்வையை அடக்காமல், வேணுமென்று, அல்லது கவனக்குறைவினால் அலையவிட்டால், அதற்கு ஏதாவது பரிகாரமும் செய்யவேண்டும். என்ன கஷ்டம், துன்பம் வந்தாலும் சரி, இனி ஒருபோதும் முறைப்பாடு சொல்வதில்லை. நான் குற்றம் செய்யாதபோது கண்டித்தாலுங்கூட, அதை ஒப்புக்கொண்டு, மன்னிப்புக் கேட்கப் பிரயாசைப் படுவேன்."

இந்தப் பிரதிக்கினைகளையெல்லாம் நம் சகோதரி தவறாமல் அநுசரித்து வந்தாள் என்பது நிச்சயம். அவள் தினந்தோறும் செய்துவந்த கணக்கற்ற ஒறுத்தல்களும், பக்தி முயற்சிகளும் குறிக்கப்பட்ட நோட்டுப் புஸ்தகங்களைப் பத்திரமாய் வைத்திருக்கிறார்கள். அவைகளிலிருந்து அவள் புண்ணிய சாங்கோபாங்கத்தில் எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தாள் என்று ஒருவாறு அறிந்து கொள்ளலாம். கன்னியாஸ்திரிகள் வழக்கமாய் அநுசரித்துவரும் பக்தி, தவமுயற்சிகளைத் தவிர, அவள் தானாகவே பிரத்தியேகமாகச் செய்துவந்த தியாகங்கள், ஒறுத்தல், பக்தி முயற்சிகளை இந்த நோட்டுப் புஸ்தகங்களின் ஒவ்வொரு பக்கங்களிலும் காணலாம்.

அல்போன்ஸா சகோதரியின் நவசந்நியாச ஜீவியம் வெற்றிகரமாக முடிந்தது. இனி வார்த்தைப்பாடு கொடுக்கவேண்டும். இந்த வார்த்தைப்பாட்டை, பரிசுத்த அமலோற்பவத்தாயின் மூலமாகக் கொடுத்தாள். "ஆண்டவரே, என்னை உமக்கு முற்றிலும் சொந்தமானவளாக நடத்தியருளும்" என்ற வார்த்தைகளினால், 1936-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 12-ம் தேதி, தனது ஞானபத்தாவுக்கும் தனக்குமுள்ள ஐக்கியத்துக்கு முத்திரையிட்டாள். இவை வெறும் வார்த்தைகளல்ல. அவற்றின்



சங். ஜோசப் முட்டத்துப்பாடம்: சகோதரி அல்போன்ஸாளின் தகப்பன்வழி பாட்டனுர்.
அல்போன்ஸாளின் படிப்பு விஷயமாக பெரிதும் உதவி
கடைசிவரை அவளைக் கண்காணித்து வந்தவர்



குடமளூரிலுள்ள பங்குக் கோவில். இங்குதான் அல்போன்ஸா ஞானஸ்நானம் பெற்றது

பொருள் என்னவென்று அறிய அவளுடைய ஜீவியத்தைப் பார்க்கவேண்டும். உண்மையில் அவளுடைய ஜீவியம் முற்றிலும், இடையறுமல், சருவேசுரனுடைய சித்தத்துக்கு அற்பணம் செய்யப்பட்ட ஜீவியமாயிருந்தது.

# நாலாம் அதிகாரம்

நவசந்நியாசம் முடிந்து, வார்த்தைப்பாடு கொடுத்த பின், சகோதரி அல்போன்ஸா சங்கனச்சேரியிலிருந்து பர்ணஞானம் மடத்துக்கு வந்தாள். துறவற ஜீவியத்தின் கஷ்டங்களையெல்லாம் ஏற்று நடக்க அவளுக்கு முன்னைவிட அதிக ஆவல். அவளுடைய குறிப்புப் புஸ்தகத்தைப் பார்த்தால், ஒறுத்தல்களும், பிறர்சிநேக முயற்சிகளும் வெகுவாய் அதிகரித்திருப்பதை காணலாம். தாராள மனதோடு சபை ஒழுங்குகளுக்குக் கீழ்ப்படிந்து, தன் ஜீவியத்தை ஆரம்பித்தாள். அதன் ஒவ்வொரு நடபடிக்கையும் அவளுக்கு மகிழ்ச்சியளித்தது. தனது உடன் சகோதரிகளுக்குத் தனித்தனியே உதவி புரிவது அவளுக்கு ஆனந்தம். பிறர் விரும்பாத வேலைகளை அவளே செய்ய முன்வருவாள். மற்றவர்கள் செய்யாமல் விட்ட வேலைகளை அவர்கள் அறியாமல் செய்துவிடுவாள். தன்னைப்பற்றி அவள் கவலைப்பட்டதே கிடையாது. மற்றவர்களுக்கு எது பிரியமாயிருக்கும் என்று பார்த்து, அதையே செய்வாள். தன்னிடம் இரவல் வாங்கிக்கொண்டுபோன பொருட்களைக் கொடுக்காவிட்டாலும், அதற்காக அவள் வருந்துவதில்லை. மற்றவர்களுக்குத் தெரியாமல் மிகவும் தாழ்ந்த வேலைகளைத் தேடிச் செய்வாள். அவள் தன்னை ஜெயித்து வாழ்ந்த சுய பரித்தியாக ஜீவியம், மற்றவர்களுக்கு ஒரு முன்மாதிரிகையாயிருந்தது.

அவள் நவகன்னிகையாயிருக்கும்போது, சங். குரியாக்கோஸ் சுவாமியார் காட்சியில் சொன்னபடி, தனக்கு இன்னும் அநேகம் வியாதி துன்பங்கள் வருமென்று அவளுக்குத் தெரியும். வார்த்தைப்பாடு கொடுத்த சில வாரத்

துக்குள்ளேயே காய்ச்சல் கண்டது ; காய்ச்சலும் கொடிய காய்ச்சல். அவளைக் கவனித்துவந்த வேலைக்காரி ரொம்பவும் அசட்டைத் தனமுள்ளவள். அல்போன்ஸாளைச் சரியாய்க் கவனிப்பதில்லை ; மரியாதையாகவும் நடந்து கொள்ளமாட்டாள். அவளிடம், "நீ செய்வதையெல்லாம் நமதாண்டவருடைய சிநேகத்தை முன்னிட்டுச் செய், சிரேஷ்டர்களுக்குப் பிரியப்படும்படியாகச் செய்யவேண்டாம்," என்று பட்சத்தோடு சொல்வாள். இது தான் அவள் கொடுக்கும் கண்டிப்பு. வேலைக்காரியைப்பற்றி அல்போன்ஸா ஒருபோதும் முறையிட்டது கிடையாது. அவள் சரியாய் கவனிக்கவில்லை என்று சிரேஷ்டர்கள் தாங்களாகவே அறிந்து அவளைக் கண்டித்தால், "ஐயோ, தெரியாமல் செய்துவிட்டாள்" என்று அவளுக்காக பரிந்து பேசுவாள்.

அல்போன்ஸா சகோதரிக்கு வந்த காய்ச்சல் ஒரு நாள் இரண்டு நாள் காய்ச்சலல்ல. ஐம்பது நாளைக்கு மேற்பட்ட கொடிய காய்ச்சல். பலவீனமும் களைப்பும் அதிகம். ஒருவேளை காசவியாதியாயிருக்குமோ என்று நினைத்து, ஒதுக்கமான ஒரு இடத்தில் அவளை வைக்க வேண்டும் என்று பேசிக்கொண்டார்கள். அவளுடைய நோவிஸ் சிரேஷ்டர் அப்போது ஒரு ஆலோசனை கூறினார்கள் : "முன் ஒரு சமயம் அவள் வியாதியாயிருந்தபோது, சங். குரியாக்கோஸ் சுவாமியார் தோன்றி, அற்புதமாக சௌக்கியமளித்தார் ; இப்போதும் அவரை நோக்கி நவநாள் செய்வோம்" என்றார்கள். இந்த யோசனையைக் கேட்டு, அல்போன்ஸா சிரேஷ்ட தாயாரிடம், "நான் இன்னும் ஒன்பது நாளைக்குள் சுகப்படாவிட்டால், பிறகு என்னை வேறிடத்தில் கொண்டுபோய் வையுங்கள்" என்று கேட்டுக்கொண்டாள். இந்த ஒன்பது நாளும் சேசுவின் சிறிய புஷ்பத்தையும் பார்த்து வேண்டிக் கொள்ளும்படியாகவும் சகோதரிகளிடம் சொன்னாள். சகோதரிகளெல்லாம் சிறிய புஷ்பத்துக்கு ஒரு நவநாள்

ஆரம்பித்தார்கள். அல்போன்ஸாளும், வியாதியாயிருந்த இன்னொரு சகோதரியும் சங். குரியாக்கோஸ் சுவாமி யாருக்கு நவநாள் தொடங்கினார்கள். எட்டு நாளாகி விட்டது; நவநாள் ஜெபங்களால் வியாதிக்காரிக்கு இன்னும் ஒரு ஆறுதலும் உண்டாகவில்லை. எல்லாரும் நம்பிக்கையை இழந்துபோகப்போகிற தருணம். காய்ச்சல் துவக்கியும் அறுபத்தைந்து நாளாகி விட்டது. கடைசியாக அல்போன்ஸாளின் தளராத நம்பிக்கை பலன் தந்தது: ஒன்பதாம் நாள் காலையில் காய்ச்சல் நின்றுபோனது. எல்லாருக்கும் சொல்லமுடியாத சந்தோஷம்; மறுநாளே நன்றியறிதலாக பாட்டுப் பூசை செய்து ஒப்புக்கொடுத்தார்கள்.

நவநாள் செய்யும்படியாக ஆலோசனை சொன்ன சகோதரி அல்போன்ஸாளிடம் வந்து, "இராத்திரி என்ன நடந்தது" என்று கேட்டார்கள்.

"அப்படி விசேஷமாக ஒன்றும் நடக்கவில்லையே தாயாரே".

"இருக்கட்டும், அர்ச். குழந்தை தெரசம்மாள் காட்சி கொடுத்தாளா, சொல்லேன்?"

"அர்ச். குழந்தை தெரசம்மாள் எனக்குத் தோன்ற நான் பாத்திரவதியல்ல. ஆனால், நீங்கள் விரும்பிக் கேட்பதால், நடந்ததைச் சொல்கிறேன். ஒரு கார்மேல் சபை கன்னியாஸ்திரி வந்து, என் பக்கத்தில் நின்று கொண்டிருப்பதாகத் தெரிந்தது. அவர்கள் என்னைத் தொட்டு, 'உனக்குக் காய்ச்சல் விட்டுவிட்டது. தொத்து வியாதி ஒன்றும் உன்னை அணுகாது. ஆனால் மரண மட்டும் நீ வேறு வியாதிகளால் மிகவும் சோதிக்கப்படுவாய்' என்று சொன்னார்கள். இது ஒரு புதுமையோ, என்னமோ எனக்குத் தெரியவில்லை. ஆனால் உங்களை வருந்திக் கேட்டுக்கொள்கிறேன், இதைப்பற்றி ஒருவரிடமும் சொல்லக்கூடாது."

சங். குரியாக்கோஸ் சுவாமியாரும் தனக்குத் தோன்றினதாகப் பின்னொரு சமயம் சொல்லியிருக்கிறாள். அவர் வந்து கையைப் பிடித்து எழுப்பி, அறையைச்சுற்றி அவளோடு நடப்பதாகக் கண்டாளாம். இது நடந்தது 1936-ம் வருஷம், டிசம்பர்மாதம்.

இதன் பிறகு பதினெட்டு மாதங்கள் அல்போன்ஸாளுக்கு வியாதியில்லை. மிகுந்த பற்றுதலோடு, தன்னையே மறந்து, சபை ஜீவியத்தில் ஈடுபட்டாள். அவளுடைய வேலை, தாயாருக்குக் காரியதரிசியாயிருந்து, மடத்துக் கணக்கு வழக்குகளைக் கவனித்துக்கொள்வது. சில சமயம் சிரேஷ்டர் உத்தரவின்பேரில், சமையலறைக்குப்போய் வேலை செய்வாள். ஒன்றரை வருஷம் வியாதி இல்லையென்றாலும், சொற்ப நோவு வருத்தங்கள் எப்போதும் இருந்துகொண்டே யிருந்தன. துன்ப வாதைப்பட்ட நமதாண்டவரைக் கண்டுபாவிக்கவேண்டுமென்று, இவ்வித துன்பதுரிதங்களுக்காக அவள் மன்றாடியும் வந்திருக்கவேண்டும். சபை ஜீவியத்தின் சிரமந் தாங்க மாட்டாமல், சில சமயங்களில் களைத்துச் சோர்ந்து போவாள். ஆனால் பொது ஒழுங்குகளை அநுசரிப்பதை விட்டு, அவளாக ஒருபோதும் ஓய்வு எடுத்துக்கொண்டதில்லை. சிரேஷ்டர்கள் கட்டளையிட்டாலொழிய, மற்றப்படி ஒருபோதும் இளைப்பாறுவதற்கென்று அவள் போனது கிடையாது. அநேக சமயங்களில் பகல்வேளைகளில் ஒரு கஷ்டமும் இல்லாதவள்போல் தோன்றுவாள். ஆனால் இரவு முழுவதும் தாங்கமுடியாத வேதனையுண்டாகும். இது பிறர் அறியாவண்ணம் தான் துன்பப்படவேண்டும் என்று அவள் ஜெபித்துவந்ததின் பலன். இதை அவளுடைய வார்த்தைகளிலிருந்தே அறிகிறோம்.

"இந்த சகாயத்துக்காக நான் அதிகமாக மன்றாடிக் கொண்டுவந்தேன். பகலில் வேதனை துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்தால், மற்றவர்களுக்குத் தெரிய வரும். அவர்கள் அநுதாபப்படுவார்கள். அதோடு,

எனது வேதனைகளைப் போக்கவும் சிரமப்படுவார்கள். ஆனால் இராத்திரியானால், ஒருவரும் அறியாமல், நானே என் வேதனையை அனுபவித்து வரலாம். இந்த மன்ருட்டை ஆண்டவர் கேட்டருளினர்."

ஆனால் இது அதிக நாள் நீளிக்கவில்லை. வேதனைகளும் துன்பங்களும் ஒன்றன்பின் ஒன்ருகத் தொடர்ந்து வந்தன. ஒருநாள் சில சகோதரிகளோடு பேசிக்கொண்டிருக்கும்போது, "எனக்கு ரொம்பவும் களைப்பாயிருக்கிறது" என்ருள். "இதெல்லாம் வீண் பிரமை, நீயாக அப்படி நினைத்துக்கொண்டிருக்கிருய், வேறு உனக்கென்ன இப்போது" என்று சிலர் கடுமையாகச் சொன்னர்கள். அதனல், கொஞ்சமும் இளைப்பாற்றி யில்லாமல், மனத்திடத்தைக் கைவிடாமல், வாடிக்கையான அலுவல்களையெல்லாம் செய்து வரவேண்டியதாயிற்று. ஆனல் மனஉறுதியும் எவ்வளவு காலம் வியாதியைத் தாங்கும்!

1939-ம் வருஷம் ஜூன் மாதம் 14-ம் தேதி, சேசுவின் திரு இருதயத்திருநாளுக்கு முந்தின நாள். சகோதரிகள் சேர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது வேதனை துன்பங்கள் அனுபவிப்பதைப் பற்றிய பேச்சு வந்தது. அல்போன்ஸா சொன்னள்: "கோதுமை அரிசியைத் திரித்துப் புடைத்தால்தான் வெண்மையான மாவாகும். இந்த மாவைச் சுட்டு திவ்வியநற்கருணைக்கு ஓஸ்திகள் செய்கிருேம். அதுபோல நாமும்; துன்ப துயரங்களினல் நசுக்கவும், திரிக்கவும் படவேண்டும். திராக்ஷப் பழங்களிலிருந்து தானகவே ரசம் வடிந்துவிடுகிறதா? அவைகளை நசுக்கித்தான் ரசம் எடுக்கவேண்டும். நாமும் துன்பதுயரங்களால் நசுக்கப்படும்போது நல்ல ரசத்தைப்போல தூய்மையடைகிருேம்...."

இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போதே, அவளுடைய சரீரம் நடுங்குவதைக் கண்டார்கள். அவள் அதிக வியாதியாயிருந்தாளென்று அப்போதுதான் மற்றவர்களுக்குத் தெரியும். டாக்டர்வந்து இரட்டை நிமோ

னியா ஜுரம் என்று சொன்னர். வைத்தியரின் கவனிப்பும், சகோதரிகளின் ஜெபமும் நம் சகோதரிக்கு சுகத்தைக் கொடுத்தன. இருந்தாலும் எத்தனையோ நாள் கஷ்டப்பட்ட பிறகுதான் அதுவும் கிடைத்தது.

காய்ச்சல் குணமான சமயத்தில்தான், சகோதரிகளுக்குள் அல்போன்ஸாளைப்பற்றி ஒரு அபத்தப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. "அவள் பெரிய பாசாங்குக்காரி; சிரேஷ்டர்கள் மெச்சிக்கொள்ளட்டும் என்று பெரிய அர்ச்சியசிஷ்டவள்மாதிரி நடித்துக் கொள்கிருள்" என்று சிலர் பேசிக்கொண்டார்கள். இது மடத்துக்குத் தியானம் கொடுக்கவந்த சுவாமியார் காதுக்கும் எட்டிற்று. அவர் அல்போன்ஸாளைக் கூப்பிட்டு விசாரித்தார். நம் சகோதரிக்குச் சொல்லமுடியாத மனவேதனை. இந்த வேதனையினல் காய்ச்சலும் திருப்பிக்கொண்டது என்றல், எவ்வளவு மனம் வருந்தியிருப்பாளென்று பாருங்கள்! கடைசியாக சுவாமியாருக்கு உண்மை விளங்கிற்று. தான் தப்பிதமாக பிறர் சொல்லை நம்பினதற்காக அவளிடம் மன்னிப்புக் கேட்டார். இதைப்பற்றி அல்போன்ஸாளை விசாரித்தபோது, "யாரோ தெரியாமல் என்னைப்பற்றி தனது அபிப்பிராயத்தை சுவாமியாரிடம் வெளியிட்டிருக்கிருர்கள். அவர் அதை உண்மையென்று நம்பி, எனக்குப் புத்தி சொல்வதற்காகக் கூப்பிட்டார். இதையும் நான் சகிக்கவேண்டுமென்பது தேவசித்தம். சுவாமியாரைப்பற்றி எனக்கு ஒரு வருத்தமும் இல்லை. அவருக்காக நான் அதிகமாக வேண்டிக்கொள்கிறேன்." என்று சொன்னள்.

திரும்பவும் வியாதிக்காரியை வேறிடத்துக்குக் கொண்டுபோக வேண்டுமென்ற பேச்சு எழுந்தது. நவசந்நியாசத்தில் அவளுக்கு சிரேஷ்டராயிருந்த ஊர்சுலா சகோதரியே இப்போது சபையின் அதிசிரேஷ்டத் தாயாராயிருந்தார்கள். அவர்கள் பர்ணஞானத்துக்கு வந்திருந்தபோது, நம் சகோதரியைப் பார்த்துவிட்டு, "உங்

களை இன்னொரு இடத்துக்கு மாற்றினால் அதிகக் கஷ்டமாயிருக்குமோ" என்று கேட்டார்கள். "ஏன், தாயாரே, அது சருவேசுரனுடைய சித்தம் என்று ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று நினைக்கிறீர்களா? என் சிரேஷ்டர்கள் சொல்லுகிற இடத்தில் இருப்பதே என் கடமை" என்று சந்தோஷத்தோடு சொன்னாள்.

காச நோயில்லை என்று நிச்சயப்பட்டதனால், அவளை வேறிடத்துக்கு அனுப்ப தாயாருக்கு இஷ்டமில்லை. தவிர, புது இடத்தில் அநேக அசௌகரியங்களுண்டாகும். எப்படியும் ஒரு முடிவு செய்வதற்குப் பலநாட்கள் பிடித்தன. தன்னைப்பற்றி ஒரு தீர்மானத்துக்கும் வராததுபற்றி அல்போன்ஸாளுக்கு மிகுந்த வருத்தம். இருந்தாலும் முறைப்பாடாக ஒரு வார்த்தைகூட அவள் சொன்னதில்லை; பொறுமையையும் இழந்து போகவில்லை. என்றாலும், பலதடவை அதைப்பற்றி கண்ணீர் சிந்தியது உண்டு.

# ஐந்தாம் அதிகாரம்

அல்போன்ஸா, தனக்குக் கொஞ்சம் சுகமானவுடனே, பக்கத்தில் ஒருவரும் துணைக்கு வேண்டாம் என்று சொல்லிவிடுவாள். மற்றவர்கள் சபை ஒழுங்குகளை அநுசரிப்பதற்கு, தான் அவசரமில்லாமல் தடங்கலா யிருக்கக்கூடாது என்பது அவள் கருத்து. ஒரு நாள், சாயங்காலவேளை, எல்லாரும் கோவிலுக்குப் போய்விட்டார்கள். அல்போன்ஸா தனக்கு உதவி செய்துகொண்டிருந்த சகோதரியையும் கோவிலுக்குப் போகும்படி சொல்லிவிட்டாள். அவளும் தியானம் செய்வதற்காக, பாடுபட்ட சுருபத்தைக் கையில் எடுத்தாள். சமீபத்தில், யாரோ கஷ்டத்தோடு மூச்சு விடுவதுபோல் சப்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தாள்: படுக்கைக்குப் பக்கத்தில் குரூர பார்வையோடு ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அவனைப் பார்த்ததுதான், அல்போன்ஸாளுக்கு உடலெல்லாம் பயத்தால் நடுங்கிப்போனது. உடனே பாடுபட்ட சுருபத்தை உயர்த்திப் பிடித்துக்கொண்டு, " எனக்கு ஒரு துன்பமும் செய்யாதே. உடனே போய்விடு " என்று கத்தினாள். அவனும் திகைப்புடன் ஒன்றும் சொல்லாமலே, திரும்பிப் போய்விட்டான்.

அல்போன்ஸாளை பயம் குலுக்கிவிட்டது. நடக்கச் சக்தியின்றி பலவீனமாயிருந்த அவள் படுக்கையைவிட்டு எழுந்து, தவழ்ந்துகொண்டே விராந்தாவுக்கு வந்தாள். ஜெபம் முடிந்து கோவிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த சகோதரிகள் அவளைக் கண்டதும், அவளுக்கு உதவி செய்யும்படியாக ஓடினார்கள். அவளுக்கு பேச்சு எழவில்லை; திரேகமெல்லாம் நடுக்கம். அவளை படுக்கைக்

குத் தூக்கிக்கொண்டு போகும்போது, வாசலறையை நோக்கிக் கையைக் காட்டினுள். அவள் வாய்க்குள்ளேயே முனவிக்கொண்டதைப் பார்த்து, வியாதியின் அகோரத்தினுல் புலம்புகிருள் என்று நினைத்துக்கொண்டார்கள். வாசலறைக்குச் சென்று பார்த்தபிறகுதான் உண்மை விளங்கிற்று. கள்ளன் மடத்தில் திருடி வைத்திருந்த சாமான்களெல்லாம் அங்கே இருந்தன. அவன் அவைகளை அங்கேயே வைத்துவிட்டு பயத்தினுல் ஓடிப்போயிருக்க வேண்டும்.

அல்போன்ஸா சகோதரி பலவீனத்தாலும் பயத்தினுலும் சுயாதீனத்தையே இழந்துவிடுவாள் போலிருந்தது. அவளுக்கருகில் எப்போதும் வந்து போய்க்கொண்டிருந்த சில சகோதரிகளைத்தான் அடையாளம் கண்டுகொள்ளக்கூடும். புதிதாக யாரும் வந்தால் அவள் மனதில் சங்கடப்படுவதாகத் தெரியும்; அங்குமிங்கும் அலட்டிக்கொள்வாள். இவ்விதம் ஞாபகசக்தி குறைந்துகொண்டே வந்தது. ஒன்றும் வாசிக்க முடியாது; ஜெபம் செய்வதும் கஷ்டம்; சிலுவை வரைந்துகொள்வதற்கு முதலாய் சிரமப்பட்டாள். சாப்பாடு செல்லவில்லை. தூக்கத்தினுல் கொஞ்சம் அமைதி ஏற்படலாம் என்ருலும், அதற்கும் வழியில்லை; அவளுக்குத் தூக்கமேவராது. ஒரு குழந்தையைப்போல எப்போதும் பினற்றிக் கொண்டேயிருந்தாள். அவளுடைய பினற்றுதல்களிலும் சர்வேசுரனைப்பற்றிய புகழ்ச்சிகளே வெளிப்பட்டன.

உலக காரியங்களெல்லாம் அவள் கவனத்துக்கு மறைந்துவிட்டன. பிரஜ்ஞையுள்ள நேரங்களில் சருவேசுரனைப்பற்றிப் பேசுவாள்; தன்னைப் பார்க்க வந்தவர்களுக்குப் புத்திமதிகளும் சொல்வாள். சிலசமயங்களில் மயக்கம் வந்துவிடும். அப்போதும் அவளுடைய வார்த்தைகளைக் கவனித்தால், ஒன்றில் பிறருக்காக சருவேசுரனை மன்ருடுவதாயிருக்கும். அல்லது சருவேசுரனேடு சம்பாஷிப்பதாயிருக்கும்.

"எனது சிநேகத்தின் கர்த்தாவே, சகலத்தையும் விட்டு உம்மை பின்பற்றியவர்களுக்கு சம்பாவனை தருவே னென்று நீர் வாக்குத்தத்தம் செய்யவில்லையா ? எல்லாக் காரியங்களிலும் நான் என் மனதை ஒறுத்துவிட்டு, உம் மைப் பின்பற்றி வரவில்லையா ? எப்போதும் உமது சித் தத்தை நிறைவேற்றுவதிலேயே கண்ணும் கருத்துமா யிருந்திருக்கிறேனே. நீர் எனது ஜெபங்களையும் மன் றாட்டுக்களையும் கேட்டருளமாட்டீரா ! உமது சிநேகத்தி னிமித்தம் துன்பப்படுகிறவர்களுக்கு, உமது வாக்குப்படி சன்மானமளிப்பீரல்லவா ! அப்படியானால் எனது மன் றாட்டுக்களையும் நீர் கேட்டருளவேண்டும். அவைகள் நிறைவேறும்வரை, நான் இவ்விடம்விட்டு நகரமாட் டேன். நான் சொல்லுவது நியாயமா இல்லையா ? ' எனது விருப்பத்தின்படி நீ நடந்தால் நானும் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுவேன்' என்று நீர் சீயோன் கத்தரீனம்மாளுக்குச் சொல்லவில்லையா? இந்த வார்த் தைகளை நான் முற்றிலும் நம்புகிறேன். நான் எப்போ தும் உமக்குப் பிரியமானவைகளையே செய்தேன் ; எல்லா வற்றிலும் உமது சித்தத்தையே நாடினேன். நீர் விரும் பினதை நான் எப்போதாவது செய்யாமல் போன துண்டா ? நான் கேட்பதை என் நீர் கொடுக்கக்கூடாது ? எனக்குப் பசிக்கவில்லை என்று சொல்லி, நான் உபவாச மாயிருந்ததெல்லாம் உமக்காகத்தானே ! எனக்குத் துன்பம் வருவித்தவர்களை நான் சிநேகித்தேனே, அதுவும் உமக்காகத்தானே." இவ்விதம் அவள் பினற்றிக்கொண் டிருந்தவைகளில், பிறருக்காகவும் ஜெபிப்பதுண்டு. "ஆண்டவரே, தெரியாமல் எனக்குத் தீங்கு தேடினவர் களை மன்னித்தருளும்" என்று சொல்லுவாள்.

அவளுக்குப் பிரியமான ஜெபம் :— "நீதியின் சூரிய னுகிய சேசுவே, உமது பிரகாசத்தின் கதிர்களை என்மீது வரவிடும் ; என் புத்திக்குப் பிரகாசமளித்து, என் எண் ணங்களைத் தெளிவித்தருளும். என்னை உமது சிநேகாக்

கினியினுல் தகனம் செய்து, உம்மோடு ஐக்கியப்படுத்தியருளும்—என்னே உம்மோடு ஒன்றித்தருளும்" இவ்விதம் சொல்லிவிட்டு, பாடுபட்ட சுருபத்தை மார்போடு அணைத்துக்கொள்வாள்.

இராநேரங்களில், பிரஞையற்றுப் படுத்திருக்கும் போது, அடிக்கடி தேவ சிநேக முயற்சிகளைச் சொல்லிக் கொண்டிருப்பாள். நன்மை வாங்குவதற்கு உதவி செய்யும்படியாக தேவமாதாவையும் அர்ச்சியசிஷ்டவர்களையும் அழைப்பாள். நன்மை வாங்குவதுபோல பாவனை செய்து, நன்றியறிதல் முயற்சிகளேயும் சொல்லிக்கொள்வதுண்டு. இவ்வித சந்தர்ப்பங்களில் பக்கத்தில் நடப்பதொன்றும் அவளுக்குத் தெரியாது. சிலசமயங்களில் திடீரென்று கண்களைத் திறந்து, பக்கத்தில் இருப்பவர்களைப் பார்த்து, அன்பு ததும்ப அவர்களிடம் சருவேசுரனைப்பற்றி பேசுவாள்.

பிரஞையற்றிருந்த இந்தக்காலத்தில்தான் அவளிடமுள்ள உயர்ந்த ஞானம், பிறர்சிநேகம், பரித்தியாக சிந்தை, குழந்தைக்குரிய பரிசுத்தத்தனம், இவைகளெல்லாம் வெளிப்பட்டன. நவசந்நியாசத்தில் நடந்தவைகள் அடிக்கடி அவளுடைய மனதில் தோன்றும். வியாதி துன்பங்களைச் சகிப்பதற்கு உதவியாயிருந்த எண்ணங்களைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பாள். அவளைப்பற்றி சந்தேகங் கொண்டவர்களுக்கும் அவள் எவ்வளவு சிறந்த புண்ணியவதி என்று தெரிந்தது. அவளுடைய புண்ணிய ஜீவியத்தைப்பற்றி வெளி உலகிலும் பிரஸ்தாபம் உண்டானது. அதனுல் அவளைப் பார்க்கப் பலரும் வரத்துவக்கினர்கள். அவளுடைய முகத்தைப் பார்த்தாலே தெரியும், அவள் எவ்வளவு பரிசுத்தவதியென்று. குழந்தைகள்கூட இயல்பாகவே இதை அறிந்திருந்தார்கள்.

ஆகையால், அல்போன்ஸா சகோதரியின் பரிசுத்த தனம் வெளிப்பட ஏதுவாயிருந்தது, கள்ளனுல் அவ

ளுக்கு வந்த பயம் என்று சொல்லலாம். அந்தப் பயத்தி ைல் கண்ட ஜுரத்தின் விளைவாகவே, இவைகளெல்லாம் வெளிப்பட்டன. இதிலிருந்து எல்லாரும் அவளுக்கு மரியாதை காட்ட ஆரம்பித்தனர். அவளை சகோதரி என்று அழைப்பதைவிட, தாயார் என்று சொல்லுவதே சகஜமாய்ப்போய்விட்டது.

# ஆரும் அதிகாரம்

கள்ளன் பயத்தினுல் அல்போன்ஸா சகோதரிக்கு வந்த ஜுரம் நின்றதுதான், மிகுந்த வேதனையுள்ள வேறு வியாதி ஒன்று தோன்றினது. இதைப்பற்றி அவள் ஒரு வருக்கும் சொல்லவில்லை. இரண்டு கால்களிலும், சரீரத்தில் சில இடங்களிலும் வீக்கம் உண்டானது; அதோடு மேல் எரிவு. அசைவதே பெரும் வேதனையாயிருந்தது. ஆகாரம் செல்வது கஷ்டம்; மூச்சு விடுவதுகூட பிரயாசையாயிருந்தது. இந்த ஸ்திதியில் பல மாதங்கள் கழிந்தன. இதைப்பற்றி அவள் கூறுவதாவது :—

"என்னைச் சிலுவையில் கிடத்தியிருக்கிறது. ஆண்டவர் சிலுவையிலிருந்தபோது, தனது அங்கங்களைக் கொஞ்சமும் அசைக்க முடியாமலிருந்தார். ஒருபக்கம் திரும்பவும் அவரால் முடியாது; அவருக்குப் படுக்கையோ, தலையணையோ கிடையாது. சிலுவையைச் சுற்றி நின்றவர்களும் அவரைப் பரிகாசந்தான் செய்தார்கள். ஆனுல் எனக்கு, எத்தனைபேர் வந்து அநுதாபங் காட்டுகிருர்கள்! எவ்வளவு உபசாரம், என்ன ஆறுதலான வார்த்தைகள் ! இதைப்போலே நமதாண்டவருக்கு ஆறுதல் கூற யார் இருந்தது? நான் அவருடைய பத்தினி; என் பத்தாவின் அகோர வேதனை விதனங்களை நினைக்கும் போது, அவற்றிற்குமுன்னுல் எனது கஷ்டங்களெல்லாம் எவ்வளவு சொற்பம்! எனக்கு அவர் கொடுத்த துன்பங்களின் பாத்திரத்தை கடைசித் துளிவரை சந்தோஷமாய்க் குடிப்பேன். நான் தோற்றுப்போகவில்லை. ஆண்டவர் என்னைச் சோதிக்கிருர் ; இன்னும் எவ்வளவு அதிகமாகவானுலும் துன்பப்படத் தயாராயிருக்கிறேன். நான் தனியாக ஒன்றும் துன்பப்படுகிறதில்லையே! ஆண்டவர்

என்னோடு இருக்கிறார். இது ஒன்றே எனக்குப் போதும்; மற்றவைகளெல்லாம் சரியாயிருக்கும். என்னைப்பற்றி ஆண்டவர் ஒரு திட்டம் வகுத்திருக்கிறார் என்பது நிச்சயம். நான் இன்னும் அதிகமாக துன்பப்படவேண்டும்; இதுவரை அநுபவித்ததெல்லாம் போதாது. ஆண்டவரே, தேவரீர் எனக்குக் காட்டும் இரக்கத்துக்கு நான் என்ன கைமாறு காட்டப்போகிறேன்!"

அவள் எவ்வளவு சிநேக பற்றுதலோடு இந்த வார்த்தைகளைச் சொன்னாள் என்று கூறுவது துர்பலம். எவ்வித வருணிப்பும் அவள் இருதயத்தில் பற்றி எரிந்துகொண்டிருந்த தேவசிநேகத்தின் அளவைச் சொற்பமாகத்தான் காட்டமுடியும்.

அவளுக்குக் காலிலும் சரீரத்திலும் இருந்த விக்கம் நாளாவட்டத்தில் பெரும் ரணமாக மாறியது. "இது ஆறுவதற்கு வெகுநாள் செல்லும். அப்படி ஆறினாலுங் கூட, இதைத் தொடர்ந்து வேறு வியாதிகளும் ஏற்படலாம்" என்று டாக்டர் சொன்னார். மேலும், அவர் சொன்னதிலிருந்து அல்போன்ஸா மூன்று மாதத்துக்குமேல் பிழைத்திருப்பதும் கஷ்டம் என்று பயந்தார்கள். நாள் போகப்போக வேதனையும் அதிகரித்துக்கொண்டே வந்தது. அங்கிருந்தவர்களுள் மனக் கலக்கமின்றி தீர்க்கமாயிருந்தது அவள் ஒருத்திதான். அவளுடைய பெரிய கவலை தனக்குப் புஸ்தகம் ஒன்றும் வாசிக்கமுடியவில்லையே என்பதே. இருந்தாலும், "இன்னும் கொஞ்ச நாளைக்குத்தான், பிறகு வாசிக்க முடியும்" என்று தன்னைத் தேற்றிக்கொண்டாள்.

இவ்விதம் இருக்கும்போது, வந்திக்கத்தக்க கலாச்சேரி ஆண்டவரவர்கள் மடத்துக்கு வந்தார்கள். அல்போன்ஸாள் இருந்த நிலைமையைப் பார்த்து, இரா நேரத்தை எவ்விதம் போக்குகிறாய்" என்று கேட்டார். சகோதரி மௌனமாயிருந்தாள். மூன்றுதடவை திரும்பத் திரும்ப அதே கேள்வியைக் கேட்டபிறகுதான் பதில்

வந்தது. "நான் சிநேகிக்கிறேன்" என்றாள். மேற்றிராணியார் அதற்குப்பின் அவளை ஒன்றும் கேட்கவில்லை. ஆனால் திரும்பிப் போகுமுன் அவளைப் பார்த்து, "என்னுடைய மேற்றிராசனக் காரியங்களில், எனக்கு உதவியாக உன்னுடைய ஜெபத்தைத்தான் நம்பியிருக்கிறேன்." என்று சொல்லிவிட்டுப் போனார்.

மேற்றிராணியாருக்கு நம் சகோதரி மட்டில் அதிக மதிப்பு உண்டு. சங்கனச்சேரிக்குப் போனபிறகு, அவளுக்கு ஒரு கடிதமும், சில வெகுமதிகளும் அனுப்பினார். அவர் அனுப்பியவற்றில் அவளுக்கு அதிகப் பிரியமானது "சிநேகநாதன்" என்ற புத்தகம்.

மூன்று மாதத்துக்குள் அல்போன்ஸாளுக்கு உயிருக்கு ஆபத்து நேரலாம் என்று டாக்டர் சொல்லியிருந்தாரல்லவா? மூன்றும் மாதக் கடைசியில் அவளுடைய நிலைமை மிகவும் கவலைக்கிடமாயிருந்தது. இனிப்பிழைக்கமாட்டாள், மரணம் அடுத்து வந்துவிட்டது என்று நினைத்து, குருவானவரை அழைத்து அவஸ்தைபூசுதல் கொடுக்கச் செய்தார்கள். அவரும் கடைசித் தேவதிரவிய அநுமானங்களை நிறைவேற்றி, மரண நேரத்தில் கடைசி ஆசிர்வாதம் கொடுக்கும்படியாக, படுக்கையண்டையில் காத்திருந்தார். அல்போன்ஸாள் மட்டும், நான் இப்போது சாகமாட்டேன் என்ற தீர்க்கமான மனதோடு இருந்தாள். இன்னும் ஒரு விநாடியில் உயிர் போய்விடும் போலிருந்தது. சுவாமியாரும் கடைசி ஆசிர்வாதம் கொடுத்துவிட்டார். சில விநாடிகளுக்குப் பிறகு அல்போன்ஸா கண்களைத் திறந்தாள். பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்து, அன்பான மொழிகளில், "உங்களுக்கென்ன அவ்வளவு ஆத்திரம்; கடைசி ஆசிர்வாதம் கொடுக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லையா?" என்று சிரித்துக்கொண்டு கேட்டாள்.

அபாயம் நீங்கினது. அர்ச். குழந்தை தெரசம்மாள் மரித்த வருஷாந்தர தினம், செப்டம்பர் மாதம் 30-ம் தேதி

யும், சமீபித்தது. "அன்று புஸ்தகம் வாசிப்பதற்கு சருவேசுரன் எனக்கு சக்தி தருவார்" என்று சொல்லிக்கொண்டுவந்தாள். அந்த நாளில், தன்னைக் கவனித்து வந்த சகோதரியைப் பார்த்து, வாசிக்க ஒரு புஸ்தகம் கொண்டுவாருங்கள் என்று கேட்டாள். அவள் ஒரு புஸ்தகம் பார்த்து பதினொன்றரை மாதங்கள். புஸ்தகம் வந்ததும் தெளிவாக வாசித்துப் பொருளும் சொன்னாள். உடனே அவளும் கூடஇருந்த சகோதரியும் சருவேசுரனுக்கு நன்றி செலுத்தினார்கள். இதைக் கேள்விப்பட்ட சகோதரிகள் எல்லாருக்கும் ரொம்பச் சந்தோஷம்.

சிலதினங்களில் அல்போன்ஸாளுக்கு கொஞ்சம் சாப்பிடவும் முடிந்தது; அதுவும் மற்றவர்களோடு பந்தியில் போய்ச் சாப்பிட்டாள். "மற்றவர்களோடு பந்தியில் அமர்ந்து புசிக்கும் சாதாரண போஜனமே எனக்கு அதிகப் பிடித்தம். இந்தச் சாப்பாட்டுக்குத்தான் சருவேசுரனுடைய விசேஷ ஆசீர்வாதமுண்டு. இதைப் புசிப்பது எனக்கு ஒரு விக்கினமும் செய்யாது" என்று சொன்னாள்.

வாசிக்கும் சக்தியை நம் சகோதரி திடீரென்று திரும்பவும் அடைந்தது ஒரு அற்புதமே. அதோடு தமிழ் புஸ்தகங்களை வாசிக்கும் வரமும் பெற்றாள். இதற்குமுன் அவளுக்குத் தமிழ் அச்சரங்களும், வார்த்தைகளும் தெரியவே தெரியாது. சில சகோதரிகள் தமிழில் ஞான வாசகம் வாசித்து, அவளை மகிழ்வித்தார்கள். அவளே சில சமயங்களில் புஸ்தகத்தை வாங்கி வாசிப்பதும் உண்டு. இதைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? "நீங்கள் தமிழ் வாசிப்பதற்கு எப்படி அறிந்துகொண்டீர்கள்" என்று கேட்டால், அவளுக்கும் என்ன பதில் சொல்வதென்று தெரியாது. "புஸ்தகத்தைப் பார்க்கும்போது எனக்குத் தெரிகிறது" என்பாள். இதற்குப்பிறகு சுவாமிமாரும், அவளைப் பார்க்க வருபவர்களும், தமிழ் புஸ்தகங்களை வாசித்து, அர்த்தம் சொல்லும்படி அடிக்கடி கேட்பார்கள்.

கொஞ்சம் சுகமானதுதான், அவளிடம் ஆலோசனை கள், புத்திமதிகள் கேட்பதற்காக அநேகர் வரத் துவக்கி ஞர்கள். அவளும் ஒவ்வொருவருடைய கஷ்டத்தையும் அறிந்து, ஏற்றபடி ஆலோசனைகள் சொல்வாள். தன்னி டம் வருபவர் யாராயிருந்தாலும், அவர்களிடமிருந்தும் நல்ல படிப்பினைகளை அறிந்துகொள்ள வேண்டுமென்பது அவளுடைய ஆசை. அநேகர் அவளை நாடி ஆலோசனை கள் கேட்கப் போனார்கள் என்பதே, அவளுடைய உயர்ந்த பரிசுத்ததனத்துக்கும், ஆழ்ந்த தாழ்ச்சிக்கும் அத்தாட்சி. தன்னைப்பற்றி அவள் பெருமையாக எண் ணிக்கொண்டிருந்தாளென்ருல், யார் அவளிடம் இவ்விதம் நெருங்கிப் போவார்கள்.

இயல்பாகவே அல்போன்ஸாளுக்கு மற்றவர்கள் மட் டில் ஒரு வாஞ்சையுண்டு. இந்த வாஞ்சையே நாளா வட்டத்தில் பிறர்சிநேகமாகப் பர்ணமித்து, சாங்கோ பாங்கத்தில் அவளை உயரும்படி செய்தது. அவளிடம் போகிறவர்கள் எல்லாரும் தங்களுக்காக ஜெபிக்கும்படி அவளைக் கேட்பார்கள். அவளும் யாருடைய விருப்பத் தையும் மறுப்பதில்லை. ஒரு எச்சரிக்கை மட்டும் அவர் களுக்குச் சொல்வாள்: என்னுடைய ஜெபத்தினல் உங்க ளுக்கு அதிகமான சிலுவைகள்தான் வரும். அவைகளைச் சுமக்கப் பிரியமானல் சொல்லுங்கள், உங்களுக்காக வேண்டிக்கொள்கிறேன்" என்பாள். 1944-ஜனுவரி-20ந் தேதி ஒரு குருவானவருக்கு அவள் எழுதியதாவது: "நான் உங்களுக்காக ஜெபித்தால், அதன் பலன் அதிக மான சிலுவைகளாகவே இருக்கும் என்று உங்களுக்கு ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். ஆனல் சிலுவைகள் அதிகரிக்கிற அளவுக்கு சிநேகமும், மனத்திடனும் அதி கரிக்குமென்று நம்புகிறேன்." இவ்விதம் சிலருக்கு அநே கம் சோதனைகளும் துன்பங்களும் வந்ததும் உண்டு. ஆனல் அவைகளைச் சகிக்கவும் அவர்கள் அதிக வரப்பிர சாதங்களை அடைந்துகொண்டார்களென்பதற்குச் சந் தேகமில்லை.



அல்போன்ஸாளின் மூத்த சகோதரி. இப்போது வயது 40
அல்போன்ஸாளுக்கு 2 வயதுக்கு மூத்தவள்
ஒரு அச்சில் வார்த்ததுபோல, ஒரே முகச்சாயலையுடையவர்கள்



சங். அல்போன்ஸா சகோதரியுடைய மூத்த சகோதரியின் மகள். பதினாறு வயதில் அல்போன்ஸா எப்படியிருந்திருப்பாள் என்று பார்க்கவேண்டுமானால், இச்சிறு பெண்ணைப் பார்த்தால் போதும்

நம் சகோதரியின் மட்டில் சந்தேகங்கொண்டு, அவளைப்பற்றி குறை கூறிய சகோதரிகளும், அவளுக்கு ஜுரங் கண்டதிலிருந்து உண்மையை அறிந்துகொண்டார்களென்று பார்த்தோமல்லவா, அவர்கள் தனக்குச் செய்யும் உதவி உபசாரங்களை அன்போடும், நன்றியறிதலோடும் ஏற்றுக்கொண்டு, அவர்களிடம் நல்லெண்ணமும், பரஸ்பர ஐக்கியமும் நிலைத்திருக்கவேண்டுமென்று பிரயாசைப்பட்டாள். சிலர் தாங்கள் அவள்மீது துவேஷம் காட்டியது தப்பிதம் என்று உணர்ந்து கொண்டதை யறிய அவளுக்கு மிகுந்த ஆறுதல். ஆனால், இன்னும் தன்னைப்பற்றி சந்தேகித்து, தப்பபிப்பிராயத்தோடு இருப்பவர்களைக் காணும்போது, அவளுக்கு மிகுந்த மனக்கஸ்தி யுண்டாகும். அவர்களோடும் சமாதானமாய்ப் போகும்படி, பேச்சினாலும் செய்கையாலும் அதிக முயற்சி எடுத்துக்கொள்வாள். தன்மட்டில் வெறுப்பாயிருப்பவர்களை நன்றாகக் கவனிப்பதும், அவர்களை அதிகமாய் மதித்து உபசரிப்பதும் அவளுக்கு வழக்கம்.

ஒரு சமயம் அவளைப் பார்த்து, "உன்மீது வெறுப்பாயிருப்பவர்களையும், உன்னால் எப்படி இவ்வளவுதூரம் சிநேகிக்க முடிகிறது" என்று கேட்டபோது, அவள் சொன்னதாவது: "எனக்குத் துன்பம் வருவித்தவர்களையும், என்னைப்பற்றி அபாண்டமாய் குறை கூறினவர்களையும் சிநேகிப்பது, ஆரம்பத்தில் கஷ்டமாகத்தான் இருந்தது. அவர்களை ஏறிட்டுப் பார்ப்பதற்கு முதலாய் எனக்கு மனம் வராது. ஆனால் விடாமுயற்சியாலும், ஜெபத்தினாலும் இப்போது ஒரு கஷ்டமும் இல்லாமல் போய்விட்டது. அவர்கள்மட்டில் பிரியம் காட்டாமல் போனால்தான் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது" என்று சொன்னாள். நமதாண்டவருடைய கட்டளையைக் கடைப்பிடித்து, தனக்கு தீமை செய்தவர்களுக்கும் நன்மை செய்து வந்தாள் நம் சகோதரி. அவள் அடைந்த எல்லாப் பேறுபலன்களையும், தன்மீது வெறுப்புக்கொண்ட வியாதியாயிருந்த ஒரு சகோதரிக்காக ஒப்புக்கொடுத்து

வந்தாள். இந்த சகோதரிக்காக அவள் செய்த ஒறுத்தல் முயற்சிகள் அநேகம்; அவளைச் சந்தோஷிப்பிக்க, அல்லது அவளுடைய ஆறுதலுக்காக, தன்னால் ஆனதெல்லாம் செய்வாள். இவைகளையெல்லாம் பார்த்து, ஒரு நாள் அந்தச் சகோதரியே அல்போன்ஸாளைப் பார்த்து, "சகோதரி, எனக்காக நீங்கள் எவ்வளவு சிரமப்படுகிறீர்கள்! நான் உங்கள் மனம் நோகும்படி எவ்வளவோ செய்திருக்கிறேன். என்மீது இவ்வளவு பக்ஷம் காட்டும்படி உங்களைத் தூண்டுவது, உங்களிடமுள்ள தேவசிநேகமே என்று இப்போதுதான் உணருகிறேன்" என்று சொல்ல நேர்ந்தது.

வியாதி நீங்கி சுகமடைந்து வரும்போதுதான், இந்தப் பிறர்சிநேகம் இன்னும் அதிகமாக வெளியாயிற்று. தனக்குத் தேவையான பொருட்களைக்கூட மற்றவர்களுக்குக் கொடுத்துவிடுவாள். "உங்களுடைய பிறர்சிநேகம் மட்டுக் கடந்து போகிறதே" என்று யாரும் கேட்டால், "எனக்கு ரொம்ப அவசரமாயிருக்கும்போது, எனக்கு எப்படியாவது கிடைக்கும். மற்றவர்களுக்குக் கொடுப்பதால், நமக்கு எதுவும் குறைந்துபோகாது; நாம் கொடுப்பதைவிட, நமக்கு அதிகமே கிடைக்கும். இது நான் அநுபவத்தில் கண்டறிந்த உண்மை. ஆகையால், இதுவிஷயத்தில் என்னை சும்மா விட்டுவிடுங்கள்" என்பாள். அவள் சொன்னதுபோலவே பல சமயங்களிலும் சம்பவித்தது. அவளுக்குப் பிரத்தியேகமாக வேண்டிய ஆகாரம் சில சமயம் இல்லாமல் போகும். அப்போது எதிர்பாராத விதமாய்க் கிடைத்திருப்பதாகச் சொல்கிறார்கள்.

# ஏழாம் அதிகாரம்

காய்ச்சலின் கொடுமையினின்றும் குணமானபிறகு, மூன்று வருஷம் பெரும் வியாதி ஒன்றுமின்றி, அல் போன்ஸா சகோதரி அமைதியாயிருந்தாள். இடைவி டாத ஜெபத்தினுலும், அடிக்கடி தன்னைத்தானே தேவசித் தத்துக்கு ஒப்புக் கொடுத்த பரித்தியாகத்தினுலும், சோதனை துன்பங்களை ஜெயிப்பது அவளுக்குக் கடினமா கத் தோன்றவில்லை. துன்பங்களைச் சகிப்பதே, தேவ சிநேகத்தையடைய உத்தம மார்க்கம் என்பது அவளு டைய கருத்து. அதனுல், துன்ப துயரங்கள் இல்லாவிட் டால்தான் அவளுக்குக் கவலை. "மடத்தில் மற்றவர்க ளுக்கெல்லாம் பல கஷ்டங்களிருக்கின்றன. எனக்கு மட் டும் ஒன்றும் கிடையாது. இதனுல் நான் சருவேசுரனுக் குக் காட்டவேண்டிய சிநேகத்தின் பற்றுதலை இழந்து போகிறேன்; அதோடு வரும் வரப்பிரசாதங்களும் எனக் குக் கிட்டாமல் போகின்றன." என்று முறைப்படுவது போல சொல்கிருள். இதுவரை, பல வருஷங்களாக அவள் அநுபவித்துவந்த வியாதி, நோவுகள், தூக்க மின்மை, அடிக்கடி வந்துகொண்டிருந்த ரணம், காய்ச் சல் எல்லாம் ஒன்றுமில்லாதது போல தோன்றின. வேதனை நோக்காடுகள்தான், தன்னைப் பரிசுத்தப்படுத்தி, கிறீஸ்துநாதரோடு அதிகமாக ஒன்றிக்கும் மார்க்கம் என் பதால், அவைகளை ஆசித்து வேண்டிக்கொள்வாள். துன்ப துயரங்களே அவளுடைய ஜீவியத்தில் பிரதான அம்ச மாயிருக்கவேண்டும் என்பது அவளுடைய மன்ருட்டு. இவ்வித ஜெபம் கேட்கப்படும் என்பதையும் அவள் அறி வாள்.

1945-ம் வருஷம், ஜூலை மாதம் அவளுக்கு ஒரு புது விதமான வியாதி ஆரம்பித்தது. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு அதிசயமான கொடிய வேதனை உண்டாகும். அதன் ஆரம்பத்தில் இடையில்லாமல், அநேகந் தடவை வாந்தி பண்ணும். சாதாரணமாய் ஐம்பது முதல் நூறு தடவைகள்வரை வாந்தி பண்ணுவதுண்டு. சில சமயங்களில் நூறு தடவைகளுக்கு மேலும் வாந்தி பண்ணியிருக்கிறாளாம்! வாந்தியினால் திரேகமெல்லாம் ஒடுங்கி குறுகிப் போய்விடும். வாந்தி பண்ணுவது சளியும் தண்ணீரும்; அது பல வர்ணம் கலந்து, வானவில் நிறத்தில் தோன்றுமாம். வாந்தியினால் சரீரமெல்லாம் பனிக்கட்டியைப் போலக் குளிர்ந்து, சில்லிட்டுப் போகும். விடாமல் வியர்வை கொட்டும். அதனால் துணிகளும், படுக்கையுமே நனைந்து போவதுண்டு. பின் அகோர வலிப்பும் இசிவும் அவளுடைய சரீரத்தை உலுக்கி எடுத்துவிடும். அவள் அந்த நேரத்தில் படும்பாட்டைப் பார்த்துக்கொண்டிருந்தவர்களே, அவள் எவ்வளவு கொடிய வேதனையை அநுபவித்தாள் என்று வார்த்தைகளினால் வருணிக்க முடியாது என்கிறார்கள். பக்கத்தில் நிற்பவர்கள் அந்த வாதனைகளைப் பார்க்கமுடியாமல், அழுதுகொண்டு வெளியே போய்விடுவார்களாம். இவ்வித கொடிய வேதனை மூன்று மணிமுதல் எழு மணிநேரம் வரை நீளித்திருக்கும். அதற்குப் பிறகு களைத்து சோர்ந்துபோய், செத்துப்போனவள் மாதிரி படுத்திருப்பாள். முகம் வெளுத்துப் பசையற்றுப்போகும். கண்களைத் திறக்க முடியாது. ஒரு விரலை அசைப்பதற்கு முதலாய் அவளிடம் சக்தியிராது. பல சமயங்களில் இறந்து போவாள் என்று பயந்து போவார்கள். ஒரு நாள் இவ்விதம் ஸ்மரணையற்றுப் படுத்திருக்கும்போது, இனி பிழைக்கமாட்டாள் என்று சுவாமியாரைக் கூப்பிட்டு அவஸ்தை கொடுத்துவிட்டார்கள். அவ்வளவு கொடிய வேதனை. வேதனை நீங்கி, மயக்கந் தெளிந்தபின், தான்பட்ட அவஸ்தைகளைப்பற்றிய விபர

மான ஞாபகம் ஒன்றும் அவளுக்கிராது. ஏதோ பெரும் உபாதைகளை அநுபவித்ததுபோன்ற ஒரு பொதுவான உணர்ச்சிதான் இருக்கும்.

இந்த வேதனைக்குப்பிறகு, அவளுக்குப் பசி எடுத்தாலும் சாப்பிட முடியாது; மருந்துகூட வாந்தி பண்ணிவிடும். திவ்விய நற்கருணையும் வாரம் ஒரு முறைக்கு மேல் கொடுக்கக்கூடாது என்று சிரேஷ்டர்கள் கட்டளையிட்டிருந்தார்கள். இதைப்பற்றி அவளுக்குச் சொல்லி முடியாத வருத்தம். "என் ஆண்டவர் இல்லாமல் நான் எப்படி ஜீவிப்பேன்" என்று சலித்துக்கொள்வாள். "எனக்குக் கஷ்டமான வேளைகளில் அவைகளை நான் சகித்துக் கொள்ளும்படி எனக்கு உறுதி தர ஆண்டவர் என்னிடம் எழுந்தருளி வரவேண்டாமா? நன்மை வாங்கக்கூடிய ஸ்திதியில் மட்டும் நான் இருப்பேனுனல்!" என்று சொல்லிக்கொள்வாள். "அடிக்கடி நன்மை வாங்கும் பாக்கியம் கிடைக்கும்படி ஏன் ஆண்டவரிடம் மன்ருடக்கூடாது?" என்று பலரும் கேட்டார்கள். அதற்காக ஜெபம் செய்வதற்கு, முதலில் கொஞ்சம் தத்தளித்தாள். துன்பமும் நோவும் வேண்டுமென்று விரும்பிக் கேட்டுக்கொண்டது அவள்தானல்லவா? பிறகு, வாரத்தில் மூன்று நாளாவது நன்மை வாங்கும் வரம் கிடைக்க வேண்டுமென்று ஜெபித்தாள். அந்த வரமும் உடனே அருளப்பட்டது.

எவ்வளவுதான் வியாதியால் அவஸ்தைப்பட்டாலும், அவளுடைய தோற்றம் கொஞ்சமும் மாறவில்லை. முகத்தில் கொஞ்சம் களைப்பின் அடையாளம் தோன்றும். அவளைப் பார்க்க வந்தவர்கள், அவளுடைய முகத்தில் தோன்றும் மோக்ஷ சமாதானத்தையும் அமைதியையும் பார்த்து, அவள் வியாதிக்காரி என்பதையே மறந்துபோய், வெகு நேரம் அவளோடு பேசிக் கொண்டிருந்துவிடுவார்கள்.

தனக்கு வரும் இந்தக் கொடிய வேதனைகளால் மற்றவர்களுக்குக் கஷ்டம் ஏற்படாதபடி, சில குறிப்பிட்ட

நேரங்களில்தான் அவை வரவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். இதையறிந்த சிரேஷ்டத்தாயார், ஏன் பூரண சுகமடையும்படி வேண்டிக் கொள்ளக்கூடாது என்று கேட்டார்கள். அதற்கு அல்போன்ஸா சொன்னதாவது : " தாயாரே, இது மட்டுமல்ல, வேறு என்ன வேதனைகள் வந்தாலும், அநுபவிக்கத் தயாராயிருக்கிறேன். தற்கால உலகம் இன்பத்தை நாடி பாவத்தில் எவ்வளவு ஆழம் மூழ்கிப் போயிருக்கிறது என்று தெரியுமா ! ஆண்டவர் எனக்கு எது வேண்டுமானாலும் செய்யட்டும்: என்னை அவர் கீழேபோட்டு மிதித்தாலும் சரி, என் திரேகத்தை ஊடுருவக் குத்தினாலும் சரி, நான் அவருக்குப் பலியாக நேர்ந்து கொள்ளப்பட்ட ஒரு தாழ்ந்த வஸ்து. அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் உலகத்துக்காகவும், ஞான ஜீவியத்தில் அசமந்தமாயிருக்கும் குருக்கள், சந்நியாசிகள், கன்னியர், இவர்களுக்காகவும் நான் என்னைப் பலியாக ஒப்புக் கொடுக்கிறேன் " என்று கூறினாள்.

இந்தக் காலத்தில்தான், மற்றவர்கள் வியாதியாயிருந்ததைப் பார்த்து, அவர்களுடைய வேலைக்குத் தடங்கலாயிருக்கும் வியாதி தனக்கு வந்துவிட்டால், நல்லது என்று வேண்டிக் கொண்டாள். சங்கனாச்சேரி மேற்றிராணியாருக்கு மலேரியா ஜுரம் கண்டிருந்தது. பர்ணஞானம் மடத்திலும் ஒரு சகோதரி அதே வியாதியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். இதையறிந்த அல்போன்ஸா மனதில் ஒரு எண்ணம் பிறந்தது : " மேற்றிராணியார் எவ்வளவோ கணக்கற்ற அலுவல்களைக் கவனிக்க வேண்டியிருக்கும். இந்த சகோதரிக்கும் பள்ளிக்கூடத்தில் அதிக வேலை உண்டு. நான் நாள் முழுதும் படுக்கையில் சும்மா படுத்துக் கொண்டுதானே இருக்கிறேன்! வியாதி துன்பங்களை அநுபவிக்க வேண்டுமென்றே சருவேசுரன் என்னைத் தெரிந்து கொண்டிருக்கிறார். அதனால் இவர்களுடைய வியாதியையும் எனக்குத் தரும்படி சருவேசுரனை மன்றாடுவேன். அவருக்குச்

சித்தமானால் நான் அநுபவிக்கத் தயார்" என்று, அதற்காக வேண்டிக் கொண்டாள். அவளுடைய மன்றாட்டின் படி, இரண்டுபேரும் சீக்கிரம் சுகப்பட்டார்கள்; அல்போன்ஸாளுக்கு முன்னிருந்த வியாதிகளோடு, மலேரியாக் காய்ச்சலும் கூடிக்கொண்டது. அதற்குப்பிறகு தனக்குக் காய்ச்சல் வந்ததில்லையென்று சங்கனச்சேரி, வந். காலாச்சேரி ஆண்டவரவர்களே அத்தாட்சி கூறியிருக்கிறார்கள்.

மலேரியாக் காய்ச்சல் கண்டபிறகு, அல்போன்ஸாளுக்கு ஏற்கனவே வந்துகொண்டிருந்த பெரும் வேதனைகள் ஒரு மாதமளவாக வரவில்லை. பிறகு பதினைந்து நாளைக்கு ஒரு தடவை, அதிக உக்கிரத்தோடு தாக்க ஆரம்பித்தது. அநேக சமயங்களில் இறந்து போவாள் என்று எண்ணினார்கள். பக்கத்தில் நிற்பவர்களுக்கு அவள் படும் பாட்டைப் பார்த்துக்கொண்டிருப்பது கஷ்டமாயிருந்தது. இதைப் பார்த்து தாயார் ஒரு நாள், "ஏன், அல்போன்ஸா இந்தக் கொடுமை உன்னைவிட்டு நீங்கிப் போகும்படி வேண்டிக் கொள்ளக்கூடாதா? அல்லது, அதன் உக்கிரமாவது கொஞ்சம் குறையும்படி வேண்டிக்கொள்ளேன்" என்று கேட்டார்கள். அதற்கு நம் சகோதரி அமரிக்கையாய், சாவதானத்தோடு சொல்வாள்: "தாயாரே, எனக்கும் அந்த வேதனைகளை நினைக்கும்போதே பயங்கரமாய்த்தான் இருக்கிறது. மற்றவர்களுக்கும் அதைப் பார்க்க கஷ்டமாய்த்தான் இருக்கும். ஆனால், இந்த அவஸ்தைகளையெல்லாம் அநுபவித்தபின், அடுத்த நாள் இரவு, எனக்குண்டாகும் பாக்கியானந்தத்தை நினைக்கும்போது, இந்த வேதனைகள் இன்னும் அடிக்கடி வராதா என்று ஆசிக்கிறேன். இவ்வளவு தேவலோக இன்பத்தை நான் இதற்குமுன் ஒருபோதும் அநுபவித்ததில்லை. வேதனை எவ்வளவு அதிகமாயிருக்கிறதோ, அவ்வளவு இந்தப் பாக்கியமும் அதிகமாயிருக்கும்."

அவள் அநுபவித்த இந்தப் பேரின்ப உணர்ச்சி எப்படிப்பட்டதென்று அவளால் முதலாய் சொல்லமுடியாது.

"வார்த்தைகளினால் அதை வருணிப்பதென்பது அசாத்தியம். எனது வேதனைகளுக்கு அடுத்த இரவு எனக்கு ஒருவித பரவசமான நிலைமை ஏற்படும். அப்போது நான் காணும் காட்சிகளை என்னென்று சொல்வது! நமதாண்டவர் என்னிடம் வருவதாகத் தோன்றுகிறது. அவர் தமது இருதயத்தின் அன்பையெல்லாம் என்மீது சொரிந்து, என்னைச் சந்தோஷத்தால் நிரப்புகிறார். என்னுடைய அறை முழுவதும் ஒரு தெய்வீகப் பிரகாசத்தால் நிரப்பப்பட்டிருக்கும். எனக்கு விபரமாக ஒன்றும் சொல்ல முடியவில்லை. அந்த நேரத்தில் நான் அநுபவிக்கும் ஆனந்தத்துக்குக் கணக்குமில்லை, அளவுமில்லை." இதுதான் அவள் சொல்லக் கூடியதெல்லாம்.

மலேரியா ஜுரம் ஆரம்பித்தபிறகு, கொஞ்சம் மன உறுதி தளர்ந்தவள்போல் காணப்பட்டாள். வழக்கமாய் வந்துகொண்டிருந்த வேதனைகளையும் வலிப்பையும்பற்றிப் பயப்பட்டாள்; பயத்தினால் மன அமைதியும் குறைந்தது. இனி முன்போல அதிக வேதனைகளை அநுவிக்க முடியாது என்ற அவநம்பிக்கையும் தலைகாட்டத் துவக்கியது. அதோடு அவளுடைய "ஆத்துமத்தின் இரவும்" ஆரம்பித்தது என்று சொல்லலாம். தனக்கு நம்பிக்கையுள்ளவர்களிடமிருந்து ஆறுதல் தேட ஆரம்பித்தாள். சருவேசுரனும் அவளுக்கு அவசியமான ஆறுதல்களைக் கொடுக்காமலில்லை. பல சமயங்களில் எதிர்பாராத இடங்களிலிருந்துகூட ஆறுதல்கள் வந்தன. ஒரு நாள் அர்ச். குழந்தை தெரசம்மாளின் அர்ச்சியசிஷ்ட பண்டம் ஒன்று இருந்தால் நல்லது என்ற நினைவு வந்தது. இரண்டொரு தினங்களில் தபால் மூலமாக அது அவளுக்குக் கிடைத்தது. பார்த்ததில், தனக்கு அது வேண்டும் என்ற எண்ணம் உண்டான அன்றைக்கே, தபாலில் வைக்கப்பட்டிருந்ததாக அறிந்தாள். அவளுக்கு ஊக்கமளிக்கும்படியாகவே, சமயாசமயங்களில் சருவேசுரன் இவ்வித ஆறுதல்களை அனுப்பி வந்தார்.

# எட்டாம் அதிகாரம்

ஆத்துமாக்கள் உத்தமதனத்தில் பிரவேசிக்கும் போது, துவக்கத்தில் அவர்களுக்கு மனோகரமான பல ஞான அநுபவங்கள் ஏற்படுவதுண்டு. சருவேசுரன் அவர்களுக்கு ஆறுதல்களையும், ஞான இன்பங்களையும் கொடுத்து, அவர்களுடைய மனது கவர்ச்சிகொள்ளும்படி செய்கிறார். உத்தமதனத்தில் மனம் பதிந்து, அவர்கள் வளர்ச்சியடைந்துகொண்டு வரும்போது, இந்த ஆறுதல்களையெல்லாம் இழந்துபோவது சகஜம். ஞான இன்ப உணர்ச்சி மாறி, மனவறட்சியும் கலக்கமும், சந்தேகமும் அவர்களை வாட்டிக்கொண்டிருக்கும். விசுவாசத்தின் சக்தி ஒன்றைக்கொண்டுதான் அவர்களுடைய ஞான ஜீவியம் நடைபெறும். சருவேசுரன் இவ்விதம் பரிசுத்த ஆத்துமாக்களை நடத்துவது அவர்கள் இன்னும் அதிகம் மனத் தூய்மையடையும்படியாக. சுயநலத்தின் சொற்பக் கலப்பும் இல்லாமல், தேவசிநேகத்தில் வளருவதற்காகவும், விசுவாசம் உறுதிப்படவும் சருவேசுரன் அவர்களுடைய ஜீவியத்தில் ஒரு ஞான இரவை வரவிடுவதுண்டு. மேலும், மனிதன் தன்னில்தானே ஒன்றுமில்லாதவன், தேவ உதவியின்றி சுபாவத்துக்கு மேலான காரியம் ஒன்றும் செய்யமுடியாது, என்று அவர்களுக்கு அறிவுறுத்தவும் இது உதவும்.

அர்ச். குழந்தைதெரசம்மாளும் தனது சுய சரிதையில் இந்த ஞான இரவைப்பற்றி தெளிவாக விவரிக்கிறாள். அவளுடைய மனதில் ஒரு வருஷமளவாக விசுவாசத்துக்கு விரோதமான அநேகம் சந்தேகங்கள் மொய்த்துக்கொண்டிருந்தன. மிகுந்த மன்வறட்சியினாலும் கலக்கத்தினாலும் வருந்தினாள். அக்காலத்தைப்பற்றி

அவள் எழுதுவதாவது: "அடர்ந்த இருட்டில் நடக்கும்படி சருவேசுரன் என்னை விட்டுவிட்டார். மோக்ஷமென்ருல் ஒருகாலத்தில் எத்தனையோ இன்ப உணர்ச்சிகள் என் மனதில் சுரக்கும்; இப்போது அந்த எண்ணமே பெரும் வாதனையைத் தருகிறது. எனக்கிருக்கும் மன வறட்சியையும் கலக்கத்தையும் என்னுல் வருணிக்க முடியாது. அந்த இருளடர்ந்த சுரங்கத்துக்குள் இறங்கினவர்களுக்குத்தான் அது இன்னதென்று தெரியும்" என்கிருள். நமதாண்டவர் சிலுவையில் தொங்கிக்கொண்டிருந்தபோது, சொற்ப நேரமாவது, அவருடைய மனதும் இந்த இராமார்க்கத்தில் போய்க் கொண்டிருந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது.

அல்போன்ஸாளும் இந்த இரவுக்குத் தப்பவில்லை. சுமார் ஏழு வருஷங்களாக வியாதிகள் ஒன்றன்பின் ஒன்ருக வந்து கொண்டேயிருந்தன. அதனுல் அவளுக்கு எவ்வளவு உடல் நலிந்துபோயிற்று என்று யோசித்துக் கொள்ளலாம். சரியான அன்ன ஆகாரம் அருந்த முடியாது; இராத் தூக்கம் கிடையாது. இவற்ருேடு வெள்ளிக்கிழமைதோறும் உண்டாகும் கொடிய வேதனை. இவைகளால் உடல் குன்றி, நரம்புத் தளர்ச்சியடைந்திருந்தாள் என்ருல் ஆச்சரியமில்லை. நரம்புத் தளர்ச்சியால் சொல்லமுடியாத மனச் சஞ்சலங்களும் உண்டாயின. இந்த சஞ்சலங்களைப்பற்றி சங். ஞானப்பிரகாசியார் சுவாமியாருக்கு எழுதின கடிதங்களில் வெகு உருக்கமாகக் கூறுகிருள். சங். ஞானப்பிரகாசம் சுவாமியார், அல்போன்ஸா நவகன்னிகையாயிருக்கும்போது, அவளுக்கு ஆத்தும குருவாயிருந்தார். அவருக்குத் தனது உணர்வுகளையும் மன நிலையையும்பற்றி, பல சமயங்களில் கடிதம் எழுதியிருக்கிருள். அவரிடம் எப்போதும் திறந்த மனதாய் அவள் பேசுவது வழக்கம். கடிதங்களிலும் தனது உணர்வுகளையெல்லாம் அள்ளி இரைத்

திருப்பதாகத் தெரியும். 30 — 11 — 1943-ல் அவள் எழுதிய கடிதத்தில் தனது நரம்புத் தளர்ச்சியைப்பற்றி எழுதுகிறாள் :

"இந்த உலகப் பொருட்கள் எதுவையும் நான் அநுபவிக்கக் கூடாதென்பது சருவேசுரனுடைய சித்தம் என்று எனக்கு இப்போது நிச்சயமாய்த் தெரிகிறது; எனக்கும் அவைகளின்மீது விருப்பமில்லை. கஸ்தியும் துன்பமும் வரும்போது நான் மன அமரிக்கையை இழந்துபோவதும் கிடையாது. இருந்தாலும், எனக்கு ரொம்பவும் நரம்புத் தளர்ச்சியாயிருப்பதால், கஷ்டமான சந்தர்ப்பங்களில் என்மனம் ஒரு நிலையின்றி தத்தளிக்கிறது. எனக்கு உங்களுடைய ஆலோசனைகளும் புத்திமதிகளும் அதிகம் தேவை. அவைகளால் மனதுக்குத் தைரியமும், சகிக்கும் தன்மையும் உண்டாகி, மனத்தத்தளிப்பு மாறும். இந்த நரம்புத் தளர்ச்சியில்லாவிட்டால் ஒருவேளை நான் அகங்காரம் கொள்ளக்கூடும். இப்போது, எனது வேதனைகளுக்குப் பிறகு, நான் எவ்வளவு அற்பமானவள் என்று அறிந்துகொண்டேன். அதைப்பற்றி எனக்குச் சந்தோஷமே.

"ஆனால் ஒரு சந்தேகம் : இவ்விதம் சந்தோஷப்படுவதால், நான் அடையவேண்டிய பலன்களை இழந்துவிடுவேனோ! நான் சந்தோஷங்கொள்வது நியாயமென்றுதான் என் மனதில் படுகிறது. ஏனெனில் தேவ பராமரிப்பினால்தானே இவைகளெல்லாம் சம்பவிக்கின்றன! 'என் மதுர சேசுவே, உலகத்தின் சந்தோஷங்களையெல்லாம் எனக்குக் கசப்பாக மாற்றியருளும்' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறேன். இவ்விதம் வேண்டிக்கொண்டபிறகு, எனக்கு என்ன மனக் கசப்பு வந்தாலும், நான் வருந்துவதற்கு ஒரு முகாந்திரமும் இல்லையல்லவா! நீங்கள் ஒரு சமயம் எங்களுக்குச் சொன்ன புத்திமதி என் ஞாபகத்துக்கு வருகிறது. 'ஒரு தனவந்தன் ஏழையான ஒரு பெண்ணைத் தனக்கு மனைவியாகத்

தெரிந்துகொண்டால், அவனுடைய சுகதுக்கங்களில் அவளுக்கும் பங்கு உண்டல்லவா' என்று சொன்னீர்கள். எனது பத்தா உலகில் அநுபவித்தது துன்பமும் துயரமுந்தான். ஆகையால், நானும் துன்ப துயரங்களைப் பிரியத்தோடு ஏற்றுக்கொள்கிறேன். என் சரீரம் வேதனைகளால் துடித்தாலும், மனச் சமாதானத்தை நான் இழந்து போகவில்லை. என்னை முழுவதும் நான் என் தெய்விகப் பத்தாவுக்குக் கையளித்துவிட்டபடியால், கடந்த ஏழு வருஷங்களாக நான் அவருக்கு முற்றிலும் சொந்தமானவளாகவே ஜீவித்து வருகிறேன். இதுவெல்லாம் உங்களுக்குத் தெரியும். இப்போதும் ஆண்டவர் சித்தப்படி நடக்கத் தயாராயிருக்கிறேன். நான் விரும்புவது சௌக்கியமல்ல; அவருடைய சித்தம், அவருடைய சித்தம் என்னில் நிறைவேற வேண்டும்: இதுவே நான் ஆசிப்பது.

"இருந்தாலும் என் வியாதி கொஞ்சம் சௌக்கியமாகி, நடமாடக்கூடிய அளவாவது சுகமடைவேன் என்று நினைக்கிறேன். எனக்கு வேறு சிலுவைகளுமிருக்கின்றன; எதுவானாலும் எனக்குச் சந்தோஷமே. ஒரே ஒரு முறைப்பாடுதான் எனக்கு. என்னில் நிறைவேறிவரும் பலி, நான் ஆசிக்கிறபடி அவ்வளவு துரிதத்தில் நிறைவேறாதுபோல தோன்றுகிறது என்பதே நான் கூறும் முறைப்பாடு.

"என்னுடைய விருப்பு வெறுப்புக்கள் என்னவென்று ஒருவரும் அறியக்கூடாது. இதற்காக வேண்டிக்கொண்டும் வந்திருக்கிறேன். ஆனால் இப்போது எனக்கிருக்கும் வியாதியில் அவைகளை மறைப்பது கூடாதகாரியம். எனது விருப்பப்படி ஒன்றும் நடப்பதில்லை. எனக்கிருக்கும் நரம்புத் தளர்ச்சிமட்டும் குணமாகி, வேறு வியாதிகள் வந்தாலும், எனது கஷ்டங்களை அநேகமாய் ஒருவரும் அறிந்துகொள்ளமுடியாது. இதற்காக நான் வேண்டிக்கொண்டால், சருவேசுரன் எனது மன்றாட்

டைக் கேட்டருளுவாரென்ற நம்பிக்கையும் எனக்கிருக்கிறது. இருந்தாலும், என்ன செய்வதென்று எனக்குத் தோன்றவில்லை.

“ தாயார் பாடுதான் மிகவும் கஷ்டம். அவர்களுக்கு எந்தப் பக்கம் பார்த்தாலும் கவலையும் கஷ்டங்களுமே; அதோடு நானும் அவர்களுக்கு ஒரு சிலுவையாயிருக்கிறேன். அவர்களைப் பார்த்துப் பேசி, அவர்களுக்கு ஆறுதலாக இரண்டொரு வார்த்தைகள் சொன்னால் நல்லது என்று அடிக்கடி நினைவு வருகிறது. ஆனால் அப்படிச் செய்தால், எனது சுபாவ நாட்டத்துக்கு மிதமிஞ்சி இடங் கொடுப்பதாகுமோ என்று அஞ்சுகிறேன். அது நம தாண்டவருக்குப் பிரியப்படாது என்று அவ்வெண்ணத்தைத் தள்ளிப்போடுகிறேன். அவர்கள் மட்டில் எனக்கு எவ்வளவு பிரியமிருக்கிறது என்று உங்களுக்குத் தெரியும். இந்தப் பிரியமும் தேவசிநேகத்துக்குப் பங்கம் வருவிப்பதாயிருந்தால், இப்போதே அதை விட்டுவிடத் தயாராயிருக்கிறேன். இவைகளெல்லாம் சுயபட்சத்தினால் வரும் உணர்ச்சிகளாய் இருக்கலாமாகையால் உங்களுடைய அபிப்பிராயத்தை அறிய எனக்கு விருப்பம்.

“ இன்னொரு விஷயம்: நான் கேட்பது எதுவும் நல்ல சருவேசுரன் எனக்கு இல்லையென்று சொல்வது கிடையாது. இதை நினைக்க எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியுண்டாகிறது. ஒரு விசேஷ காரியங் குறித்து உங்களை ஒன்று கேட்கலாமென்று விரும்புகிறேன்; அதைக் கேட்கலாமா? அதாவது, எனக்கு இயல்பாக யார்மீதும் அன்பு பாராட்டும் சுபாவம் இருக்கிறதல்லவா, அது சருவேசுரனுக்குப் பிரியப்படாமலிருக்குமோ என்று அறிய எனக்கு விருப்பம். வேறு விசேஷமில்லை. இன்று காலையில்கூட நரம்புத் தளர்ச்சியினால் அதிகக் கஷ்டப்பட்டேன். அதன் விளைவாகவே என் மனதில் இருப்பதை வெளியிட்டு எழுதுகிறேன். தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள்.”

“ **சகோதரி அல்போன்ஸா** ”

சில சமயங்களில் அல்போன்ஸாளுக்குத் தனது வேதனை கஷ்டங்களைப்பற்றி கசப்பான எண்ணங்களுமுண்டாகும். அப்போதெல்லாம் சருவேசுரனுடைய நன்மைத்தனத்தை நினைத்துக் கொள்வாள். அவள் 20—11—1944-ல் எழுதிய கடிதம் இந்த உணர்ச்சியைக் காட்டுகிறது :

"எனது துன்பங்களின் வகைகளையும் அளவையும் எனதாண்டவரே அறிவார். மேல்பார்வைக்கு எனக்கு ஒரு கஷ்டமும் இல்லையென்றே மற்றவர்களுக்குத் தோன்றும். இருந்தாலும் ஆண்டவர் என்னை எவ்வளவு அன்பாய் சிநேகிக்கிறார்! அவருக்காக இந்தப் படுக்கையிலேயே கிடந்து, இந்த வியாதியை மட்டுமல்ல, வேறு எந்த வியாதி வருத்தங்களையும், உலக முடியுமட்டுமானாலும், மனப்பூர்வமாக அநுபவிக்க விரும்புகிறேன். எனது ஜீவியம் சருவேசுரனுக்கு ஒரு காணிக்கையாக இருக்க வேண்டும்; துன்ப வேதனைகளின் மூலமாய் எனது ஜீவியம் ஒரு பலிப் பொருளாக ஆகவேண்டுமென்பது சருவேசுரனுடைய சித்தம். இது எனக்கு இப்போது நன்றாகத் தெரிகிறது. இல்லாவிட்டால் நான் எவ்வளவோ காலத்துக்கு முன்னால் இறந்து போயிருப்பேன். எனது காணிக்கைகளைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அவர் ஏற்றுக் கொள்கிறார். என்றாலும் அதை நினைக்கும்போது எனக்குச் சந்தோஷமே. நீங்களும் என்னோடு சேர்ந்து அவருக்கு நன்றி செலுத்துங்கள். இதுவரை என் வியாகளின் மத்தியிலும், கொஞ்சமாவது ஆறுதல் இருந்துவந்தது. ஆனால் கடந்த இரண்டொரு வாரங்களாக, எனக்கு மனச் சஞ்சலமாயிருக்கிறது. இராப் பகலாய் வேதனை; ஒரு நிமிஷம் கழிவதும் சகிக்கமுடியாத கஷ்டமாயிருக்கிறது. சருவேசுரன் நீதியுள்ளவர்; இவைகளுக்கெல்லாம் அவர் பலன் தராமல் போகமாட்டார் என்ற எண்ணமே எனக்கு ஆறுதல்." **"சகோதரி அல்போன்ஸா"**

மனச் சஞ்சலங்கள் மட்டுமல்ல; மனவறட்சியும், தனது செய்கைகளைப்பற்றி அவைகள் சருவேசுரனுக்குப் பிரியமோ, இல்லையோ என்ற சந்தேகமும் உண்டாகும். இவற்றைவிட அதிக வாதனையான எண்ணம், எங்கே சருவேசுரன் தன்னைக் கைவிட்டுவிட்டாரோ என்ற உணர்ச்சி. இந்தச் சந்தர்ப்பங்களில் அர்ச். குழந்தை தெரசம்மாள் சொல்வதுபோல, விசுவாசத்தின் வலிமையினாலேயே ஜீவிக்க வேண்டியிருக்கும். தனக்கிருந்த மனவறட்சியைப்பற்றி அல்போன்ஸா கூறுவதாவது (14—3—1945):

"எனக்கு மிகவும் கஷ்டமான சமயம்; இன்னும் எனக்கு வேறு என்ன கஷ்டங்களெல்லாம் வரப்போகிறதோ யாருக்குத் தெரியும்? ஆண்டவர் என்னைக் கொஞ்சமும் இரக்கமில்லாமல் நடத்துகிறார். என் விஷயமாய் அவர் தமது கண்களை மூடிக்கொண்டிருக்கிறார் என்ற எண்ணங்கூட அடிக்கடி வந்துகொண்டிருக்கிறது. நான் என்ன செய்தாலும் அவரிடமிருந்து ஒரு பதிலுமில்லை. எனது நவசந்நியாச காலந் துவக்கி, இதுவரை ஒருபோதும் நான் இவ்விதமான வறட்சியை அநுபவித்தது கிடையாது. நான் தப்பிதமாகச் சொன்ன, அல்லது செய்த ஏதாவது ஒரு காரியத்துக்காக ஆண்டவர் என்னைக் கைவிட்டுவிட்டாரோ, என்னமோ. எனது நற்கிரிகைகளைப்பற்றி, அல்லது நான் இவ்வளவு துன்பங்களை அநுபவிக்கிறேனே, அதைப்பற்றி அவருக்குப் பிரியமா, இல்லையா என்பதைக்கூட எனக்கு அறிந்துகொள்ள முடியவில்லை. அவர் மட்டில் எனக்குச் சொற்ப சிநேகங்கூட இருப்பதாகத் தெரியவில்லை. அவர் கொடுத்த வரப்பிரசாதங்களுக்கு இணங்க நான் நடவாததால், அவர் என்னை இவ்விதம் தண்டிக்கிறார் போலிருக்கிறது. நான் என்ன செய்வது! எனக்கு ஒன்றும் தெரியவில்லை. என்னை முழுவதும் அவருக்கு ஒப்படைத்துவிட்டேன்; அவர் இஷ்டப்படி என்னை என்னவானாலும் செய்து கொள்ளட்டும். எனது மனதைச் சோதித்துப்

பார்த்தேன்; அவருக்கு மனம் நோக நான் ஏதாவது செய்திருப்பதாகத் தெரியவில்லை.

"எனக்கு இனி என்ன சம்பவிக்கும் என்பதைப்பற்றித்தான் அதிகக் கவலை. இவ்விதமான சஞ்சலத்துக்குரிய எண்ணங்களால் எனக்குத் தூக்கங்கூட கிடையாது. சாப்பிடவும் மனமில்லை. சரீரத்திலும் கொஞ்சங்கூட சுகமில்லை. என் நிலைமையை வார்த்தைகளால் எவ்விதம் வருணிப்பது! இந்தக் கலக்கமான நிலைமையில் நான் சாகக்கூடாது என்பதே என் ஆசையெல்லாம். மரணத்துக்கு முன், எப்படியும் என் மனச்சமாதானத்தை நான் அடைந்துகொள்ள வேண்டும். இந்த மனக்கலக்கம் வந்த நாளிலிருந்து, எது விஷயத்திலும் என் விருப்பப்படி நான் நடந்தது கிடையாது. நான் எனது வேதனைகளைச் சகித்துக் கொள்கிறேன்; பிறர் குற்றங்களையும் தாராளமாக மன்னிக்கிறேன். ஆனால் ஆண்டவர்மட்டும் என்னை கைவிட்டுவிட்டார் போலிருக்கிறது"

"சகோதரி அல்போன்ஸா"

இது மன வறட்சியினாலும், வெறுமையினாலும் அவதிப்படும் ஒரு ஆத்துமத்தின் அபயக்குரல். சிலுவையிலிருந்து நமதாண்டவர் கூவின அங்கலாய்ப்பின் எதிரொலி. இருந்தாலும் சருவேசுரன் ஒரு ஆத்துமத்தையும் அதன் சக்திக்கு மேலாகச் சோதிப்பதில்லை. அல்போன்ஸாளுக்கும் ஆறுதலான எண்ணங்களும் இல்லாமலில்லை. பின்வரும் கடிதம் தேவபராமரிப்பில் அவளுக்குண்டான நம்பிக்கையைக் காட்டும்.

*10—5—1945:* "நான் ஆண்டவருக்கு அதிகப் பிரியமுள்ளவளாக நடக்கும்படி எனக்காக வேண்டிக்கொள்ளுங்கள். என்னால் ஒன்றும் இயலாது என்பதை நான் உங்களுக்கு மறைக்கவில்லை. ஆண்டவருக்குப் பிரியப்படாத எதன்மீதும், நான் பற்றுதல் வைத்திருக்கக் கூடாது என்று நீங்கள் சொன்னீர்கள். எப்போதும்

இதை ஞாபகத்தில் வைத்து, அதன்படி நடக்க எனக்கு அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டு வருகிறேன். எனது பலவீனத்தினுல் வரும் குற்றங்குறைகளே, எனது நல்ல சருவேசுரன் மன்னித்துக் கொள்வாரென்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அவருக்குச் சித்தமானுல் என் வியாதி குணமாகட்டும் என்றும் வேண்டிக் கொள்கிறேன். இவ்விதம் வேண்டிக் கொள்வதைப்பற்றி எனக்கு மனதில் கலக்கம் இல்லே. இருந்தாலும் முன் இருந்ததுபோல அவ்வளவு பொறுமையும், சகிப்பும் இப்போது எனக்குக் கிடையாது. நவசந்நியாசத்தில் எனது விருப்பு வெறுப்புக்களே ஒருவரும் அறிந்தது கிடையாது.

"நேற்று முட்டுச்சிராயிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில்கண்ட ஒரு விஷயம் என் மன அமைதியைக்கலேத்து விட்டது. அதாவது, 'முன்னுல் நீங்கள் ஒரு குழந்தையைப்போல இருந்தீர்கள்; அப்படியே இப்போதும் இருப்பீர்களானுல் எங்களுக்குச்சந்தோஷமே. நீங்கள் முன்னிருந்ததுபோல, இப்போது துறவறத்திலும் இருந்துவர வேண்டுமென்பதே எனது ஆசையும் வேண்டுகோளும்.... கடவுள் ஒரு பரிசுத்த இருதயத்தை உங்களுக்குக்கொடுத்திருக்கிறுர்; அதைப் பழுதில்லாமல் காப்பாற்றவேண்டும்.' நான் கன்னியாஸ்திரியான பிறகு எவ்வளவு மாறிவிட்டேனென்று உங்களுக்குச்சொல்லவில்லேயா? நல்ல சருவேசுரன் என் குற்றங்களே மன்னித்துக்கொள்வார்."

"சகோதரி அல்போன்ஸா."

சிநேகம் தியாகத்தினுல் உறுதியடையும், தியாகத்தினுலேயே வளரும். சேசுவின்மட்டிலுள்ள சிநேகமும், அவருக்காகச்செய்யும் தியாகங்களினுலும், அவருடைய திரு இருதயத்துக்கு வரும் நிந்தையவமானங்களுக்குச் செய்யும் பரிகாரங்களாலும் அதிகரிக்கிறது. அவருடைய இருதயக்கஸ்தியை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்

வளவு குறைத்துவிடவேண்டுமென்பது அவர்மீது சினே கங்கொண்டவர்களுடைய ஆசை. அதனால் அவர்களுடைய வாட்கைக்கு அவசியமான தியாகங்களைமட்டுமல்ல, அதிக தபசுகளையும் தேடிச்செய்வார்கள். அல்போன்ஸாளும் தனக்கு ஏற்கனவே உள்ள பலவியாதிகள், துன்பங்கள் மட்டுமல்ல, இன்னும் எத்தனையோ வேதனைகளையும் துன்பங்களையும், உலகமுடியுவரையானாலும் அனுபவிக்கத்தயாராயிருந்தாள். அதற்கு இந்தச்சிநேகமே காரணம் கீழ்கண்ட இரு கடிதங்களிலும் அவளுக்கிருந்த கஷ்டங்கள் எவ்வளவென்றும், அவைகளினால் எவ்விதம் அவள் தேவசிநேகத்தில் வளர்ந்து வந்தாளென்றும் ஒரு சிறிது அறிந்து கொள்ளலாம்.

பெப்ருவரி, 1946.

"நான் என்னை முழுவதும் சேசுவுக்குக்காணிக்கையாக ஒப்புக்கொடுத்துவிட்டேன் அவர் இஷ்டம்போல என்னை நடத்தட்டும். இந்த உலகில் எனக்கு ஒரே ஒரு ஆசைதான்: சருவேசுரனுடைய சிநேகத்துக்காக வேதனை துன்பங்களை அனுபவித்து, அவ்விதம் அனுபவிப்பதால் உண்டாகும் இன்பத்தைக்காணவேண்டும் என்பதே. நெடு நாளாக எனக்குச்சரீர வேதனையோடு, மனக்கஸ்தியும் அதிகமாயிருக்கிறது. சில சமயங்களில் என் சக்திக்கும் மேற்பட்ட கஷ்டங்கள் வருவதாக உணருகிறேன். சகிக்கமுடியாமல், சில சமயங்களில் கண்ணீர்கூட வந்துவிடுகிறது. இந்தச்சிலுவைகளையெல்லாம் அனுப்புகிறவர், அவைகளை அனுபவிக்கச்சக்தியையும் தாவேண்டுமல்லவா! ஒரு முறைப்பாடுமில்லாமல், முழு மன அமைதியோடு, அவர் அனுப்புகிற சகலத்தையும் சகித்துக்கொள்ளவேண்டுமென்பதே எனது ஆசை. இதுவரையில் கூடிய மட்டும் மற்றவர்களுக்குத்தெரியாமல் சகித்துக்கொண்டு வந்திருக்கிறேன்.

"சுவாமி, எனக்கு மனக்கஸ்தி ஒன்றுமில்லை என்று சிலர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். நான் சிரேஷ்டர்களோ

டும் சகோதரிகளோடும் உற்சாகமாகப்பேசிப்பழகுவதால் அவர்கள் என்மீது விசேஷ பட்சம் காட்டுகிருர்கள் என்பது சிலருடைய அபிப்பிராயம். இதற்கு, எனது விருப்பு வெறுப்புகளேப் பிறர் அறியாவண்ணம், என்னே முற்றிலும் நான் தியாகம் செய்துவிட்டதே காரணமாயிருக்கலாம். நான் முறைப்பாடு ஒன்றும் சொல்லாததால், வியாதியாயிருப்பவர்களுக்குக்கூட, எனக்கு ஒரு கஷ்டமும் இல்லே என்ற எண்ணந்தான். எனக்கு சில சமயங்களில், முறைப்பாடு சொன்ஞல்தான் என்ன, என்ற சோதனே வருகிறது. இதுவரை நான் அவ்விதம் செய்ததில்லே.

"நான் உங்களேச்சந்தித்தபோது, எனது கஷ்டங்களேயெல்லாம் உங்களுக்கு விபரமாகச்சொல்லவேண்டுமென்று ஆசித்தேன். ஆனுல், அவைகளேயெல்லாம் சகிக்க சருவேசுரன் இதுவரை சக்தியைத்தரவில்லேயா, அவர் இன்னும் உறுதியைத்தருவார் என்றுநினேத்து, உங்களிடம் ஒன்றும் சொல்லவில்லே. எனக்குள்ள சோதனேகளேயும் கஷ்டங்களேயும் அறிந்தால், ஒரு வேளே வருத்தப்படுவீர்கள் என்ற எண்ணமும் என் மனதில் இருந்தது. நான் இவைகளேப்பற்றி உங்களிடம் ஒன்றும் சொல்லிக்கொள்ளாததால், இப்போது கஷ்டமாகத்தோன்றுகிறது. நான் இவைகளேப்பற்றி உங்களிடம் ஒன்றும் சொல்லாதது உங்கள் மட்டில் எனக்கு நம்பிக்கை இல்லாததால் என்று எண்ணவேண்டாம். தீயில் விழுந்த புழு சாகமாட்டாமல் துடியாய்த்துடிக்குமல்லவா, அப்படியே நானும் வேதனேயால் துடித்துக்கொண்டிருக்கிறேன். அவநம்பிக்கைகூட வந்தது. ஆனுல் உடனே மனஸ்தாபத்தோடு ஆண்டவரிடம் மன்னிப்புக்கேட்டு, எனது மனச்சமாதானத்தைத் திரும்பவும் அடைந்து கொண்டேன். எனக்கு வந்த கஷ்டங்களேவிட, இன்னும் அதிகக்கடினமான துன்பங்களேயும் நான் அநுபவிக்கவேண்டுமென்பது சருவேசுரனுடைய சித்தம். அவைகளால் எனக்கு மனக்கலக்கம் ஒன்றும் உண்டாகவில்லே. அதற்குமாருக, மனமகிழ்ச்சி

யோடு அவருக்கு நன்றி செலுத்துகிறேன். மனதில் ரொம்பவும் நெருக்கிடைப்பட்டபொழுது, ஒரு நாள் ஒரு புஸ்தகத்தை எடுத்து, அது திறந்த இடத்தில் வாசித்தேன். "உலகம் இன்பபோகங்களை நாடி, கணக்கற்ற பாவங்களில் உழன்று கொண்டிருப்பதைப்பார்க்க, என் இருதயம் துயரத்தால் நொருங்குண்டுபோகிறது. எனக்கு யார் ஆறுதல் தரக்கூடும்? உன்னை நான் சிநேகிப்பதுபோல, வேறு யாராவது உன்னைச்சிநேகிக்ககூடுமா? இருந்தாலும் நீ எனக்கு எவ்வளவு சொற்பப்பிரதியன்பைக்காட்டுகிறாய்! தெரிந்துகொள்ளபட்டவர்களுடைய இருதயத்திலிருந்து அரசாளவேண்டுமென்று நான் வருகிறேன். அவர்கள் தங்களுடைய பாவத்தால் என் இருதயத்தில் உண்டாக்கின காயத்தை, நீ உனது பற்றுதல் பிரமாணிக்கமுள்ள ஊழியத்தால் ஆற்றுவாயா? எனது இருதயத்துக்கு வந்துகொண்டிருக்கும் துயரங்களை ஆற்றுவதற்கு அநேகம் ஆத்துமாக்கள்தேவை."

"இந்த வாக்கியங்களை வாசித்ததும் என் மனதில் எழுந்த உணர்ச்சிகளின் வேகத்தை என்னவென்று சொல்வது! ஆண்டவருடைய இருதயத்தின் துயரங்களைப் போக்க, எனது கஸ்தி துன்பங்களைப்பொறுமையோடு சகித்துக்கொள்வேன் என்று பிரதிக்கினை செய்துகொண்டேன்.

"சுவாமி, இனிமேலாக அற்பக்குற்றங்களைக்கூட விலக்கி நடக்கப்பிரயாசைப்படுவேன். இருந்தாலும் என் ஆண்டவரை மனப்பூர்வமாக சிநேகிப்பதற்கு, என்னிடமுள்ள சில குற்றங்குறைகள் தடங்கலாயிருக்கின்றன. இதுவரை எனக்கு அதிகமாயிருந்தது சரீரவேதனை. ஆனல் இப்போது மனக்கஷ்டமும் அதிகமாகவே இருக்கிறது. இவற்றோடு சேர்ந்து என் இருதயத்தை நிரப்பிக்கொண்டிருப்பது பராக்குகள், திருப்தியின்மை, பிறர் சிநேகமற்ற எண்ணங்கள், இவைகளே. இவைகளை நான் மேற்கொள்ளும்போது, சொல்லமுடியாத சந்தோஷத்தை

யடைகிறேன். எனது கஷ்டங்களெல்லாம் உலகத்துக்குத் தெரிந்தால், ஏதோ ஒரு சொற்ப ஆறுதல் வரலாம். அதனுல் என்ன பிரயோஜனம்? நான் ஆண்டவர் முன் போய் நிற்கும்வரையிலும், அவைகளை ஒருவருக்கும் நான் வெளியிடப்போவதில்லை.

"எனது பத்தாவுக்காக இன்னும் அதிகத்துன்பங்களை அனுபவிக்கவும் தயாராயிருக்கிறேன். ஆனுல் எனது பலவீனத்தினுல் புண்ணியபலன்களை இழந்துபோகவேண்டியதாயிருக்கிறது. ஆண்டவர் சிரத்தையோடு என்னை எப்போதும் கண்காணித்துக்கொண்டு வருகிருர் என்று நினைக்க எனக்கு அதிகம் ஆறுதல் உண்டாகிறது. நான் கஷ்டப்படும்போதுகூட, என் ஆண்டவர் எனது இருதய சிம்மாசனத்தில் வீற்றிருக்கிருர். எனது சிரேஷ்டர்களும் உடன் சகோதரிகளும் செய்வதும் சொல்வதும் சரியல்ல என்ற எண்ணம் அடிக்கடி வந்துகொண்டிருக்கிறது. இந்த நினைவுகளுக்கு நான் ஒருபோதும் இடங்கொடுப்பதில்லை. இவைகளெல்லாம் எனக்குத் தாழ்ச்சியைக் கற்பிக்கும்படி சருவேசுரன் அனுப்பும் சோதனைகளாயிருக்கலாம். சுவாமி எனக்காக அதிகம் வேண்டிக்கொள்ளுங்கள். உங்களுடைய புத்திமதிக்காகவும், ஆறுதலான வார்த்தைகளுக்காகவும் காத்துக்கொண்டிருக்கிறேன்.

"எனக்குப் புத்தி தடுமாறி இருக்கிறதோ என்ற சந்தேகங்கூட சில நாட்களாக வந்து கொண்டிருக்கிறது. ஆனுல் நான் தெய்வ பராமரிப்பின்கீழ் இருக்கிறேனல்லவா? மனதுக்கு ஏதாவது ஆறுதல் தரக்கூடிய எண்ணங்களையெல்லாம் எழுதிக்கொண்டு வருகிறேன். இந்தக்கடிதத்தை எழுதுவதற்குக்கூட சிரமமாயிருக்கிறது. கருத்துகள் ஒழுங்காயில்லை. ஏனெனில் என் மனது அவ்வளவு தெளிவாயில்லை. முன்னையைவிட இப்போது எனக்கு ஆறுதல் தேவை."

"சகோதரி அல்போன்ஸா"

1946 மே,

"எது வந்தாலும் தீர்க்கமான மனதோடு சகித்துக் கொள்ளவேண்டும், ஆறுதல் ஒன்றையும் எதிர்பார்க்கக் கூடாது என்ற இந்த இரண்டு தீர்மானங்களோடு, என்னைத்தானே ஒறுத்துக்கொண்டு வருகிறேன். தட்டான் வெள்ளியைப் புடம் போடுவதுபோல, சருவேசுரன் என்னையும் புடம் போட்டுக்கொண்டு வருவதாக தெரிகிறது. சில நாட்களாக என் சரீரத்திலும் மனதிலும் கொடிய வாதனையை அநுபவிக்கிறேன். நெருப்பில் கிடந்து எரிவது போலிருக்கிறது. கழுத்திலிருந்து முழங்கால் முழங்கை வரை தோல் உரிந்துபோயிற்று; ஆனால் ஒரு இடத்திலும் கீழ் கட்டவில்லை. முகமும் முன்கைகளும், யாதொரு வித்தியாசமுமில்லாமல், எப்போதையும்போல நன்றாயிருக்கின்றன. டாக்டர் வந்து பார்க்கிறார். எனக்கு வரும் ஆறுதலும், சகிப்பும் நமது ஆண்டவரிடமிருந்தே வருகின்றன. இன்னும் எனக்கு இதற்குமேல் வேதனைகள் வந்தாலும் பரவாயில்லை; எனது மன அமைதிக்குமட்டும் பங்கம் வரக்கூடாது. இதுவே எனது ஜெபம். இதுவரை என் மன அமைதி கெடவில்லை. ஆனால், மெள்ள மெள்ள அதையும் சருவேசுரன் எடுத்துக் கொள்ளக்கூடும். எனக்கு வரும் கொடிய வேதனைகள் இப்போது ஒரு மாதமாகக் கிடையாது. இது சருவேசுரன் செய்துவரும் பெரிய சகாயம். அர்ச்சியசிஷ்ட வாரம், பெரிய புதன் கிழமையிலிருந்து மலேரியா காய்ச்சல் ஆரம்பித்திருக்கிறது. அதுவும் இப்போது ஒருநாள்விட்டு ஒருநாள்தான் வருகிறது. சர்வஞானமுள்ள சருவேசுரன் எனக்கு அனுப்புகிறவைகளையெல்லாம் அளந்து, நிறுத்துப் பார்த்துதான் அனுப்புகிறார். இல்லாவிட்டால், காய்ச்சல் அகோரமாய் அடித்துக் கொண்டிருக்கும்போது, அதோடு வழக்கமாய் வரும் வேதனைகளும் வந்தால், நான் எப்படித் தாங்க முடியும்!

"பேறுபலன்கள் சம்பாதிப்பதற்கேற்ற எந்த சந்தர்ப்பத்தையும் நான் வீண்போக்கக்கூடாதென்று, எனக்காக வேண்டிக்கொள்ளுங்கள். என்மட்டில் யாருக்கும் வருத்தம் கிடையாதென்றே நினைக்கிறேன். நான் அதிகம் பரிசுத்ததனத்தில் வளருவதற்குச் சிலர் காரணமாயிருக்கவேண்டுமென்பது தேவசித்தம். என் விஷயத்தில் எனக்கு வருவதெல்லாம் சருவேசுரனுடைய கையிலிருந்து வருகின்றன என்பது எனது பூரண நம்பிக்கை.

"சில நாட்களுக்கு முன்னுல், நான் எனது நிலைமையைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தபோது, கொழுவனுல் மடத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் ஒரு பாகத்தை எனக்கு வாசித்துக் காட்ட வேண்டும் என்று அந்த மடத்துத் தாயார் எழுதியிருந்தார்கள். அதாவது: 'கிறீஸ்துநாதரைப் பின்பற்றி, நமது ஜீவியத்தைத் திருத்தியமைத்துக் கொள்ளவேண்டும். சருவேசுரனுக்கு முன் போய் நிற்பதற்கு முன்னுலேயே, நமது ஜீவியம் கிறீஸ்துநாதரால் உருவாக்கப்பட்ட, பழுதற்ற ஜீவியமாயிருக்கவேண்டும்.' இது எனக்கு சமயத்துக்கேற்ற நல்ல புத்திமதி. சருவேசுரனுடைய பராமரிப்பின் விசேஷவழிகளை நினைத்துக் கண்ணீர் சிந்தினேன்.

"இப்போது எனது மனது இருக்கும் நிலைமையை, இன்னதுதான் என்று என்னுல் சொல்லக்கூடவில்லை. எனது குறைகளை சருவேசுரன் பொறுத்துக் கொள்வார், இல்லையா? சுவாமி, நான் ஒரு அர்ச்சியசிஷ்டவளாகும்படி நீங்கள் எனக்கு உதவி செய்யவேண்டும். நானும் என்னுல் ஆனதெல்லாம் செய்துகொண்டு வருகிறேன். ஆனுல் எனது பலவீனங்களுக்குக் கணக்கில்லை. சொற்பக் காரியங்களைச் சகித்துக்கொள்வதற்கு முதலாய் மிகவும் கஷ்டமாயிருக்கிறது. எனது நாட்டங்களை வெளியே காட்டாமல், எல்லாவற்றையும் சகித்து வரவேண்டுமென்று எவ்வளவுதான் பிரயத்தனப்பட்டாலும், சில சமயங்களில் முடியாமல் போகிறது. நான் ஞானஸ்ஞானத்தில் பெற்றுக்கொண்ட தேவ இஷ்டபிரசாதத்தை

ஒரு நாளும் இழந்து போகாதபடி சருவேசுரன் என்னைக் காப்பாற்றிக்கொண்டு வருகிறார். நான் இருக்கிற இந்த ஸ்திதியில் வேறு யாரும் இருந்தால், என்னைவிட எவ்வளவோ அதிகமாக சருவேசுரனைச் சிநேகிப்பார்கள். இவ்விதம் நினைப்பதால், எனக்கு அதிகக்கவலை உண்டாகிறது. இருந்தாலும், சருவேசுரன் இன்னும் என்னைப் பராமரித்துக்கொண்டு வருகிறார் என்ற எண்ணமே எனக்கு ஊக்கந்தருவது....நான் சருவேசுரனைச் சிநேகிப்பதற்குத் தடங்கலாயிருக்கும், தகாத நாட்டங்கள் எதுவானாலும், அவைகளினின்றும் முற்றிலும் விடுபடவேண்டுமென்று ஆசிக்கிறேன்; அதற்காக ஜெபிக்கவும் தவறுவதில்லை.

"கடந்த வாரத்தில் ஒரு நாள் ஒரு விதமான மனக் கஷ்டமும், சலிப்பும்போன்ற உணர்ச்சியும் வந்து, என்னை நைத்துக்கொண்டிருந்தது. அரைமணி நேரந்தான் இந்த உணர்ச்சி; அதற்குள் நான் இன்னும் ஏன் சாகவில்லை, என்று ஏமாந்தது போன்ற உணர்ச்சி உண்டானது. இதைப்பற்றி எனக்கு பின்னால் மிகுந்த வருத்தம். இவ்வித ஸ்திதியிலிருந்தும் என்னைக் காப்பாற்றும்படி, ஆண்டவரைப்பார்த்து மன்றாடினேன். கொஞ்ச நேரம் சென்றபிறகுதான் எனது மன அமைதியும் சந்தோஷமும் திரும்பினது. எனது குற்றத்துக்காக ஆண்டவரிடம் மன்னிப்புக்கேட்டு, பிறகு நித்திரைக்குச்சென்றேன். நீங்கள் சொன்னதுபோல மிகுந்த கசப்பான மருந்தைக்கொடுப்பவரே, அதிகத்தித்திப்பான சர்க்கரையையும் தருகிறார். வழக்கமாக சகோதரி கபிரியேல் எனது மனக்கலக்கத்தை எப்படியாவது அறிந்துவிடுவார்கள்; ஆனால் இந்தச்சமயம் அவர்களாலுங்கூட கண்டுகொள்ளமுடியவில்லை. இதுவும் எனக்கு ஒரு லாபமே."

**"சகோதரி அல்போன்ஸா"**

இந்தக் கடிதங்களிலிருந்து, அல்போன்ஸா துன்ப துயரங்களின் உயர்ந்த தத்துவத்தை அறிந்திருந்தாள்



சங். சகோதரி கபிரியேல் சிறுப்பம் முதல் கொண்டு மரணம்வரை
அல்போன்ஸாளின் ஆப்த சிநேகிதி.
இருவரும் ஒன்ருகப் படித்தார்கள். ஒன்ருகவே மடத்திலும்
சேர்ந்தார்கள்



அதி சங். குருவில்லா பிளாத்தோட்டம், பர்ணஞானம் பங்குசுவாமியார்.
அல்போன்ஸாளின் சாதாரண ஆத்தும குருவானவர்

என்று தெரிகிறது. அவைகளின் பலாபலன்களைப்பற்றி விவரிக்கும் புஸ்தங்களே அவளுக்கு ரொம்பப்பிரியம். தங்களின் ஜீவியகாலத்தில் அதிக துன்பவாதனைகளை அனுபவித்த அர்ச்சியசிஷ்டவர்களின் சரித்திரங்களை அதிக விருப்பத்தோடு வாசிப்பாள். "அர்ச்சியசிஷ்டவர்கள் தங்களுக்கு வந்த சோதனைகளையும், கொடும் நோய் வாதனைகளையும் எப்படி சகித்துவந்தார்கள் என்று விவரிக்கும் புஸ்தகங்களைத் தனக்கு அனுப்பும்படி என்னிடம் அடிக்கடி கேட்பாள்" என்று பர்ண ஞானத்து உதவி குருவாயிருக்கும் சங். ஜேக்கப் மன்னலால் சுவாமியவர்கள் கூறுகிறார்கள். ஒரு நாள் "துன்பத்தின் வீரமுள்ள மாதிரிகை" (Heroic Example of Suffering) என்ற புஸ்தகத்தை அவளிடம் கொடுத்து, "கொடிய வேதனைகளில் காலத்தைப்போக்கிய ஒரு ஆத்துமா, தனது அனுபவங்களை இப்புஸ்தகத்தில் எழுதியிருக்கிறது. நீங்களும் இந்த ஆத்துமாவைப்போல வியாதி துன்பங்களை அனுபவிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். உங்களுடைய அநுபவத்தையும் எழுதிக்கொண்டு வந்தால் நல்லது" என்று சுவாமியவர்கள் சொன்னார்கள். அதற்கு அல்போன்ஸா சிரித்துக்கொண்டே, "அப்படியெல்லாம் எழுதுவதற்கு சாத்தியப்படாது" என்றாள்.

அல்போன்ஸா துன்பகாலத்தை மிகவும் பலனுள்ள காலமாகக் கருதினாள். சிலர் வியாதி கஷ்டங்கள் தங்கள் ஜீவியத்தைப் பாழ்படுத்துவதாகக் கருதுகிறார்கள். அவர்கள் அல்போன்ஸா சகோதரியிடம் ஒரு நல்லபாடத்தைக் கற்றுக்கொள்ளவேண்டும். உலகில் எத்தனைபேர் வியாதி, கவலை, கஷ்டங்களுக்கு உள்ளாயிருப்பவர்கள்! அவர்கள் வியாதி துன்பங்களின் தத்துவத்தை அறிந்தால், வீண் கவலையும், கசப்பும் கொண்டு தங்கள் ஜீவியத்தை பாழ்படுத்துவதை விட்டு விட்டு, அதை எவ்வளவோ பலனுள்ளதாகச் செய்வார்கள்.

# ஒன்பதாம் அதிகாரம்

பின்னால் நடக்கப்போகும் விஷயங்களை அல்போன்ஸா முன்னதாகவே அறிந்து சொன்னாள் என்பதற்கு அநேக திருஷ்டாந்தங்களுண்டு.

1943, ஜூலை 21-ம் தேதி இரவு பதினொரு மணிக்கு அல்போன்ஸா தனது அறையில் படுத்திருந்தவர்களை எழுப்பி, "பூண்டிக்குளம் சுவாமியாருடைய ஆத்துமத்துக்காக வேண்டிக்கொள்ளுங்கள்; அவர் இறந்து போனார், கோவில் மணியடிக்கக்கேட்டேன்" என்று சொன்னாள். அந்த நேரத்திலா கோவில் மணியடிக்கும்! ஒருவரும் அவள் சொன்னதை நம்பவில்லை. காலையில் சாவு மணியடித்ததைக் கேட்டபிறகுதான் அல்போன்ஸா சொன்னது உண்மையென்று அறிந்தார்கள். அவர் மரணமான அதே வேளையில்தான், அவள் மற்றவர்களை எழுப்பினாளென்றும் பின்னால் தெரியவந்தது.

இது நடந்த சிலமாதங்களுக்குப்பிறகு, ஊர்சுலா தாயார் அல்போன்ஸாளிடம் வந்து, சொராபினாள் சகோதரிக்காக வேண்டிக்கொள்ளும்படி கேட்டார்கள். சொராபினாளுக்குக் காய்ச்சல். நம் சகோதரி தாயாரிடம், அவர்களுக்காக ஒன்றும் கவலைப்படவேண்டாம், இன்ன நாளில் காய்ச்சல் நின்றுவிடும் என்று ஒரு நாளைக்குறிப்பிட்டுச் சொன்னாள். அவள் குறிப்பிட்டநாளும் வந்தது; காய்ச்சல் நின்றபாடில்லை. எல்லாருக்கும் ஏமாற்றம். அல்போன்ஸா மட்டும் நம்பிக்கையோடிருந்தாள். தனது ஜெபம் பலனற்றுப்போகாது என்பது அவளுக்கு நிச்சயம். சங். கபிரியேல் சகோதரி சொல்வதுபோல, எப்போதும் அவள் தன்னுடைய ஜெபங்களில் அசைக்க

முடியாத நம்பிக்கையோடு வெளிப்படையாகத் தன் மன்ருட்டுக்களைச் சொல்லிக்கேட்பாள். அன்று சாயங்காலம் சரியாய் ஐந்து மணிக்கு காய்ச்சல் நின்றது; பிறகு அது தலை காட்டவில்லை.

ஒரு நாள் மடத்தின் தேவைகளுக்கு வேண்டிய பணம் இல்லாததால், தாயார் மிகுந்த கவலை கொண்டிருந்தார்கள். அல்போன்ஸா தாயாரைப் பார்த்து, "தாயாரே, நீங்கள் ஒன்றும் கவலைப்படவேண்டாம். நாளைக்குத்தானே உங்களுக்குப் பணம் தேவை? உங்களுக்குத் தேவையானபோது எங்கிருந்தாவது பணம் வரும். சருவேசுரனுடைய பராமரிப்பில் நம்பிக்கை வையுங்கள்; உங்களுக்கு பணம் கிடைப்பதைப்பற்றி நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் கவலைப்படவேண்டாம்" என்ருள். அவளுடைய ஜெபம் பலனளித்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் மட்டுமல்ல, வேறு பல சமயங்களிலும் அவளுடைய மன்ருட்டால் அவர்களுக்குத் தேவையான பொருட்கள் கிடைத்திருக்கின்றன.

சகோதரி மெரிஸியின் தகப்பனுருக்கு மிகுந்த வியாதி. அப்போது அவர் மரணமானுல், குடும்பத்துக்குப் பெரும் கஷ்டம் வரலாம். சகோதரிகளெல்லாரும் அவர் சுகமாகும்படி அதிகமாக வேண்டிக்கொண்டார்கள். பலநாட் சென்ருலும், அவர் சுகப்படுவார் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை. தாயார் அல்போன்ஸாளிடம் போய், "நீங்கள் அந்தச் சகோதரியின் தகப்பனுருக்காக வேண்டிக்கொள்ளவில்லையா? அவர் நிலைமை மோசமாய்த் தானிருக்கிறது. ரொம்ப உருக்கத்தோடு வேண்டிக் கொள்ளுங்கள்" என்று சொன்ஞர்கள். நம் சகோதரி மனமில்லாமலேயே தாயாரிடம் பதில் சொன்னுள்: "தாயாரே, நானும் அவருக்காக அதிகம் ஜெபித்துக் கொண்டுதான் வருகிறேன். ஆனல் நாம் என்ன செய்யக் கூடும்! இந்த வியாதியிலிருந்து அவர் தப்பமாட்டார்; சாவது நிச்சயம்" என்ருள். சிலநாட்களில் அப்படியே சம்பவித்தது.

1946, ஜூன் மாதம் சகோதரி செராபினுளின் தாயார் மரணத்தருவாயிலிருந்தாள். மடத்திலிருந்து அவள் இருந்த ஊர் இரண்டரை மைல்தான். சகோதரிகள் தினந் தோறும் அவளுடைய நிலைமை எப்படியிருக்கிறது என்று விசாரித்தவண்ணமாயிருந்தார்கள். சுகப்படும் என்ற நம்பிக்கை ஒருவருக்கும் கிடையாது. ஆனல் திடீரென்று ஜூன் மாதம் 4ம் தேதி அவளுடைய நிலைமை விருத்தி யடைந்து வருவதாகக் கேள்விப்பட்டார்கள். இருந் தாலும் அன்று இரவு நடுச்சாமத்தில், அல்போன்ஸா தன் அறையில் தூங்கிக்கொண்டிருந்தவர்களை எழுப்பி, செரா பினுளின் தாயார் இறந்து போனுள்" என்று சொன்னுள். அவர்களில் ஒரு சகோதரி, அல்போன்ஸாளோடு அந்த ஆத்துமத்துக்காகச் செபமாலை செய்ய ஒப்புக்கொண் டாள். மறுநாள், வியாதிக்காரி நள்ளிரவில் இறந்து போனது உண்மைதானென்று தெரிந்தது.

"பின்னுல் நடக்கப்போவதை எப்படி நீ அறிந்து கொள்கிருய்" என்று கேட்டபோது அவள் சொல்வாள்: "நான் ரொம்பவும் உருக்கத்தோடு மன்ருடி ஜெபிக் கிறேன்; அதற்குப்பிறகு, பதில் தாளுகவே என் மனதுக்கு வருகிறது" என்ருள்.

மடத்திலுள்ள சகோதரிகளில் அநேகருக்கு, அவர் களுடைய மனதிலுள்ள இரகசியமான எண்ணங்களையும், கவலைகளையும் அல்போன்ஸா அறிந்து, அவர்களுக்கு ஆறுதல் சொல்லியிருக்கிருள். இதை அந்தச் சகோதரி களே ஒப்புக்கொள்ளுகிருர்கள். ஒரு சமயம், அல்போன் ஸாளிடம் ஏதாவது ஒரு ஞாபகப்பொருள் கேட்கவேண்டு மென்று ஒரு சகோதரிக்கு ஆசை. ஆனல் அதை வாய் விட்டுக்கேட்க மனம் வரவில்லை. சிலநாட்களுக்கு பிறகு அல்போன்ஸா அந்தச் சகோதரியைக் கூப்பிட்டு, தன் கைப்பட எழுதிய ஒரு ஜெபத்தைக் கொடுத்தாள். புதிதாக வார்த்தைப்பாடு கொடுத்த இன்னெரு சகோதரி யிடமிருந்த காவல் சம்மனசு சுருபம் காணுமல் போனது. அல்போன்ஸாளிடம் ஒன்று கேட்கவேண்டுமென்ற

விரும்பினுலும், அவளிடம் பேசுவதற்கு தாயாரிடம் உத்தரவு கேட்கவேண்டும். எப்படிக்கேட்கலாம் என்று தத்தளித்துக்கொண்டு, வேறு விதமாக ஒரு சுருபம் கிடைக்காதா, என்று பிரயாசைப்பட்டுக்கொண்டிருந்தாள். அல்போன்ஸா அவளைக்கூப்பிட்டு, "இந்தச் சுருபத்தை கொஞ்சநாளாக உங்களுக்கென்று பத்திரப்படுத்தி வைத்திருந்தேன் : காவல் சம்மனசு சுருபம். முன்னுலேயே நீங்கள் என்னிடம் கேட்டிருக்கலாமே, எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி சுருபத்தைக் கொடுத்தாள்.

சோதிப்பதற்கென்றே சில சகோதரிகள் அல்போன்ஸாவிடம் கேள்விகள் கேட்பார்கள். ஒரு பையன் பட்டாளத்திலிருந்து லீவுக்கு வந்திருந்தான். அவனுடைய சகோதரி பர்ணஞானம் மடத்திலிருந்த சகோதரிகளில் ஒருத்தி. ஒரு நாள் அவளைப் பார்ப்பதற்காக மடத்துக்கு வந்தபோது, அவள் மடத்திலில்லை; சற்று தூலையிலுள்ள ஒரு ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தாள். பையனும் அவள் வரும் நேரம்வரை காத்திருக்கமுடியாது. அதனுல் ஒரு சகோதரி அல்போன்ஸாளைப் பார்த்து, "இன்று வழக்கமாய் வருவதற்கு நாலு மணி நேரத்துக்கு முந்தியே அந்தச் சகோதரி வரும்படி செய்ய உங்களால் வேண்டிக் கொள்ளமுடியுமா" என்று கேட்டாள். "சரி, நான் வேண்டிக்கொள்ளுகிறேன்; வேண்டுமானுல் பாருங்கள், அவர்கள் எப்படியாவது இன்று நேரத்தோடு வந்து விடுவார்கள்" என்றுள். அவள் சொன்னபடியே அந்தச் சகோதரியும் தன் சகோதரன் புறப்படுமுன் வந்து விட்டாள். அல்போன்ஸா அவளைப்பார்த்து, "நீங்கள் சீக்கிரம் வரும்படி நான் வேண்டிக்கொண்டேன்" என்க, அந்தச் சகோதரி அதற்குப்பதிலாகச் சொன்னதாவது : "நீங்கள் ஜெபம் செய்யத்துவக்கின அதே நேரத்தில்தான் எனக்கும் சீக்கிரம் திரும்பிவிடவேண்டுமென்று ஒரு எண்ணமுண்டானது. துணையின்றி தனியே வரவும்

உத்தரவு கிடைத்தது. உடனே புறப்பட்டு வந்தேன்" என்ருள்.

தீர்க்கத் தரிசன வரத்தோடு, ஒரு சிறிது பாஷா வரமும் அல்போன்ஸாளுக்கு இருந்ததாகத் தெரிகிறது. இப்புஸ்தகத்தின் வேருெரு இடத்தில், நம் சகோதரி திடீரென்று எப்படி தமிழ் புஸ்தகங்களை வாசித்தாள் என்று கூறப்பட்டிருக்கிறது. அது உண்மையில் ஒரு அற்புதமாகவே தோன்றும். அவளுக்கு தமிழில் அச்சரங்கள்கூட தெரியாது. இருந்தாலும் ஒருநாள் எல்லாரும் ஆச்சரியப்படும்படி தமிழ் புஸ்தகத்தை வாசித்ததுமட்டுமல்ல, அதற்குப் பொருளும் சொன்னுள்.

லத்தீன் பாஷையிலும் அவளுக்கு சிறிது பரிச்சயம் ஏற்பட்டதாக சங். ரோமூலூஸ் சுவாமியார் கூறுகிருர். சியோன் கத்திரினம்மாளுடைய சரித்திரத்தில் இவ்விதம் சம்பவம் ஒன்று குறிப்பிட்டிருக்கிறது. அல்போன்ஸாள் லத்தீன் பாஷையைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆசையோடு, ஒரு சகோதரியிடம் சென்று தனக்கு லத்தீன் எழுத்துக்களைச் சொல்லித்தரும்படி கேட்டாள். பலநாள் பிரயாசைப்பட்டாலும், ஒரு பிரயோஜனமும் இல்லை. ஒரு நாள் லத்தின் கையெழுத்துப் பிரதி ஒன்று அவளுக்குக் கிடைத்தது. அதை எடுத்து வாசிக்க முயன்ற போது, சாதாரணமாய் கஷ்டமில்லாமல் வாசிக்கமுடிந்தது. அதன்பிறகு அல்போன்ஸா லத்தீன் வாசிப்பாள். இது தன் வேண்டுதல்களின் விளைவாகத் தனக்குக் கிடைத்த ஒரு வரம் என்பது அவளுடைய எண்ணம். லத்தீன் வாசிக்கக்கூடுமானுலும், அதை மொழி பெயர்த்துச் சொல்லக்கூடாதவளாயிருந்தாள். அதனுல் இது நிச்சயமாக ஒரு புதுமைதான் என்று சொல்லிவிட முடியாது என்ருலும், ஒரு விசேஷ கடாக்ஷம் என்பதையும் மறுக்கமுடியாது.

அல்போன்ஸாள் தனக்கு வேதனைகள் வரும் நேரத்தை முன் அறிந்து, பிறருக்கு அதனுல் கஷ்டம்

நேராதபடி, தனது ஜெபத்தினுல் வேறு நேரத்துக்கு மாற்றிக் கொள்ளவும் கூடுமாயிருந்தது. கீழ்கண்ட சம்பவத்தால் இது விளங்கும். 1945, நவம்பர் மாதம், அப்போது விசாகபட்டணத்தில் உதவி மேற்றிராணி யாராயிருந்த வந். ஜோசப் போஸ் ஆண்டவரவர்கள் பர்ணஞானத்துக்கு வருவதாகப் பிரஸ்தாபமிருந்தது. இதுவிஷயத்தை பங்குசுவாமியார் அல்போன்ஸாளுக்குச் சொல்லி, அவர் இங்கு இரண்டு நாட்கள் இருப்பார் என்றும் கூறினுர். ஆண்டவரவர்கள் வருவதாகச் சொல்லப்பட்ட நாள் அல்போன்ஸாளுக்கு வேதனைகள் வரும் நாள். அதனுல் அவள் தாயாரைப் பார்த்துச் சொல்வாள்: "தாயாரே, மேற்றிராணியார் வரும்போது, எனக்கு வேதனை வந்தால் ரொம்பவும் சங்கடமாயிருக்கும். ஏனெனில், அவருக்கு முன்னுல் நான் அலட்சியமாய் புரண்டுகொண்டிருப்பது நல்லதல்ல; என்னுலும் வேதனை நேரங்களில் அமைதியாயிருக்க முடியாது. ஆகையால் அவர் இங்கே இருக்கும்போது எனக்கு வேதனை வரக் கூடாது என்று நான் வேண்டிக்கொள்ளட்டுமா?" என்று கேட்டாள். தாயாரும் அநுமதி கொடுக்க, அதற்காக வேண்டிக்கொண்டாள்.

மேற்றிராணியார் அவளைப்பார்க்க வந்தபோது, பங்குசுவாமியார் அவளுடைய வியாதி, வேதனைகளைப் பற்றி விபரமாகச் சொன்னுர். ஆண்டவரவர்கள் ஆச்சரியத்தோடு, "இந்த சகோதரிக்கா வியாதியும் வேதனையும்! அவளைப் பார்த்தால் சாப்பாடு செல்லாதவள், இராத் தூக்கமில்லாதவளாக தெரிகிறது! பலவருஷம் வியாதிப்படடு அழுந்தினவளுடைய முகமா இது! இவளுக்குச் சுவ வீனம் ஒன்றுமில்லை; இதில் ஏதோ தெய்வீக இரகசியமிருக்கிறது" என்று சொன்னுர். அவர் பேசியது இங்கிலீஷில் ஆனபடியால் அங்கிருந்தவர்களில் அநேகருக்கு அவர் சொன்னது என்னவென்று தெரியாது.

மேற்றிராணியார் திரும்பிப் போனவுடன் அல்போன்ஸாளுக்கு வேதனையும் ஆரம்பித்தது.

போட்டோ பிடிப்பதற்குப்போய் நிற்பதென்றால், அல்போன்ஸா சகோதரிக்குப் பிரியமே இராது. சிரேஷ்டர்களின் கட்டளையினால்தான் மற்றவர்களோடு சேர்த்து அவளையும் படம் பிடிக்க முடிந்தது. இப்போது வழங்கி வரும் படம் அவளுடைய சுயரூபத்தைச் சரியாய் காட்டுவதாயில்லை. முகத்தில் எப்போதும் படிந்திருந்த வசீகரமும், அன்புகனிந்த பார்வையும் அதில் இல்லை; எப்போதும் உதடுகளில் தோன்றிய, அவளுக்கு இயல்பான மலர்ந்த புன்னகையையும் அதில் காணமுடியாது. ஏழு வருஷ வியாதியிலும், கடைசிவரை இந்தப் புன் முறுவல் அவளை விட்டு மாறவில்லை. வியாதிப் பட்டவளாகவே அவள் தோன்ற மாட்டாள். எந்தக் கொடிய வியாதியிலும் குதூகலமும் உற்சாகமும் குறையாது. அவளுடைய மனதில் நிலவிய அமைதி முகத்தில் பிரதிபலித்துக்கொண்டிருக்கும்.

சாதாரணமாகப் பேசும்போதே மிகவும் சாதுரியமாகவும், நகைச் சுவை தோன்றவும் பேசுவாள். ஒரு அன்பற்ற வார்த்தையைச் சொன்னாள், அல்லது மற்றவர்கள் சொல்லக் கேட்டுக்கொண்டிருந்தாள் என்பது கிடையாது. ஒரு விஷயத்தைப்பற்றி விவாதிப்பதில் அவளுக்கு நல்ல சாமார்த்தியமுண்டு; ஞானக்காரியங்களை விளக்கிக் காண்பிப்பதிலும் விசேஷ திறமையுள்ளவள்.

அவளுடைய சாமான்ய சுபாவமும், இயல்பான அன்பும் எல்லாருடைய மனதையும் கவர்ந்தன. எல்லாரும் அவளை விரும்புவதற்கும் இதுவே காரணம்.

அல்போன்ஸா ஒல்லியாய், வளர்ந்திருப்பாள்; அவளுடைய நிறம் அழகிய பொன் நிறம். நடை நல்ல லாவண்ணியமாய், ஒய்யாரமாயிருக்கும். விசேஷமாய் நன்மை வாங்கப் போகும் போது, அவளைப் பார்க்க வேண்டும். பலவீனமாயிருக்கும் போது, யாராவது தாங்க

லாக அவளை நன்மை வாங்கக் கூட்டிக்கொண்டு போக வேண்டும் என்று சொன்னால், அது அவளுக்குப் பிரியப் படாது; அதனால் பராக்குவரும், தொந்தரவாயிருக்கும் என்பாள். எல்லாரோடும் சேர்ந்து ஜெபம் செய்து கொண்டிருக்கும்போது அவளைப்பார்த்தால், ஏதோ ஒரு மறுவுலக பிறவியைப் பார்ப்பது போலிருக்கும்; அவ்வளவு ஆழ்ந்த சிந்தனையோடு ஜெபிப்பாள். மற்றவர்களுக்கு அவள் சொல்லும் ஆலோசனைகளையெல்லாம், அவள்தானே அநுசரிக்கத் தவறுவதில்லை. சிரேஷ்டர்களுக்கு மனப்பூர்வமாக உற்சாகத்தோடு கீழ்படிய வேண்டும், மற்றவர்களுக்கு,—தனக்கு சம அந்தஸ்தி லுள்ளவர்களுக்கும், கீழ்பட்டவர்களுக்கும், — கூடிய வரை அவர்களுடைய விருப்பத்துக்கு இணங்கி நடக்கப் பிரயாசைப் படவேண்டும்; இவைகள்தான் அவள் கொடுக்கும் முக்கிய ஆலோசனைகள்.

சிறுபிள்ளைகளென்றால் அல்போன்ஸாளுக்கு ரொம்பப் பிரியம்; பள்ளிக்கூடம் துவக்குமுன்னும், முடிந்தபின்னும் பள்ளிக்கூடச் சிறுவர் அவளிடம் வந்து சூழ்ந்து கொள்வார்கள். அவளோடு விளையாடு வதென்றால், அவர்களுக்கு ஆனந்தம். ஒரு நாள் அவளைப் பார்க்க வந்த ஆறு வயது சிறுமி ஒருத்தியை அவளிடம் கூட்டிக் கொண்டுபோய் விட்டார்கள். அவள் நம் சகோதரியைப்பார்த்து, "உங்களுக்கு அவஸ்தைபூசுதல் கொடுத்து விட்டார்களென்று கேள்விப்பட்டேன். அந்த நேரமுதல் உங்களைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ரொம்ப ஆசையிருந்தது. இதுவரை வரவே முடியவில்லை. ஆண்டவர் உங்களை இப்போது காப்பாற்றிவிட்டார். ஆனால் திரும்பவும் அவரே வந்து உங்களை மோக்ஷத்துக் குக் கூட்டிக்கொண்டு போவார்," என்று தனது மழலைச் சொற்களால் மொழிந்தாள்.

சுற்றி நின்றவர்கள், விளையாட்டுக்காக, அவளிடம், "ஏன் அல்போன்ஸா சகோதரியை ஆண்டவர் மோக்ஷத்

துக்கு அழைத்துக் கொள்வார் என்கிறாயே, அவர்கள் ரொம்ப அழகாய் இருக்கிறார்கள் என்பதினாலா" என்று கேட்டார்கள். அதற்கு அக் குழந்தை, "இல்லை, அதனால் எல்லாம் இல்லை. அவர்கள் எப்போதும் ஒரு சந்தி பிடிக்கிறார்களே; அதற்காகத்தான்" என்று சொல்லி விட்டு, அல்போன்ஸா பக்கம் திரும்பி, "ஆண்டவர் பாடு பட்டாரே, அவ்வளவுதூரம் நீங்கள் கஷ்டப்பட மாட்டீர்கள். எங்கள் அப்பா இறந்துபோய் மூன்று வருஷமாகிறது. நீங்கள் மோக்ஷத்துக்குப் போன பிறகு, அவர் அங்கே இருக்கிறாரா என்று பார்த்து எனக்குச் சொல்வீர்களா? உங்களை நமதாண்டவர் நேரில் வந்து மோக்ஷத்துக்குக் கூட்டிக் கொண்டு போவார்" என்றாள். இந்தச் சிறுமி மடத்துக்கு வரும் போதெல்லாம் அல்போன்ஸாளைப் பாராமல் போவது கிடையாது. இன்னொரு சிறு பெண், நாலு வயது தானி ருக்கும் .அவளுக்கு, அவள் மற்றச் சகோதரிகளை யெல்லாம் விட்டு விட்டு, அல்போன்ஸாளை இனங்கண்டு, அவளிடம் போய், "நீங்கள் எங்கள் வீட்டுக்கு வருவீர் களா? உங்களுக்குப் பலகாரம், மிட்டாய் எல்லாம் தரு கிறேன்" என்று கூப்பிட்டாள். இவள் அல்போன்ஸா ளிடம் வரும் போதெல்லாம் பாட்டுப்பாடி, அபிநயங்கள் காட்டுவது வழக்கம்.

அல்போன்ஸா சகோதரிக்கு நவகன்னியரோடு இருப்பதென்றால் வெகு பிரியம்; அவர்களும் அடிக்கடி அவளைத் தேடிப்போவார்கள். எவ்வித கடினமான வியாதியாயிருந்தாலும், அவர்களிடம் அன்போடு பேசு வாள்; அநேகமாய், பிறர் சிநேகம், ஒறுத்தல், கீழ்ப் படிதல், இவைகளைப் பற்றியே அவர்களோடு சம்பாஷிப் பாள். தன்னிடம் ஆலோசனை கேட்க வருபவர்களின் அந்தரங்க நாட்டங்களையும் அறிந்து, அவர்களுக்குப் பதில் சொல்லும் வரம் அவளுக்கிருந்தது. அவளிடம் பேசத்துவக்குவதற்கு முந்தியே, பேசவந்த விஷயங்களை

அறிந்து, ஏற்ற புத்திமதிகளைக் கூறிவிடுவாள். தங்கள் அந்தரங்க எண்ணங்களையும் அறிந்து அவள் சொன்ன ஆலோசனைகள், எவ்வளவு பொருத்தமாயிருந்தன என்று இப்போதும் சகோதரிகள் பேசிக்கொள்கிறார்கள். ஒரு சகோதரியைப் பார்த்து, "ஞானக்காரியங்களில் உங்கள் உள்ளம் குளிர்ந்து போயிருக்கிறது, நீங்கள் திவ்விய நற்கருணை மூலமாக நமதாண்டவரோடு அதிக ஐக்கிய மாயிருக்கப் பிரயாசைப்படவேண்டும். அவரிடம சென்று, உங்கள் தேவைகளையெல்லாம், தகப்பனிடத்தில் குழந்தை பேசுவதுபோல், சொல்லுங்கள்" என்று சொன்னாள்.

கிறீஸ்மஸ் சமயத்தில் பக்கத்து ஊரிலுள்ள மடத்தி லிருந்து சில சகோதரிகள் பர்ணஞானத்துக்கு வந்திருந் தார்கள். அவர்களுள் ஒரு நவகன்னியாஸ்திரியும் இருந்தாள். நம் சகோதரி அவளை அதற்குமுன் பார்த்ததே கிடையாது. இருந்தாலும், அவளைப் பார்த்தவுடனே, அவளுடைய கஷ்டங்களையெல்லாம் உணர்ந்து கொண்டாள். அதற்கு முந்தின நாள் தனக்குக் கிடைத்திருந்த ஒரு மரச்சிலுவையை அவளுக்குக்கொடுத்து, அன்போடும் சற்றுக் கண்டிப் போடும் சொல்வாள்: "நாமெல்லோரும் நமது சிலுவை களைச் சுமந்துதான் தீரவேண்டும்; வேறு வழியில்லை. சிறு சிறு காரியங்களைச் சகித்துப் பழகி, நமது மனதை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். பிறகு பெரிய சோதனைகளிலும் மனஉறுதி தளராமல் எதிர்த்து நிற்கலாம். உங்களுக்குக் கொஞ்சமும் கஷ்டம் அநுப விக்க மனது வரமாட்டேன் என்கிறது; இல்லையா? தொட்டால் சுருங்கி என்று செடி இருக்கிறதே, அது போல உங்களுக்கும் கஷ்டத்துக்குமுன் மனம் கோணிப் போகிறது. இது நமக்கு அழகல்ல. மடத்தில் மட்டுமல்ல, உலகத்திலுந்தான், துன்பம் ஒன்றுமில்லாமல் காலந் தள்ள முடியுமா? சேசுபாலனைப் பார்த்து நாம் வேண்டிக்

கொள்வோம்; அவர் நமக்கு அவசியமான மன உறுதியைத் தருவார்" என்று புத்தி கூறினுள்.

எவ்வளவு உயர்ந்த ஞானம் அவளுக்கு உண்டாயிருந்தாலும், குழந்தைக்குரிய சாமான்ய சுபாவம் அவளை விட்டு மாறவில்லை. அதனுல் சாதாரண காரியங்களையும் கண்டு அநுபவிக்கும் ரசிக குணம் அவளிடமிருந்தது. ஒரு பூவிலுள்ள மணமோ, அல்லது கனியிலுள்ள ருசியோ, எதுவும் அவளுக்குக் கவர்ச்சியையும் இன்பத்தையும் கொடுக்காமல் போகாது. தன்னிடத்தில் உண்டான சந்தோஷ உணர்ச்சிகளை உடனே மற்றவர்களுக்கும் சொல்லிக்காட்டி, அவர்களும் அதை அநுபவிக்க வேண்டுமென்று விரும்புவாள். தவிர, குழந்தைகளுக்கு இயல்பாயுள்ள கரிசனமும், நேர்மையும் அவளுக்கிருந்தது. மற்றவர்கள் என்ன சொன்னுலும், எல்லாவற்றையும் முக்கியமானது என்று எண்ணிக்கொள்வாள். சகோதரிகள் பல சமயங்களில் அவளை வேடிக்கைக்காக ஏமாற்றுவதும் உண்டு.

மடத்தில் தாயார் ஸ்தானத்துக்கு ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் நாள் அடுத்து வந்தது. சில சகோதரிகள் அல்போன்ஸாளிடம் "உங்களைத்தான் தாயாராக நியமிக்கப் போகிருர்கள்" என்று வேடிக்கைக்காகச் சொன்னுர்கள். அல்போன்ஸா அதைக்கேட்டு திடுக்கிட்டு, கலங்கிப்போனுள். "என்னுல் எப்படி தாயாராயிருக்க முடியும்? என்னுலெல்லாம் முடியாது. நான் வியாதிக்காரி" என்று பரதபித்தாள். "விளையாட்டுக்காகச் சொன்னேம்" என்று மற்றவர்கள் சொன்னுலும், அது எப்படி விளையாட்டாயிருக்கலாம் என்று அவளால் கண்டு பிடிக்க முடியவில்லை. இதுபோலவே அவளுக்கு நன்மை கொண்டு வந்த சுவாமியாரும் வேடிக்கையாகச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு அதிக வருத்தப்பட்டாள். "இந்த பெரிய மனுஷி கட்டிலில் உட்கார்ந்து கொள்கிருள்; நான் நன்மை கொண்டுபோய் கொடுக்க வேண்டியிருக்

கிறது. நன்மை வாங்க வேண்டுமானல் கோயிலுக்கு வரக்கூடாதோ" என்ருர். இந்த வார்த்தைகள் அல்போன்ஸாளை அதிகக் கலக்கத்துக்கு உள்ளாக்கிவிட்டது என்று அறிந்து சுவாமியார் திரும்பவும் வந்து அவளை சமாதானப் படுத்தினர்.

இவ்விதம் வேடிக்கையாக அவளை ஏமாற்றினலும், அவளிடம் எவ்வளவு அர்ச்சியசிஷ்டதனம் இருந்தது என்று அவர்களுக்குத் தெரியாமல் போகவில்லை. தேவையானபோது ஞானக்காரியங்களில் ஆலோசனை கேட்க பலர் அவளிடம் போவதுண்டு. ஞானஜீவியத்தில் குளிர்ந்து போயிருந்தவர்கள், அல்போன்ஸா சகோதரியிடம் சில நிமிஷங்கள் சம்பாஷித்தால் போதும், அவர்களுக்கு ஞானச் சுறுசுறுப்பு உண்டாகிவிடும் என்று சில சகோதரிகள் சொல்கிருர்கள். அவளைப்பற்றி துவேஷமாகப் பேசிவந்தவர்கள் கூட, நாளாவட்டத்தில் அவளுடைய புண்ணிய ஜீவியத்தை அறிந்து கொண்டார்கள். சிலர் அவளை ஒரு தடவை பார்த்து விட்டு, அவள் மகா அர்ச்சியசிஷ்டவள் என்று அறிந்து கொண்டார்களாம்.

# பத்தாம் அதிகாரம்

அல்போன்ஸா மற்றவர்களுக்கு ஞான ஆலோசனை சொல்வது மட்டுமல்ல, தன்னால் ஆனமட்டும், கூடுமான போதெல்லாம், பிறருக்கு உதவி செய்வதிலும் கண்ணும் கருத்துமாயிருப்பாள். அவள் தன்னுடைய சௌகரியங்களைப் பற்றி எவ்வளவு அலட்சியமாக இருந்தாளோ, அவ்வளவு மற்றவர்களைப் பற்றி அதிகமாகக் கவனித்து வருவாள். ஒருபோதும் பிறருக்கு மனவருத்தம் கொடுக்கும்படி அவள் நடந்து கொண்டதில்லை.

1930ம் வருஷம், வாழப்பள்ளியில் அவள் படித்துக் கொண்டிருந்த சமயம், பள்ளிக்கூடத்தில் ஒரு கொண்டாட்டம் நடந்தது. அதற்கு அல்போன்ஸா ஒரு "ஞானப் பூச்செண்டும்" வந்தனோபசாரப் பத்திரமும் தயாரித்திருந்தாள். கொண்டாட்டத்துக்கு முந்தின நாள், மாணவிகளில் ஒருத்தி ஒரு விளக்கைத் தட்டிவிட்டதால், எண்ணெ பட்டு அவள் தயாரித்து வைத்திருந்த எல்லாம் கெட்டுப் போயின. அல்போன்ஸா அதை வந்து பார்த்ததும், அவள் மனதில் வந்த முதல் எண்ணம், தன் வேலைப்பாடுகளெல்லாம் வியர்த்தமாயிற்றே என்பதல்ல, தன் தோழி அப்படிச் செய்ததைப்பற்றி வருந்திக் கொண்டிருப்பாளே என்பதுதான். அதனால் முதலில் அவளைத் தேற்றுவதிலேயே கவனம் செலுத்தினாள். பிறகு, இரவு முழுவதும் விழித்திருந்து வேறு பிரதிகள் தயார் செய்தாள்.

நவசன்னியாசத்திலிருக்கும் போது, ஒரு நாள் தன் முக்காட்டை ஒரு சகோதரிக்குக் கொடுத்து விட்டு, தனக்கு வேறொன்றை வெகு சிரமப்பட்டு சுத்தம் செய்து கொண்டாள். பிறருக்கு உதவி செய்வதில் தனக்கு வரும் சிரமத்தை அவள் ஒருபோதும் பொருட்படுத்துவதில்லை.

அவளுக்கிருந்த விசேஷ குணமே பிறர்மட்டில் அநுதாபத்தோடும் அன்போடும் நடந்து கொள்வது. பிறருக்கு இவ்விதம் உதவி செய்வது சிரமமாயிராதா என்று யாரும் கேட்டால், அதற்கு அவள் இல்லை என்றே சொல்வது வழக்கம். தான் கஷ்டப்பட்டதாக வெளியில் காட்டிக் கொள்வதே கிடையாது.

வியாதியாயிருப்பவர்களை விசாரித்து உபசரிக்க, அல்லது கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்குச் சகாயம் புரிய, என்றுமில்லாத உற்சாகத்தோடு உழைப்பாள். வியாதியால் தூக்கமில்லாத நாட்களில், இரவு மெல்ல தடவித்தடவி நடந்தாவது, வியாதியாயிருப்பவர்களிடம் போய் அவர்களுக்கு மருந்து கொடுக்கவோ, அல்லது அவர்களுடைய மனதை ரம்மியப்படுத்தி வேதனைகளைச் சற்று மறந்திருக்கச் செய்யவோ, தன்னால் இயன்றமட்டும் பிரயாசைப்படுவாள். மற்றவர்கள் அவளுக்கு ஏதாவது ஒரு உபகாரம் செய்து விட்டால், அதைப் பெரிதாகப் பாராட்டுவாள். அவள் வியாதியாயிருந்த காலத்தில், தன்னை மற்றவர்களைவிட அதிகமாகக் கவனிக்கிறார்களோ என்றுகூட எண்ணுவாள். ஏனெனில் "பிறரால் அறியப் படாமலிருப்பதும், ஒன்றுமில்லாமை என்று மதிக்கப்படுவதும்" அவளுக்கு விருப்பம். அவளுக்கு அதிக அவசியமாயிருந்தால்தான், உதவிக்கு ஆள் தேவை; மற்றப்படி தன்னைக் கவனித்துக்கொள்ள நியமிக்கப்பட்டவர்களை, "என் பக்கத்தில் காத்துக் கொண்டிருக்கவேண்டாம், நீங்கள் தூங்கப் போங்கள்" என்று அனுப்பிவிடுவாள். வேலைக்காரரிடமும் பக்ஷமாகவே பேசுவாள். அவர்களுக்குச் சொற்ப மனத்தாங்கல் வருவிக்க, அல்லது ஒரு கடுஞ் சொல் சொல்ல அவளுக்கு மனம் போகாது. அவர்கள் ஏனோதானோவென்று எதையும் செய்துவிட்டுப் போனாலும், அவர்கள் செய்வதற்கெல்லாம் நன்றி சொல்ல மறக்கமாட்டாள். அவர்கள் செய்வது பிடிக்காவிட்டால், அல்லது அவர்கள்

வெறுப்புக் . காட்டினுல், அவற்றையெல்லாம் அவள் கவனித்ததாகவே தெரியாது.

அல்போன்ஸா மடத்திலுள்ள எல்லாரோடும் அமைவு அன்போடு பழகிவருவாள். வேலைமிகுதியால் களைத்துப் போயிருக்கும் சகோதரிகள், அமைதியற்று மனங்கலங்கி நிற்கும் நவகன்னியர், குடும்பத்தில் நேர்ந்த கஷ்டங் களால் கஸ்தியடைந்த துறவிகள், எல்லாரும் அவ ளுடைய அநுதாபத்துக்கு ஆளானவர்களே. அவர்கள் அறியாமலே, அவர்களுடைய கஷ்டம், துன்பங்களை அறிந்து அநுதாபம் காட்டுவதையும், அவர்களுக்காக ஜெபித்து வருவதையும் காண எல்லாரும் ஆச்சரியப் படுவார்கள்.

ஒரு உதாரணம்: ஒரு சகோதரி ஒரு நாள் பூசை நேரத்தில் தன் தகப்பனுரைப் பற்றி நினைத்து அதிகக் கவலை யடைந்தாள். அவர் மரணமாகி இரண்டு வருஷம்; இருந்தாலும் அன்று என்றுமில்லாத விதமாய் அவரை நினைத்து, அழுது கொண்டிருந்தாள். அன்று அந்த சகோதரி தற்செயலாய் அல்போன்ஸாளிடம் வந்த போது, அவள் கேட்பாள்: "சகோதரி, இன்று உங்கள் தகப்பனுரை நினைத்து ரொம்ப வருத்தப் பட்டீர்க ளல்லவா! அழக்கூடச் செய்தீர்கள்." அல்போன்ஸா ளுக்கு இது எப்படித் தெரியும் என்று அந்தச் சகோதரி ஆச்சரியப் பட்டுக் கொண்டிருக்கும்போது, அவள் தொடர்ந்து சொல்வாள்: "உங்கள் தகப்பனுருக்காக ஒவ்வொரு நாளும் ஒரு ஜெபமாலை செய்து கொண்டு வருகிறேன்" என்றுள். இவ்விதம் மற்றவர்களுடைய தேவைகளை அறிந்து, அவர்களறியாமலே அவர்களுக்காக ஜெபித்து வருவது அவளுக்கு வழக்கம்.

அல்போன்ஸாளின் துறவற ஜீவியமெல்லாம் கொடிய வியாதிகளிலும் வேதனைகளிலுமே கழிந்தது. இருந் தாலும், தன் துன்ப நோவுகளின் மத்தியிலும் அவள் பிறருடைய கஷ்டங்களைப்பற்றி அலட்சியமாய் நினைப்ப

தில்லை. மற்ற வியாதிக்காரருக்கு விசேஷ சௌகரியங்கள் கொடுக்கப் படவேண்டுமென்று பரிந்து பேசுவாள். அவர்கள் தங்கள் சுகத்தை நன்ருகக் கவனித்துக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்துவாள். தனக்கென்று ஒன்றையும் தேடாமல், தன்னை ஒறுத்து, பிறரை மகிழ்விப்பதில் அல்போன்ஸா இவ்வளவு சிரத்தை காட்டுவதைப் பார்த்து சகோதரிகள், இவ்விதம் பரோபகார சிந்தையுள்ள ஒரு சகோதரி தங்கள் மத்தியில் இருப்பதைப் பற்றி சந்தோஷங்கொள்வார்கள்.

துறவிகளின் சபை ஜீவியத்தில், பிறர் சிநேக விஷயமாய் பல கடினமான சந்தர்ப்பங்களுண்டு. பிறரைப் பற்றிய கவனமில்லாமல், அல்லது அநுதாப மில்லாமல் சிலர் நடந்து கொள்வார்கள்; இப்படிச் செய்தால் இன்ஞருக்குக் கஷ்டம் உண்டாகுமே என்ற எண்ணம் சிலருக்கு வராது. சிலர் சிடுசிடுப்பு உள்ளவர்களாய் அல்லது முன்கோபிகளாயிருக்கலாம். இப்படிப் பலரோடும் கூடி ஜீவிக்கும்போது, சாந்தமும் அமைதியும் குறையாமல், எல்லாரோடும் நிதானமாய் அன்போடு நடந்துகொள்வது, மகா சிரமமாயிருக்கலாம்.

குளிப்பதற்குத் தண்ணீர் வைத்துவிட்டு வந்து வேலைக்காரி அல்போன்ஸாளைக் கூப்பிடுவாள். அவள் எழுந்து குளிக்கிற அறைக்குப் போவதற்குள் வேறு யாரும் போய் அதற்குள் நுழைந்து கொள்வார்கள். நேரம் பொறுத்துப் போனல் தண்ணீர் இருக்காது. இப்படி ஒரு நாளில் பலமுறை சம்பவிப்பதுண்டு. இதையெல்லாம் பற்றி முறைப்பாடு சொல்வது எவ்வளவு மதியீனம் என்று எண்ணி, அல்போன்ஸா ஒன்றும் பேச மாட்டாள். ஆனல் வேலைக்காரி சும்மாயிருப்பாளா? அவளுக்குக் கோபம் வரும். அவளிடம், "இருக்கட்டும், இதைப்பற்றி ஒன்றும் சொல்லாதே. இதெல்லாம் சபையில் இருக்கிறவர்கள் மத்தியில் சகஜம். இன்னும் கொஞ்சம் அதிகமாகப் புண்ணியம் சம்பாதிப்பதற்கு

இது உதவி. முதலில் அவர்கள் ஸ்நானம் செய்ய வேண்டியதுதான் முறை. அவர்களுக்கு எவ்வளவோ வேலைகளெல்லாம் இருக்கின்றன. நான் வேலையில்லாமல் சும்மாதானே இருக்கிறேன்" என்று அவளைச் சமாதானப் படுத்துவாள். எவ்விதம் சமாதானப் படுத்தினாலும் அவள் முறைப்பாடு சொல்லுவது ஒழியாது. "இந்த அம்மா.ளுடைய பிறர் சிநேகம் எனக்கு ரொம்ப சலிப்பாய்த்தான் இருக்கிறது" என்று அலுத்துக் கொள்வாள்.

அல்போன்ஸா மற்றவர்கள் மட்டில் பொறுமையும் அனுதாபமும் காட்டினதுபோல, மற்றவர்கள் அவளிடம் அவ்வளவு அநுதாப முள்ளவர்களாய் நடந்து கொள்ள வில்லை என்று தெரிகிறது. சில சகோதரிகள், அவள் தங்களுக்குத் தொந்தரவாயிருப்பதாக நினைத்து, அவள்மேல் அநேக சமயங்களில் கோபப்பட்டார்கள். என்ன நடந்தாலும், அவள் ஒருநாளும் சிரேஷ்டர்களிடம் முறையிட்டதே கிடையாது. சிலசமயம் சிரேஷ்டர்கள் தாங்களாகவே விஷயங்களை அறிந்து கொண்டால், அவர்களிடம் மற்றவர்களுக்காகப் பரிந்து பேசுவாள். "தாயாரே, அதைப் பற்றி ஒன்றும் விசாரிக்கவேண்டாம். அந்தச் சகோதரி என்னவானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும்; பொறுமையாயிருப்பதற்கு எனக்கும் ஏதாவது சந்தர்ப்பம் வேண்டுமல்லவா? இதுதானே சபையின் பொது ஜீவியம்" என்பாள். தன்னைப்பற்றி கடுமையாய்ப் பேசினவர்களிடம் அதிக அன்பாய்ப் பேசுவதும், தன்மனதைப் புண்படச் செய்தவர்களிடம் தாராளமாய்ப் பழகுவதும் அவளுக்கு வழக்கம். "என்னை மற்றவர்கள் நல்லவள் என்றாலும், பொல்லாதவள் என்றாலும், எல்லாம் எனக்கு இன்பமே" என்பது அவளுடைய கோட்பாடு.

ஒரு சமயம், அவளோடு வழக்கமாய் அதிகக் கடுகடுப்போடு பேசும் ஒரு சகோதரிக்கு வியாதி கண்டது.

அல்போன்ஸா அந்தச் சகோதரிக்காக அதிகம் வேண்டிக் கொண்டதுமல்லாமல், அவளை அடிக்கடி சந்தித்து ஆறுதல் சொல்வதும், வேண்டிய உதவிகளைச் செய்வது மாயிருந்தாள். எவ்வளவு அன்பும் பக்ஷமும் காட்டினாளென்றால், வியாதியாயிருந்த சகோதரி இதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு, அல்போன்ஸாளிடம், "நீங்கள் எனக்கு இவ்வளவு உபகாரம் செய்வதற்கு நான் என்ன செய்தேன் பலசமயங்களில் உங்களுக்கு மனம் நோகும்படித்தான் பேசியிருக்கிறேன்" என்றாள். அதற்கு அல்போன்ஸா, "அதெல்லாம் ஒன்றுமில்லை. ஏதோ, ஆத்திரத்தில், அல்லது விஷயம் சரியாய்ப் புரியாமல், இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லிவிட்டீர்கள். அதற்கென்ன, நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்; நான் அப்பொழுதே மறந்து போய்விட்டேனே" என்று சொன்னாள். அல்போன்ஸாளின் மிகுந்த பிறர்சிநேகத்தைப் பார்த்து, "நான் அல்போன்ஸாளிடம் எவ்வளவு கடுமையாக நடந்து கொண்டேன்" என்று நினைக்க நினைக்க இந்தச் சகோதரிக்கு மனதில் வருத்தம் பொங்கிக்கொண்டு வந்தது. இந்த வருத்தத்தைத் தாளமாட்டாமல், ஒரு நாள் இரவு தன் படுக்கையிலிருந்தும் எழுந்து, அல்போன்ஸாளிடம்போய், தன்னை மன்னிக்கும்படி பல தடவை மன்றாடினாள். இந்த மனமாற்றத்தைப் பார்க்க அல்போன்ஸாளுக்கு ரொம்ப சந்தோஷம். அவளைத் தேற்றிவிட்டு, பிறகு தன் பலவீனத்தையுங்கூட கவனியாமல், அவளுடைய படுக்கைவரையில் கூட்டிக்கொண்டு போய் விட்டாள்.

மற்றவர்களுடைய குற்றங் குறைகளுக்காகவும் அல்போன்ஸா பரிகாரமுயற்சிகள் செய்வது வழக்கம். அவர்கள் தங்கள் குற்றங்களை உணர்ந்து, அவைகளைத் திருத்திக் கொள்ளவேண்டுமென்று பல உபாயங்களைக் கையாடுவாள். ஒருவரைப் பற்றியும் தன் எண்ணத்தை அவள் வெளியிடுவதில்லை; அவர்களைப்பற்றி கடுமையாகவும்

நினைப்பது கிடையாது. மற்றவர்கள், ஆத்திரத்தில் அல்லது யோசிக்காமல், பிறரைப்பற்றி குறைவாகப் பேசும்போது, அதைக் கண்டிக்காமலும் இருக்க மாட்டாள். பிறர்சிநேகத்துக்கு விரோதமான பேச்சுக் கள் சிலசமயம் சாவானபாவமும் ஆகக்கூடும் என்று எச்சரிப்பாள். மென்மையான உணர்ச்சியுள்ளவர்களுக்கு, பிறர்சிநேகமற்ற வார்த்தைகளால் எவ்வளவு மனநோவு உண்டாகலாம் என்று எடுத்துக்காட்டுவதுமுண்டு. ஒரு வர் தான் பேசும் வார்த்தைகளைப்பற்றி எவ்வளவு எச் சரிப்பாயிருக்கவேண்டும் என்று காட்ட அவள் சொன்ன தாவது: "பணத்தைச் செலவழிப்பதற்கு உலோபி ஒருவன் எவ்வளவு யோசிப்பான்! நாம் பேசும்போதும் அதைவிட அதிகம் யோசித்துப் பேசவேண்டும்" என்றாள்.

பூச்சிப்பொட்டுக்கள் நிறைந்த இந்த உஷ்ணப் பிர தேசத்தில், சாயங்காலம் படுக்கைகளைச் சித்தம் செய்வது வெகு சிரமம். ஒவ்வொருநாளும் துணிமணி களை உதறி, படுக்கைகளைச் சித்தம் செய்யவேண்டும். இவ்விதம் படுக்கைகளைச் சித்தம் செய்வதில் அல் போன்ஸாளுக்கு ஒரு தனிப்பிரியம். எல்லோரும் இராப் போஜனம் செய்துகொண்டிருக்கும்போது, சிரேஷ்டர் களிடம் உத்தரவுபெற்று, மற்றவர்களுடைய படுக்கை களையெல்லாம் முஸ்திப்புச்செய்து வருவாள். எரிந்து போன கட்டை மெழுகுவர்த்திகளைப் பொறுக்கி வைத்துக்கொண்டு, அவைகளை மற்றவர்களுக்குக் கொடுத்து உதவுவதும் வழக்கம். ஆனால் அவளுடைய கல்லறையில் இப்போது எரிந்து கொண்டிருப்பது கட்டை மெழுகுதிரிகளல்ல. யாத்திரீகள் ஏற்றிவைக்கும் மெழுகுதிரிகள், அவள் கல்லறையைச்சுற்றி கணக் கில்லாமல் இராப்பகலாய் எரிந்துகொண்டிருக்கின்றன.



பர்ணஞானத்தில் ஏழை கிளாரம்மாள் சபைக் கன்னியரால் நடத்தப்படும் பெண்பாடசாலை



பர்ணஞானம் ஏழைக் கிளாரம்மாள் மடத்துத்தாயாரும் அல்போன்ஸாவின் ஆப்த சிநேகிதையுமான சங். கபிரியேல் சகோதரியும். இருவரும் அல்போன்ஸாவைப்பற்றிய வியப்பான விஷயம் ஒன்றைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறார்கள்

# பதினோராம் அதிகாரம்

1946ம் வருஷம், சேசுவின் திரு இருதயத்திருநாளுக்கு நவநாள் ஆரம்பிக்கவேண்டிய அன்று, அல்போன்ஸா ஒரு சகோதரியைப் பார்த்து, "தியாகம் செய்வதினாலும், துன்பதுயரங்களைச் சகிப்பதினாலுமே நாம் பாவத்துக்குப் பரிகாரம் செய்யவேண்டும்" என்று சொன்னாள். இது அவள் கன்னியர் அந்தஸ்தைத் தெரிந்து கொண்ட பொழுதே செய்துகொண்ட தீர்மானம். பேச்சிலும், செய்கையிலும் எனது சுபாவ நாட்டங்களுக்கு இடங் கொடுத்து ஒன்றையும் செய்யமாட்டேன். இந்த தீர்மானத்துக்கு மாறாக நடக்கும்போதெல்லாம், ஒரு பரிகாரமுயற்சியும் செய்வேன். ஆத்தும சோதனையில் இதைப்பற்றி விசேஷமாகக் கவனிக்கவேண்டும்" என்று ஆரம்பத்திலேயே தீர்மானித்துக்கொண்டாள். ஒரு போதும் அவள் இந்தத் தீர்மானத்தை மறந்துபோக வில்லை.

அவளுடைய வியாதியைப்பற்றி யாரும் அவளிடம் விசாரித்தால், அவள் சொல்வதாவது: "இவைகளை எனக்குக் கொடுத்தவர் என் சேசு. சிலுவைகளை வர விடுவதினாலேயே தனது சிநேகத்தை எனக்குக் காட்டுகிறார். தமது சிநேகிதர்களுக்கே அவர் அதிகச் சிலுவைகளை அனுப்புவது வழக்கம். அவர் அனுப்புகிற சிலுவைகளையெல்லாம் சகித்துக்கொள்ள எனக்கு சக்தியளிக்கும்படி வேண்டிக்கொள்ளுங்கள். 'நமதாண்டவருடைய பாதத்தில் துன்பதுரிதங்களாகிய பூக்களைத் தெளிப்போம்' என்று அர்ச். தெரசம்மாள் சொல்லவில்லையா!" என்பாள்.

"தரித்திரமும், துன்பதுயரங்களும் எனது பத்தாவின் ஆஸ்திகள்; ஆகையால் அவைகள் எனக்கும் ஆஸ்திகளே. அவைகளை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்வது என் கடமை." இதுதான் கஷ்டதுன்பங்களைப்பற்றி அவள் கொண்ட கருத்து. "ஒரு அரசன் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு ஏழைப் பெண்ணைக் கலியாணம் செய்கிறான்; அவனுடைய சொத்துச் சுதந்தரங்களெல்லாம் அவளுடையவைகளாகின்றன. இதற்காக அவள் முறையிட்டுக் கவலைப்படுவாளா! எவ்வளவோ சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்வாளல்லவா? அரசன் தனது சொத்து சுதந்தரங்களில் அவளுக்குப் பாத்தியதை இல்லை என்று சொன்னால்தான் அவளுக்கு வருத்தமுண்டாகும். அதுபோல, நாமும் நமது தெய்வீக பத்தாவின் ஆஸ்திகளை ஏற்றுக் கொள்கிறோமா? அவைகளை ஏற்றுக்கொள்ள எவ்வளவு வெறுப்புக் காட்டுகிறோம்! அவற்றில் நாமும் ஒரு பாகம் அனுபவிக்கவேண்டியதிருக்கிறதே, என்பதைப்பற்றி முறைப்பாடுகூட சொல்ல ஆரம்பித்துவிடுவதில்லையா? நமது பத்தாவின் ஆஸ்திபாடுகளும் நிந்தை நிர்பந்தங்களுந்தான்; இருந்தாலும், பத்தா அநுபவித்தவைகளை பத்தினி ஏற்றுக்கொள்ள மறுப்பது அவளுக்கு அழகா! அதற்குமாறாக நமது பத்தாவின் ஆஸ்தியில் நமக்கும் ஒரு பாகம் கிடைப்பதைப்பற்றி சந்தோஷப்பட வேண்டாமா?"

அல்போன்ஸா மனமுவந்து தனது பத்தாவின் ஆஸ்திகளை ஏற்றுக்கொண்டாள். மிகுந்த வேதனையனுபவித்துக் கொண்டிருந்தபோது, ஒருசமயம் அவள் சொன்னதாவது: "ஆண்டவரே, நான் அமைதியோடு துன்பப்படும்படி, இன்னும் அதிகம் தந்தருளும். நீர் எனக்குக் கொடுத்த பாத்திரத்தை முழுவதும் நான் ஏற்றுக்கொள்வேன்; கடைசித்துளிவரை அதைக் குடித்துவிடுவேன்." இவ்விதம் அவள் சொல்லிக் கொண்டதை அருகில் நின்றவர்கள் கேட்டார்கள்.

அவளுக்குண்டாகும் வேதனைகளைக் குறைக்கும்படி மற்றவர்கள் செய்த முயற்சிகளைப்பற்றிக் கூட அவள் வருந்துவதுண்டு. "இவர்கள் செய்யும் இந்த உபசாரங் களையெல்லாம் ஏற்றுக்கொள்ள எனக்கு உரிமை கிடையாது. நான் என் பத்தாவுக்கேற்ற உண்மையான பத்தினியாயிருக்க வேண்டுமானால், இவைகள் எனக்குக் கூடாது. மூன்று ஆணிகளால் அறையப்பட்டு, சிலுவை யில் தொங்கிக்கொண்டிருக்கும்போது, அவர் என்ன ஆறுதலை அடைந்தார்! அவருக்குச் செய்யப்பட்ட உப சாரங்களெல்லாம் அடிமிதிகள், நிந்தையவமானங்கள், தூஷணங்கள்; தாகத்துக்கு புளித்த கசப்பான காடி, இவைகள்தானே! தலை சாய்ப்பதற்கு அவருக்குக்கிடைத் தது ஒரு சிலுவை! அவருடைய பத்தினியாகிய நானோ ஒரு மிருதுவான தலையணையில் தலை சாய்த்திருக்கிறேன்; எனது சகோதரிகள் எனக்கு அன்பான வார்த்தைகள் சொல்லி, ஆறுதலளித்து வேதனையைக் குறைக்கப் பிரயாசைப்படுகிறார்கள். இவ்வளவு ஆறுதல்களின் மத்தியிலும் என்வேதனை எனக்கு எவ்வளவு அகோர மாகத் தோன்றுகிறது! இருந்தாலும், அன்பினால் செய்யப்படும் இந்த உதவிகளைப் பெற்றுக்கொள்ள எனக்கு ஒரு உரிமையுமில்லை. என் ஆத்துமமே, ஆண் டவருடைய இரக்கத்தைப் பார்த்து, அவருக்கு நன்றி செலுத்துவாயாக." இவ்விதம் பல சமயங்களிலும் தனக் குள் சொல்லிக்கொள்வாள். "என்னைப்பற்றி ரொம்பவும் கவனித்துக்கொள்கிறார்கள். ஆனால் இதினாலெல்லாம் என் வேதனைகள் குறையவில்லையே என்று நான் எண்ணு கிறேன். இப்படி நினைப்பதால் என் அன்பருக்கு ஒரு வேளை என்மீது பிரியமில்லாமலிருக்குமோ" என்று அவள் கவலைப்படுவதுமுண்டு. அகோர வேதனைகளின் மத்தியில், "என் ஆண்டவர் என்னைச்சோதிக்கிறார். அதனால் எனக்குச்சலிப்பு ஒன்றுமில்லை. இன்னும் நான் அதிகம் சகிக்கத் தயாராயிருக்கிறேன். என் மனதை முற்றிலும் தேவசித்தத்துக்கு அமைந்திருக்கும்படி

இன்னும் நான் செய்து கொள்ளவில்லை. அவருடைய சித்தத்துக்கு அமைந்திருக்காததினால்தான், எனக்கு இத்தனை சிலுவைகளும் வருகின்றன. நான் தேவசித்தத்துக்கு அமைந்திருக்கவேண்டும்; அமைந்திருக்கக் கற்றுக் கொள்ளவேண்டும்'' என்பாள்.

ஒருநாள், அல்போன்ஸாளுக்கு வரவிருந்த கடின வேதனை ஒன்றை, வராதபடி தடுக்க சிரேஷ்ட தாயார் பிரயாசைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இதையறிந்த நம் சகோதரி தாயாரைப் பார்த்து, "நான் இந்தக் கஷ்டத்தை அநுபவிக்கவேண்டுமென்பது தேவ சித்தம். அதை அநுபவிக்க எனக்கு மனத்திடன் வேண்டுமென்று ஆண்டவரை மன்றாடுங்கள். அதுவே எனக்கு வேண்டியது'' என்று தயவாய்க் கேட்டுக்கொண்டாள். ஆனால் தாயார் விடவில்லை. அப்போது அல்போன்ஸா அழுத்தமாய்ச் சொன்னதாவது: "தாயாரே, நீங்கள் இவ்விதம் செய்யக்கூடாது. வேதபுஸ்தகத்தில் மக்கபேயருடைய தாயாரைப்பற்றி வாசித்திருக்கிறீர்களா? தனது ஏழு மக்களையும் தைரியப்படுத்தி, மரணத்துக்கு அனுப்ப வில்லையா அவள்? நீங்கள் அவ்விதமே செய்யவேண்டும்; துன்பம், கஷ்டங்களை அனுபவிக்க என்னைத் தைரியப் படுத்துங்கள்'' என்றாள். தனது மரணத்துக்கு மூன்று நாளைக்கு முன்புதான், பெரியதாயாரைப் பார்த்து "உங்களுடைய துன்பங்களை யெல்லாம் என்னிடம் கொடுத்துவிடுங்களேன்! நான் துன்பங்களின் புத்திரி என்பது உங்களுக்குத்தான் தெரியுமே. துன்பங்களே எனது சந்தோஷத்துக்கும் மனச்சாந்திக்கும் காரணம்'' என்று சொன்னாள். "நான் ஒன்றுமில்லாமையிலிருந்து உருவானேன்; நான் ஒரு ஒன்றுமில்லாமை''. இந்த எண்ணம் எப்போதும் அவள் மனதில் குடி கொண்டிருந்தது. இவ்வித மனப்பான்மையை சருவேசுரன் எவ்வளவு மதிக்கிறார் என்றும் அவள் கூறுவதுண்டு: "மரத்தடியில் கிடக்கிற சருகுகள் மடித்துக் கெட்டுப் போகிறதல்லவா; அவைகள்தான் மரத்துக்கு உணவாகி,

அழகிய புஷ்பங்களைக் கொடுக்கின்றன. எல்லாரும் புஷ்பங்களைப் பார்த்து ரசிக்கிறார்கள். ஆனால் அவைகளுக்கு உணவாயிருந்துவரும் அழுகிப்போன அந்த சருகுகளைப் பற்றி நினைப்பது யார்? நாமும் அந்தச் சருகுகளைப் போல இருந்தால் போதும்."

மற்றவர்களும் தங்களுக்கு வரும் துன்பங்களை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று அவர்களை உற்சாகப்படுத்துவாள். தனது வேதனைகளைப்பற்றி ஒருநாள் விளையாட்டாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, வியாதியாயிருந்த ஒரு சகோதரியைப் பார்த்து, "சகோதரி, நாமெல்லோரும் துன்பங்களை அனுபவிக்கிறோம்; எதற்காக? எல்லாம் சேசுவுக்காகவும், நமது சபைக்காகவுந்தான்—நமது சபை பரிசுத்த தனத்தில் வளரும்படியாக" என்று சொன்னாள்.

நவகன்னியரில் சிலர் தங்களுக்குத் தியானம்முடிந்தவுடன் அல்போன்ஸாளைப் பார்க்க வந்தார்கள். அடுத்த நாள் அவர்களுக்கு வார்த்தைப்பாடு. அப்போது அவள் சொன்ன வார்த்தைகள் இன்றும் அவர்கள் தங்கள் மனதில் அப்படியே பதிந்திருக்கிறது என்கிறார்கள்: "அர்ச். மர்கரீத்துமரியம்மாள், கடைசி வார்த்தைப்பாடு கொடுக்கும் தினத்தன்று, மடத்து முற்றத்திலிருந்த பெரிய பாடுபட்ட சுருபத்தின் அருகில் சென்றாள். சுருபத்தைச் சுற்றி படர்ந்திருந்த ரோஜாச் செடிகளெல்லாம் நிறையப் பூத்திருந்தன. ஆண்டவர் அவளைப் பார்த்து, 'இந்தச் செடிகளை கைகளால் அணைத்து முத்தம் செய்' என்றார். அவளும் அப்படியே செய்த பிறகு ஆண்டவர் திரும்பவும் சொல்வார்: 'இப்போது இந்தச் செடிகள் நன்றாகப் பூத்திருக்கின்றன. ஆனால் சில நாட்களில் பூக்களெல்லாம் உதிர்ந்து போகும்; பாக்கி முட்கள்தான் இருக்கும். அப்போது அவைகளைக் கைகளால் சேர்த்து அணைத்துக் கொள்ளப் போனால், உன் கைகளைக் குத்திக் கிழித்து விடும்.

ஆனாலும், இப்போது நீ செய்ததுபோல, அப்போதும் அவைகளை அணைத்து முத்தமிடத் தவறக் கூடாது' என்று கூறினார்.” இந்த விருத்தாந்தத்தைக் கூறிவிட்டு, நவகன்னியரைப் பார்த்து மீண்டும் சொல்வாள்: “உங்களுடைய துறவற ஜீவியம் இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது. இப்போது ஒன்றும் அவ்வளவு பாரமாகத் தோன்றாது. ஆனால் நாள் போகப்போக, சிலுவைகளும் அதிகரித்துக் கொண்டேபோகும். அப்போதும் அவைகளைச் சிநேகித்து அரவணைத்துக் கொள்ள வேண்டும்” என்றாள்.

அவளிடம் எவ்வளவு மேலான தியாக சிந்தையும், துன்பதுரிதங்களில் ஆர்வமும் இருந்ததென்று அவள் தானே எழுதிய ஜெபத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்:

“ஓ சேசுவே, உமது திவ்விய இருதயத்தின் காயத்திலே என்னை மறைத்துக்கொள்ளும். பிறரால் சிநேகிக்கப்படவேண்டுமென்ற எனக்குள்ள ஆசையிலிருந்து என்னை மீட்டருளும். கீர்த்தியும் புகழ்ச்சியும் பெற வேண்டுமென்ற இழிவான பற்றுதலினின்றும் என்னை விடுவித்தருளும். நான் உமது திரு இருதயத்தில் பற்றி எரியும் அக்கினிச்சுவாலையின் ஒரு பொரியாகவும், ஒரு சிறு அணுவாகவும் ஆகும்படி என்னைத் தாழ்த்தியருளும். சிருஷ்டிகளையும் என்னையுமே நான் மறந்து விடுவதற்கு எனக்கு அநுக்கிரகம் செய்தருளும். என் ஆண்டவரே, வாக்குக்கெட்டாத மதுர சேசுவே, லௌகீக ஆறுதல்களையெல்லாம் எனக்குக் கசப்பாக மாற்றியருளும்.

நீதியின் சூரியனாகிய சேசுவே, உமது திவ்விய ஒளியினாலே என்புத்தியைத் தெளிவித்து, மனதைப் பிரகாசிப்பித்து, இருதயத்தைச் சுத்திகரித்து, உமது மட்டிலுள்ள சிநேகத்தால் எரியச்செய்து, என்னை உம்மோடு ஐக்கியப் படுத்தியருளும்”.

# பன்னிரண்டாம் அதிகாரம்

சேசுவின்மட்டில் அல்போன்ஸா கொண்டிருந்த மிகுந்த சிநேகத்தைப்பற்றி ஏற்கனவே சில விருத்தாந் தங்கள் நமக்குத் தெரியும். இந்தச் சிநேகம் எவ்வள வென்று திவ்வியநற்கருணையின் மட்டிலும், சேசுவின் திரு இருதயத்தின் மட்டிலும் அவள் காட்டிய பக்தியி லிருந்து அறிகிறோம்.

அவள் மரித்த பிற்பாடு கிடைத்த குறிப்பு நோட்டு ஒன்றில் அவள் எழுதியிருப்பதாவது: "எனக்குக் கிடைக்கக்கூடிய நேரம் எல்லாவற்றையும் திவ்விய நற் கருணைக்கு முன்பாகச் செலவழிக்கப் பிரயாசைப் படுவேன். எனது ஏக ஆசை, நமதாண்டவரை மனப் பூர்வமாக சிநேகிக்கவேண்டும் என்பதே. மனம் பொருந்தி ஒரு அற்பப் பாவத்தைச்செய்து, அதனால் சருவேசுர னுடைய மனதை நோகச்செய்வதைவிட, சாவதற்குத் தயாராயிருக்கிறேன்". இந்தத் தீர்மானத்தை எவ்விதம் நிறைவேற்றினாள் என்பதற்கு அவளுடைய ஜீவியமே அத்தாட்சி. தினந்தோறும் அநேகந்தடவை திவ்விய நற் கருணை சந்தித்து வந்தாளென்று அவள் எழுதிய குறிப் புக்களிலிருந்து அறிகிறோம். தினந்தோறும் பலதடவை ஆசைநன்மை வாங்கி வந்தாளென்பதும் இக்குறிப்புகளி லிருந்தே தெரிகிறது. கோவிலுக்கு நடந்துபோக முடி யாதபோது, மனதினால் அங்கு சென்று, நமதாண்ட வரைத் தரிசிப்பாள். வியாதியில் பிரஞையற்றுப் புலம்பிக்கொண்டிருந்த போதுங்கூட, திவ்விய நற் கருணையின்மீது எவ்வளவு பக்தி வைத்திருந்தாளென்று, அவள் வியாதியின் அகோரத்தினால் ஸ்மரணையற்றுப் போய் இருந்தபோது புலம்பிக் கொண்டிருந்ததிலிருந்து

தெரிந்தது: "அவள் திவ்விய நற்கருணைக்கு முன்னல் தியானம் செய்து கொண்டிருக்கும்போது பார்க்க வேண்டும்; அப்போது தெரியும் அவள் ஆண்டவரோடு எவ்வளவு ஒன்றுபட்டுப் போயிருந்தாளென்று" என்று ஒரு சிரேஷ்டத்தாயார் சொல்லுகிருர்கள். அவளுக்கிருந்த மனே வியாகுலங்களையும், வியாதி நோவுகளையும்பற்றி யாரும் அநுதாபங் காட்டினல், "வேதனைகள் எவ்வளவு கொடூரமாயிருந்தால்தான் என்ன? சேசுநாதருடைய திரு இருதயத்தின் காயத்தில் வைக்கும் பூவாக நான் அதைக்கருதி ஒப்புக் கொடுக்கும்போது, அது எனக்கு எவ்வளவோ ஆறுதலாக மாறிவிடுகிறது" என்று சொல்வாள். தன் குறிப்பு நோட்டில் ஒரு இடத்தில் அவள் எழுதியிருப்பதாவது: "துன்பமும் நிந்தையும் வரும்போது, சேசுவின் திரு இருதய நிழலில் நான் அடைக்கலம் தேடுவேன்; பிறகு அவைகளுக்காக சருவேசுரனுக்கு நன்றி செலுத்துவேன்".

தூக்கமில்லாத இரவுகளில், அடிக்கடி சிநேகமுயற்சிகள் செய்து கொண்டிருப்பாள். "இரவெல்லாம் நான் தூக்கமில்லாமல் விழித்துக் கொண்டிருப்பதும் ஒரு விதத்தில் நல்லதுதான். அந்த நேரத்தையெல்லாம், தேவசிநேக முயற்சிகளால் நிரப்பிக் கொண்டிருக்கலாமல்லவா" என்று அவள் சொல்வது வழக்கம். தனது துன்ப துயரங்களையெல்லாம் சேர்த்து, சேசுவின் திரு இருதயத்துக்கு ஒப்புக் கொடுப்பாள்: "சேசுவின் திரு இருதயத்தைப் பார்த்து நீங்கள் செய்யும் முக்கியமான ஜெபம் எது" என்று கேட்டதற்கு, அவள் சொன்ன பதில்: "அந்த இருதயத்திலுள்ள காயந்தான் எனக்குப் பெரிய ஆறுதல். என் ஆண்டவராகிய சேசுவே, உமது இருதயத்தின் காயத்துக்குள் என்னை வைத்து மறைத்துக் கொள்ளும் என்று சொல்லுவேன். இதுதான் நான் திரும்பத்திரும்ப அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கும் ஜெபம்" என்று சொன்னுள்.

சேசுவின் திரு இருதயத்தைப்பற்றி பேசுவதென்ருல் அவளுக்கு அலாதி பிரியம். "சேசு" என்ற பெயரைக் கேட்டாலே, அவள் இருதயம் பூரிக்கும். ஜூன் மாதம் வந்து விட்டால், அவளுக்குப் பேரானந்தந்தான். கூடுமானபோது, தினந்தோறும் திரு இருதய சுருபத்துக்குப் பூச்சூடி, பீடத்தை அழகு படுத்துவாள். ஜூன் மாதப் பக்தியே, சேசுவின் திரு இருதயத்தை அண்டிப்போக ஏற்றவழி என்று மற்ற சகோதரிகளிடம் அடிக்கடி சொல்வதுண்டு.

சேசுவின் திரு இருதயத்தின்மீது பக்தி பூண்டவர்களுக்கு, பரிசுத்த கன்னிமாதாவின் மட்டிலும் பக்தியில்லாமல் போகாதல்லவா? அல்போன்ஸா, தான் கன்னியர் வஸ்திரம் தரித்தபோது, அமலோற்பவத்தின் அல்போன்ஸா என்ற பெயரைத் தெரிந்து கொண்டது, மாதாமட்டில் அவளுக்குள்ள மிகுந்த பக்தியினுலேயே. அவள் தன்னை முழுவதும் நமதாண்டவருக்குப் பரித்தியாகப் பலியாக ஒப்புக் கொடுத்தாளல்லவா, அந்தப் பரித்தியாகப் பலியை மாதாவின் மூலமாகவே ஒப்புக் கொடுத்தாள். சிறு பிள்ளையாயிருக்கும்போதே, சனிக்கிழமை அவளுக்கு நன்மை வாங்கும் நாள். மே மாத பக்தி அவளுக்கு இளமையிலேயே ஏற்பட்ட பக்தி. மடத்தில் பிரவேசித்த பிறகு இந்தப்பக்தி பன் மடங்கு அதிகரித்தது. மாதாவுக்காகப் பிரத்தியேகமான சில பக்தி முயற்சிகளைச் செய்து வருவதற்கு உத்தரவு பெற்றிருந்தாள். மற்றவர்களும் மாதாவின்மீது விசேஷ பக்தி காட்டவேண்டுமென்று தூண்டுவாள். ஒவ்வொருவரும் சிறு சிறு ஒறுத்தல் முயற்சிகள் செய்து மாதாவுக்கு ஒப்புக் கொடுக்க வேண்டுமென்று அவளுக்கு ஆசை. ஆகையால் தன்னைப் பார்க்க வருகிறவர்களிடம், "நீங்கள் மாதாவுக்காக என்ன செய்து கொண்டு வருகிறீர்கள்; ஒறுத்தல் முயற்சிகள் செய்து அவளுக்குக் காணிக்கையாக அவற்றைக் கொடுக்கிறீர்களா? இன்று உங்கள் மனதை

ஒடுக்கி, மாதாவுக்காக நீங்கள் செய்த தியாகங்கள் எத்தனை? நீங்கள் செய்யும் ஒவ்வொரு தியாகமும், மாதாவின் கிரீடத்தில் நீங்கள் பதிக்கும் ஒவ்வொரு முத்து என்பதை மறந்து போகவேண்டாம்" என்று இப்படி பலபடியாகக் கேட்பாள். "பரிசுத்த மரியே, என்தாயே, என்னுடைய இருதயத்தை உமது திருக்குமாரனின் கண்களுக்கு ரம்மியமான ஒரு நந்தவனமாக மாற்றியருளும்" என்று நன்மை வாங்கப்போகும் போதெல்லாம் அவள் சொல்வது வழக்கம். தன்னைப் பார்க்க வரும் சிறு குழந்தைகளுக்கெல்லாம் இந்த ஜெபத்தைக் கற்பிப்பாள்.

கள்ளனைக் கண்ட பயத்தால் அவளுக்கு ஜுரம் வந்ததல்லவா, அது சுகமான பிறகு தினந்தோறும் நூற்று ஐம்பத்து மூன்று மணிச் செபமாலை செய்யத் தவறுவதில்லை. அவளுடையக் கஷ்ட துன்பங்களிலெல்லாம் அவளுக்கு முன்மாதிரி நமது பரிசுத்த வியாகுலத்தாயே. எப்போதும் வியாகுல மாதாவின் படமொன்று அவளோடிருக்கும். வேதனைகள் அதிகக் கொடூரமாயிருக்கும் போது அதை நோக்குவாள். அதைப் பார்த்தால் போதும், எந்த வேதனைகளையும் சகித்துக்கொள்ள துணிவு உண்டாகி விடும். தினந்தோறும் அந்தப் படத்தைச்சுற்றி பூக்கள் வைத்து அதை அலங்கரிப்பது வழக்கம். அவளால் வெளியில் சென்று பூக்கள் கொண்டு வரமுடியாதபோது, மற்றவர்களைக் கொண்டாவது அதற்குப் பூச்சூட செய்வாள். மரண வேளையிலுங்கூட, அந்தப் படத்தின் பக்கம் தலையைச் சாய்த்து, "தாயே, ஆ என் தாயே" என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

நமதாண்டவருடைய கைத்தாதையாகிய அர்ச். சூசையப்பரையும் அவள் மறந்து விடவில்லை. சிறுப்பத்திலிருந்தே அவருடைய திருநாளுக்கு முன்வரும் ஏழு புதன்கிழமைகளிலும் நன்மை வாங்கி வரும் பழக்கமிருந்தது. மலையாளத்தில் கிறீஸ்தவர்கள் மத்தியில்

வழங்கி வரும் நல்ல வழக்கங்களில் ஒன்று: அர்ச். சூசையப்பர் திருநாளன்று மூன்று பிச்சைக்காரருக்குப் போஜனங் கொடுப்பது. அல்போன்ஸா வீட்டிலும் இந்த தர்மக்கிரியைச் செய்யத் தவரமாட்டார்கள். அப்போது அல்போன்ஸாளே தர்மக்காரருக்கு போஜனம் பரிமாறுவாள். மடத்துக்கு வந்த பிறகும் அவள் இந்த வழக்கத்தைக் கைவிட்டுவிடவில்லை. சுகமாயிருக்கும்போது அவளே சமையல் செய்து சாப்பாடு பரிமாறுவாள். வியாதியாயிருக்கும்போது, எழுந்திருக்க முடியாமல் பாயும் படுக்கையுமாய்க் கிடந்தாலொழிய, மற்றப்படி பிச்சைக்காரருக்கு சாதம் பரிமாறவாவது வந்து விடுவாள். திருநாட்களில்தான் சிரேஷ்டர்களின் உத்தரவோடு தர்மக்காரருக்குத் தாராள மனதோடு உதவினாள் என்பதில்லை; ஒருபோதும் அவர்களை வெறுமனே அனுப்பிவிட அவளுக்கு மனம் கேளாது.

# பதின்மூன்றும் அதிகாரம்

அல்போன்ஸா தனக்கு மரணம் அடுத்திருக்கிறது என்று, முன்னுலேயே அறிந்து கொண்டதாகத் தெரிகிறது. அடிக்கடி வந்து கொண்டிருந்த வெறுமையான உணர்ச்சி மரணத்தின் அடையாளம் என்று அவள் நிச்சயித்திருக்கவேண்டும். "உடல் கனமில்லாத பறவைகள் சுலபமாக வெகுதூரம் பறந்து செல்லும். நானும் அவ்விதமே பறக்கப் போகிறேன். எனது தியாகம் பூர்த்தியடையும்போது, என் பத்தா என்னைக் கூப்பிடுவார். அப்போது, ஒரே பாய்ச்சலாய், என் ஆண்டவரிடம் விரைந்து செல்வேன். என் மரண நேரம் உங்களில் ஒருவருக்கும் தெரியாமல் போகும். எனக்கு வருகிற கொடிய வேதனைகளில் ஒன்று என் மரணத்துக்குக் காரணமாயிருக்கும். ஆனுல், சாதாரணமாக வருகிற வேதனைகளும், மரண அவஸ்தைபோல தெரிவதால், என் ஆத்துமம் பிரிவதை நீங்கள் கவனிக்க மாட்டீர்கள்" என்று தன் மரணத்தைக் குறித்து ஏற்கனவே சொல்லியிருந்தாள்.

மரணம் தன் கையில் இருப்பது போலவும், அதைத் தடுப்பதற்குக்கூட தனக்கு சக்தி இருப்பது போலவும் பேசியதாக அவளுடைய வார்த்தைகளில் காணலாம். பக்கத்தில் நின்ற சகோதரிகளைப் பார்த்து ஒரு சமயம், "நான் இதுவரை துன்பங்கள் அநுபவித்தது போதாதா? இப்போது இறந்துபோனுல் என்ன"? என்று அல்போன்ஸா கேட்டாள். அவர்கள், "இல்லை, சகோதரி, இன்னும் கொஞ்சக்காலமாவது நீங்கள் எங்களோடு இருக்கவேண்டும்" என்றூர்கள். அதற்கு அவள் சரி என்று சம்மதித்தாள். மற்றெரு சமயம் தாயார்



பர்ணஞானத்திலுள்ள கோவில். கல்லறைத் தோட்டத்திற்குச் செல்லும் பாதையை இடதுபுறம் பார்க்கலாம்.



அல்போன்ஸாளை அடக்கம் செய்திருக்கும் கல்லறைத் தோட்டத்துக்குப் போகும் வாசல்
கல்லறைக் கோவிலையும் காணலாம்

அவளைப்பார்த்து, "இப்போது மரிப்பதென்றால் உங்களுக்குச் சந்தோஷமாயிருக்குமா? நீங்கள் மரணத்தை ஆசிக்கிறீர்களா"? என்றுகேட்க, அவள் சொல்வாள்: "நான் மடத்தில் எல்லாருக்கும் பெரும் பாரமாயிருக்கிறேன் என்று நினைக்கும்போது, இறந்து போனால் நல்லது என்ற எண்ணம் வருகிறது. ஆனால் நமதாண்டவர் அநுபவிக்கும் நிந்தையவமானங்களை நினைக்கும்போதும், உலகில் அவருடைய சொந்தப் பிள்ளைகள் என்று சொல்லப்படுகிற கிறீஸ்தவர்களே அவருக்குச் செய்யும் துரோகங்களை நினைக்கும்போதும், அவருக்கு ஆறுதலாக, இந்த வேதனைகளை மட்டுமல்ல, இன்னும் அநேகம் வேதனைகளையும் அநுபவிக்கவேண்டுமென்று ஆசை வருகிறது. கொஞ்சக்காலத்துக்கு மட்டுமல்ல, உலகமுடியுமட்டும் வேதனைப்பட்டு அழுந்திக் கொண்டிருக்க வேண்டுமானாலும் எனக்குச் சம்மதமே. துன்பப்படாத நாளெல்லாம் எனக்குப் பலனற்ற நாளாகத் தோன்றுகிறது. தாயாரே, நமக்கு உண்மையான ஆறுதல் எது தெரியுமா, நாம் துன்ப துயரங்களை அனுபவித்த பிறகு உண்டாகிறதல்லவா ஒரு மனச் சாந்தி, ஒரு மன நிம்மதி, அதுதான் உண்மையான ஆறுதல். ஆனால் துன்பம், வியாதி வரும்போது கஷ்டமாகத் தான் தோன்றுகிறது" என்றாள்.

அல்போன்ஸா சகோதரியின் மரணத்துக்கு ஒரு வாரத்துக்குமுன், கொழுவனால் மடத்து சிரேஷ்டராயிருந்த ஊர்சுலா தாயார் பர்ணஞானத்துக்கு வந்திருந்தார்கள். இவர்கள்தான் அல்போன்ஸாளை நவசன்னியாசத்தில் விசாரித்து வந்தவர்கள். அவர்களிடம், "எனக்கு வரப்போகிற அடுத்த வேதனையோடு மரணமும் வர வேண்டும் என்று வேண்டிக் கொள்ளலாமா" என்று கேட்டாள். இது ஊர்சுலா தாயாருக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும், "உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள். மரணம் வருவதும் வராததும் உங்கள் கையிலிருக்கிறது.

நீங்கள் அதற்குச் சம்மதிப்பதுதான் தாமதம், ஆண்டவர் உடனே உங்களைத் தன்னிடம் அழைத்துக் கொள்ளத் தயாராயிருக்கிறார்" என்று சொன்னார்கள். இந்த சம்பாஷணைக்குப் பிறகு அல்போன்ஸா சங். அலெக்ஸாந்தர் ஞாவாலில் சுவாமியாருக்கு "சிக்கிரம் எனக்கு மரண அவஸ்தை ஆரம்பிக்கபோகிறது; எனது நீதிபதியைச் சந்திக்கப் போகிறேன்" என்று எழுதினாள்.

மரணத்துக்குச்சில நாட்களுக்குமுன், அல்போன்ஸா ஒரு கனாக் கண்டதாகச் சொன்னாள். "நான் நெடும் பிரயாணம் செய்து மலைகளையும் ஆறுகளையும் கடந்து ஒரு நெருக்கமான இடத்துக்கு வந்தேன். இன்னும் ஒரு துவாரத்தின்வழியாய் நுழைந்து போகவேண்டும். ரொம்ப சிறிய துவாரம்; அதன் வழியாக நுழைந்து போவது கஷ்டமாகத் தோன்றியது. திகைத்துக் கொண்டு நிற்கும்போது, அந்தத் துவாரத்தின் வழியாய் உள்ளே நோக்கினேன். சற்றுத் தூரத்தில் அகன்ற அலங்காரமான ஒரு அழகிய இடத்தில், ஆண்டவர் தமது மகத்துவப் பிரதாபம் தோன்ற வீற்றிருந்தார். அவர் என்னைப் பார்த்த வண்ணமாகவே இருந்ததாகத் தோன்றியது. நான் பயத்தால் தலையைக் குனிந்து கொண்டேன். திரும்பவும் நிமிர்ந்து பார்த்தபோது, என் கண்ணுக்கு அநேகம்பேர் போய்க் கொண்டிருப்பதாகக் கண்டேன். அவர்களெல்லாம் என்னைக் கடந்து சென்ற பிறகு, ஆண்டவர் என்னைக் கூப்பிட்டு, நீ ஏன் பயப்படுகிறாய்? இப்படி வா என்று கூப்பிட்டார். இதோடு சொற்பனம் கலைந்து போனது" இதுவும் தனது மரணம் அடுத்திருப்பதின் அறிகுறி என்று அல்போன்ஸா அறிந்து கொண்டாள்.

1946, ஜூலை 27ம் தேதி, சனிக்கிழமை. பர்ணஞானம் மடத்தை விசாரித்து வந்த சங். குருவில்லா பிலாத்தோட்டம் சுவாமியார் சகோதரி அல்போன்ஸாளைப் பார்க்கவந்தார். அப்போது அவள் படுக்கையில் உட்கார்ந்துகொண்டு ஜெபமாலை சொல்லிக் கொண்டிருந்

தாள். சுவாமியார், "என்ன அல்போன்ஸா, என்ன விசேஷம்"? என்று வினவினர். அவள் அதற்கு, "சுவாமி, நாளைக்கு ஒரு யுத்தம் நடக்கப்போகிறது, நான் அதற்கு முஸ்திப்புச் செய்துகொண்டிருக்கிறேன்" என்றாள். இந்த வார்த்தைகளில் விசேஷம் எதும் இருப்பதாக சுவாமியார் நினைக்கவில்லை. தனது வியாதியைப் பற்றி இதற்குமுன் "யுத்தம்" என்று அவள் குறிப்பிட்டதில்லை. சுவாமியாரும் சிரித்துக்கொண்டே, "நீங்கள்தான் இந்தமாதிரி எத்தனையோ யுத்தங்கள் செய்திருக்கிறீர்களே. உங்களுடைய பழய ஆயுதங்களையெல்லாம் துடைத்து, கூர்மைப் படுத்தி வைத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்ல, அவளும் அவ்விதந்தான் செய்து கொண்டிருக்கிறேன். நீங்கள் எனக்காக அதிகமாக வேண்டிக்கொள்ள வேண்டும்" என்று வெகு உருக்கமாகச் சொன்னாள்.

மறு நாள், ஜூலை மாதம் 28ம் தேதி, ஞாயிற்றுக் கிழமை. அல்போன்ஸா காலையில் எழுந்து எல்லாரோடும் பூசை காணச்சென்றாள். அவள் சாதாரணமாய் கதவுக்குப் பக்கத்தில் இருந்து பூசை காண்பது வழக்கம். அதுபோல கதவுக்குப் பக்கத்திலேயே இருந்து அன்றும் பூசை கண்டாள். பூசை முடிவதற்குள் வேதனை துவக்கிற்று. உடனே மடத்துக்குத் தூக்கிக்கொண்டுவந்து படுக்க வைத்தார்கள். வழக்கமாக வேதனை வருவதற்கு முந்தின தினமே அதைப்பற்றி அவளுக்குத் தெரியும். "நாளைக்கு ஒரு வேளை இறந்து போனாலும் போவேன்" என்று மற்றவர்களிடம் சொல்வது வழக்கம். ஆனால் இந்த சமயம் தனது வேதனையை முன்னறிந்து அவ்விதம் ஒன்றும் சொல்லவில்லை. ஒருவேளை, தன் மரணத்தைப் பற்றி அறிந்திருந்தாலும், மற்றவர்களுக்கு அது தெரியக் கூடாது என்று விரும்பியிருக்கலாம்.

ஆரம்பத்தில் வேதனை வழக்கம்போலவே தோன்றினது. அதனால் மற்றவர்கள் ஒன்றும் பரபரப்புக்

கொள்ளவில்லை. அவள்மட்டும், "எனக்கு இதைச் சகிக்கப் போதுமான மனத் தைரியத்தை ஆண்டவர் தரும்படியாக வேண்டிக் கொள்ளுங்கள்" என்று கேட்டுக்கொண்டாள். எட்டு மணிக்கெல்லாம் வேதனையின் கொடூரம் உச்ச நிலையை அடைந்தது. சாதாரணமான வேதனையைவிட பன்மடங்கு கொடியதாகக் காணப்பட்டது. அல்போன்ஸா பட்ட அவஸ்தைகளை வார்த்தைகளால் சொல்லமுடியாது. அவளைப் பார்க்க வந்தவர்களில் சிலர் பார்க்கச் சகிக்கமுடியாமல், அழுதுகொண்டு வெளியே போய்விட்டார்கள். அன்று விசேஷ உபாதனைகளை அவள் அனுபவித்துக் கொண்டிருந்தாலும், ஒருவரும் அவளுக்கு மரணம் அடுத்திருக்கிறது என்று நினைக்கவில்லை. "இன்று அமாவாசை; அதனால்தான் வேதனையின் அகோரம் மட்டுக்கு மிஞ்சித் தோன்றுகிறது" என்று பேசிக் கொண்டார்கள்.

சாதாரணமாய் வேதனை நேரங்களில் அல்போன்ஸா கண்களை மூடிக்கொண்டிருப்பாள்; பேசுவதும் கிடையாது. ஆனால் இன்று, இதுவரை கண்களை மூடிக்கொண்டு இருந்தவள், பத்து மணி சுமாருக்குக் கண்களைத் திறந்து, பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்து புன்முறுவல் செய்து; பின் தான் படும் வேதனைகள் பொறுக்க மாட்டாமல், "ஐயையோ, என்னால் சகிக்க முடியவில்லையே! எனக்காக வேண்டிக் கொள்ளுங்களேன். என் வேதனைகளையெல்லாம் சருவேசுரனுக்கு ஒப்புக் கொடுக்கிறேன்; இந்தக் கருத்தை எனக்காகப் புதுப்பித்துக் கொண்டு வாருங்கள்" என்று சொன்னாள். இதற்குள் கண்களில் கண்ணீர் பெருகி வழிந்தோடியது. போர்வையை இழுத்து முகத்தை மூடிக்கொண்டாள். "இந்த வேதனையைக் கொடுத்தது என் ஆண்டவர்தானே....நான் இந்த வேதனையை அநுபவிக்கவேண்டும்...ஆம், அநுபவிக்க வேண்டும்" இவ்வார்த்தைகளைச் சொல்லி கொஞ்சம் மௌனமாயிருந்துவிட்டு, மணி என்னவென்று கேட்

டாள். பிறகு உரத்த குரலில், "என்தாயே, என் அம்மா, என் அம்மா" என்று கூவினுள். தாயார் பாடுபட்ட சுரூபத்தை எடுத்து அவளுக்கு முத்தி செய்யக் கொடுத்துக் கொண்டே, "மகளே, சமாதானமாயிரு" என்ருர்கள். அதற்கு, "எனக்கு யாதொரு சமாதானக் கேடுமில்லையம்மா" என்று கம்மிய குரலில் பதிலளித்தாள்.

கொஞ்ச நேரம் சென்றது, எங்கேயோ போவதற்குத் தன்னைத் தயார் செய்துகொள்பவள்போல சைக்கினைகள் செய்தாள். "என் உடுப்பைக் கொண்டு வாருங்கள். நான் போகவேண்டும்" என்ருள். மற்றவர்கள்: "உடுப்புகளெல்லாந்தான் போட்டிருக்கிறீர்களே" என்று சொன்னதை அவள் கவனிக்கவில்லை. "ஒரு நல்ல உடுப்புக் கொண்டு வாருங்கள்; முக்காடும் நல்லதாயிருக்க வேண்டும், நான் சீக்கிரம் போகவேண்டும்" என்று மறுபடியும் சொன்னுள்.

மரணத்தைப்பற்றிய எண்ணம் ஒருவருக்கும் உண்டாகாவிட்டாலும், சுவாமியாரையும், டாக்டரையும் கூப்பிடுவது நல்லது என்று தோன்றியது. அவர்கள் வருவதற்குமுன் அல்போன்ஸா திரும்ப ஒரு முறை பிரஞை வந்தவள்போல கண்களைத் திறந்து, "சேசுமரி சூசை" என்ருள். பிறகு கண்களை மூடிக்கொண்டாள். டாக்டர் வந்து கை நாடியைப் பார்த்துவிட்டு, "நாடி மிகவும் தளர்ந்திருக்கிறது" என்று சொன்னுர். ஆனுல் வேதனை நேரங்களிலெல்லாம் இவ்விதம் நாடி தளர்ந்திருப்பது சகஜம். அவஸ்தை கொடுக்கலாமா என்று சற்று யோசித்தார்கள். கடைசியாக, அவஸ்தை கொடுத்து விட்டால் நல்லது என்று டாக்டர் சொன்ன ஆலோசனையின்மேல், கடைசித் தேவதிரவிய அநுமானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அவஸ்தை கொடுத்து முடிந்தது. அல்போன்ஸா தனக்குப் பிரியமுள்ள சகோதரி கபிரியேலைக் கூப்பிட்டு, "என் தொண்டையைத் தொட்டுப்பாருங்கள் என்ருள்.

தொண்டையைத் தடவிக் கொண்டிருக்கும்போதே, "என் தொண்டையில் ஒரு சப்தம் கேட்கிறதா? நான் சாகிறேன்" என்றாள். ஆனால் சகோதரி கபிரியேல் அதை அறிந்து கொள்ளவில்லை. அவளுடைய திவ்விய மணாளன் பரலோகத்திலிருந்து அவளை அழைக்கும் எக்காளத்தின் தொனி அது என்று அவர்களுக்குத் தெரியாது. பிறகு அல்போன்ஸா அசைவற்றுப் படுத்திருந்தாள். வழக்க மாய் வேதனைகளுக்குப்பின் வரும் பரவச நிலையில் இருக் கிறாள் என்று சில சகோதரிகள் அவளுக்குப் பக்கத்தில் காத்துக் கொண்டிருந்தார்கள். இப்படி மூன்று மணி நேரம் காத்துக் கொண்டிருந்த பிறகுதான் அவள் இறந்து போனாள் என்று கண்டார்கள். அவஸ்தை கொடுத்த கொஞ்ச நேரத்துக்குள்—1946, ஜூலை 28ம் தேதி பன்னிரண்டு அடித்து சில நிமிஷத்துக்குள்— அல்போன்ஸா சகோதரி மரித்திருக்கவேண்டும்.

அல்போன்ஸா தனது மரணத்தைப் பற்றி முன் அறி வித்ததுபோலவே சம்பவித்தது. எனக்கு வரும் வேதனை கள் ஒன்றினால் எனக்கு மரணம் நேரும்; என் ஆத்துமம் பிரியும் நேரத்தை ஒருவரும் பார்க்க மாட்டார்கள் என்று சொல்லியிருந்தாள். அவ்விதமே சம்பவித்தது. ஆனால் தனக்கு மரணம் வரும் நாளையும் நேரத்தையும் முன் அறிந்திருந்தாளா? அறிந்திருந்தாள் என்றுதான் நினைக்க வேண்டிருக்கிறது. அவளுடைய ஜீவியத்தைப் போல் மரணமும். அவளுடைய ஜீவியம் மறைந்த ஜீவியம்; மரணமும் யாரும் அறியாமல் அவள் ஆத்து மத்தைப் பிரித்துக்கொண்டு சென்றது. இரகசியத்தில் துன்பங்களை அநுபவிப்பது அவளுடைய ஆசை. கடைசி வேளையிலும் ஒருவரும் எதிர்பாராத சமயந்தான் மரண மும் வந்தது. "நீ பிறரால் அறியப் படாமலிருக்க விரும்பு; நீ ஒன்றுமில்லாமை யென்று மதிக்கப்படுவதை நேசி" என்று கிறீஸ்துநாதர் அநுசாரத்தின் வாக்கியத் துக்கு அல்போன்ஸா சகோதரியின் ஜீவியம் ஒரு எடுத் துக் காட்டாயிருந்ததென்றால் பொய்யாகுமா?



பர்ணஞானத்தில் சங். அல்போன்ஸா சகோதரியை அடக்கம் செய்திருக்கும்
கல்லறைக் கோவில்



சங். அல்போன்ஸா சகோதரியின் கல்லறை. இராப்பகலாய் இவ்விதம் மெழுகுதிரிகள் எரிந்துகொண்டிருப்பதையும் ஜனங்கள் ஜெபித்துக்கொண்டிருப்பதையும் எப்போதும் காணலாம்

# பதினுன்காம் அதிகாரம்

அல்போன்ஸாளின் ஜீவியம் மறைந்த ஜீவியம், மரணமும் அப்படியே இருந்தது என்று பார்த்தோம். அவளுடைய அடக்கமும் அப்படியே. உலகில் அவளை அறிந்தவர்கள் வெகு சொற்பப் பேர்; அடக்கத்துக்கு வந்தவர்களும் சொற்பமே. மடத்துப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த சிறுவர்களையும், அவளுடைய தகப்பனுர், சில நெருங்கிய உறவினர், இவர்களையும் தவிர மடத்துக்கு வெளியிலிருந்து யாரும் வரவில்லை. இருந்தாலும் மடத்திலுள்ள சகோதரிகள் அனைவரும் ஒரு சிறந்த மாணிக்கத்தைப் பறிகொடுத்து விட்டதாகவே எண்ணினுர்கள்.

அவள் இறந்து போனுள் என்று தெரிந்தவுடன் சகோதரிகளெல்லாரும் அவளுடைய சரிரத்தைச் சூழ்ந்து நின்று மரியாதையோடும் அன்போடும் அதை முத்தி செய்தார்கள். மறுநாள் திங்கட்கிழமை அடக்கம். மடத்திலிருந்து அவளுடைய சரிரத்தைக் கன்னியரே தூக்கிக் கொண்டு கோவிலுக்குப் போனுர்கள். பூசையில் அவளுக்கு ஆத்தும குருவாயிருந்த சங். ரோமுலுஸ் சுவாமியார் அல்போன்ஸாளின் ஜீவியத்தை விளக்கி ஒரு பிரசங்கம் செய்தார்கள். பின், பக்கத்திலுள்ள கல்லறைத் தோட்டத்தில் சரிரம் பூசிதமாக அடக்கம் செய்யப் பட்டது.

சங். ரோமுலு சுவாமிகள் தமது பிரசங்கத்தில் சொன்ன ஒரு விஷயம் அங்கு இருந்தவர்கள் மனதில் அப்போது விசேஷமாகப்பட்டதோ, என்னமோ. ஆனுல், இப்போது அதை வாசிப்பவர்களுக்கு, அவர் சொன்னது உண்மையாகவே தீர்க்கதரிசன வசனங்கள்தான் என்று

தோன்ருமல் போகாது. சுவாமியார் சொன்னதாவது: "இந்தப் பரிசுத்தவதியான கன்னியாஸ்திரியை நான் நன்ருக அறிவேன். நாம் இப்போது அடக்கம் செய்யப் போகும் இவள் பரிசுத்தவதி. இவளைப்போல் சருவேசுரன் முன்பாக பரிசுத்த தனத்தில் வளர்ந்த வேறு ஒரு புனித ஆத்துமம், நமது நாட்டில், இந்த இரண்டாயிரம் வருஷங்களாக தோன்றியதில்லை என்று நான் தீர்க்கமாய்ச் சொல்வேன். இவளுடைய உள்ளரங்க ஜீவியத்தின் மேன்மையை உலகம் அறிந்திருக்குமாளுல், இங்கே என்றுமில்லாத ஒரு பெரும் ஜனத்திரள் கூடியிருக்கும்; பல மேற்றிராணிமாரும் அநேகம் குருக்களும் இந்த அடக்கத்துக்கு வந்திருப்பார்கள்; இந்தச் சரீரத்தைத் தரிசிக்க, அல்லது அதன் அர்ச்சியசிஷ்ட பண்டங்களுள் ஒன்றைப் பெற்றுக்கொள்ள, எத்தனையோபேர் தவியாய்த் தவித்துக் கொண்டிருப்பார்கள். மனித அறிவுக்கு உட்பட்டவரை நான் சொல்கிறேன்: இந்த இளங் கன்னிகை லிசியுநகர் சிறிய புஷ்பத்தைப் போன்ற ஒரு புனித ஆத்துமா."

லிசியூ நகர் சிறிய புஷ்பத்தைப் போன்ற புனித ஆத்துமா அல்போன்ஸா என்று சுவாமியார் பிரசங்கத்தில் கூறினர். சிறிய புஷ்பத்தின் மூலமாக லிசியூ நகர் மடம் அடைந்த பெருமையை பர்ணஞானம் மடமும் அல்போன்ஸா மூலமாக அடையத் துவக்கியிருக்கிறது. அவளுடைய கல்லறையைத் தரிசித்து வரும் ஜனக் கூட்டத்துக்குக் கணக்கில்லை; அவள் மூலமாக பெற்றுக் கொண்ட உபகாரங்களுக்கு நன்றியறிந்த தோஸ்திரங்கள் தினசரிப் பத்திரிகைகளிலும், வாரப்பதிப்புகளிலும் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன; தவிர விண்ணப்பங்களும் நன்றியறிந்த தோஸ்திரங்களும் அடங்கிய எத்தனையோ கடிதங்கள் பர்ணஞானம் பங்கு சுவாமியாருக்கு வந்து கொண்டே இருக்கின்றன. கிறீஸ்தவர்கள் மட்டுமல்ல, எல்லா வகுப்பாரும், எல்லா ஜாதியாரும், படித்தவர்

களும் பாமரரும், குருக்களும் விசுவாசிகளும் அவளை நோக்கி மன்றாடி வருகிறார்கள்.

அவள் உயிரோடிருக்கும்போதே அவளுடைய ஜெபத்தில் அநேகருக்கு நம்பிக்கையுண்டு. சங்கனாச் சேரி மேற்றிராணியார் அவளிடம் ஒருதடவை, "எனது மேற்றிராசன காரியங்களுக்காகச் செபம் செய்யும் பொறுப்பை உனக்கு விட்டு விடுகிறேன்" என்று சொன்னது, அவள் ஜெபத்தின்மட்டிலுள்ள நம்பிக்கையினாலேயே. பர்ணஞானம் பங்கு, உதவிக்குருவாயிருக்கும் சங். ஜேகப் மானுவல் சுவாமியாரும் அவளுடைய மன்றாட்டால் அநேக காரியங்கள் அநுகூலமடைந்திருப்பதாகக் கூறியிருக்கிறார்.

ஆனால் அவளுடைய மரணத்துக்குப்பின் முதல் முதல் அவளைப் பார்த்து வேண்டிக்கொள்ள ஆரம்பித்தது சிறு குழந்தைகள். அல்போன்ஸாளுக்குச் சிறுவர்கள் மட்டில் அதிகப் பிரியம் என்று பார்த்தோமல்லவா! அவளிடமிருந்த விசேஷ குணமும் குழந்தைக்குரிய எதார்த்தமும் அன்புத் தன்மையுமே. அதனாலேயே அவளுடைய பெயரும் சிறுவர்களின் மூலமாக உலகத்துக்குப் பிரஸ்தாபிக்கப்பட வேண்டும் என்று சருவேசுரன் சித்தமானார் போலும்.

அல்போன்ஸா இறந்தவுடன், பர்ணஞானம் மடத்துப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த பிள்ளைகள் மத்தியில், அவள் ஒரு புண்ணியவதி என்ற பேச்சு உண்டாயிற்று. இதனால் சில குழந்தைகள் அவளுடைய கல்லறையைப் போய் பார்க்கவும், அங்கு ஜெபம் செய்யவும் ஆரம்பித்தார்கள். சில சமயம் ஒன்றிரண்டு மெழுகுதிரிகள் கொளுத்தப்பட்டிருக்கும்; சில பூக்கள் தூவியுமிருக்கும். சில குழந்தைகள் தாங்கள் கேட்ட உதவிகளை அல்போன்ஸம்மா கொடுத்ததாகவும் சொன்னார்கள். ஒரு பையன் உபாத்தியாயருடைய தண்டனைக்குத் தன்னைத் தப்புவிக்கவேண்டும் என்று வேண்டினான்;

உபாத்தியாயரும் தண்டிக்கவில்லை. சிலர் சேர்ந்து விளையாடும்போது மழை வரக்கூடாது என்று வேண்டிக் கொண்டார்கள்; மழைக்கு ஏதுவாயிருந்தாலும், மழை வரவில்லை. சில பெண்கள் தங்களுக்கு அல்போன்ஸா சொர்பனத்தில் தோன்றியதாகவும் பேசிக் கொண்டார்கள். ஆனால் பெரியவர்களுடைய மனதைக் கவர்ந்தது ஒரு சிறு பெண்ணுக்குக் காலில் இருந்த புண் ஒரே இராத்திரிக்குள் முற்றிலும் ஆறிப்போன விசேஷம். அவளுக்குக் காலில் இருந்த ஒரு புண் பத்து மாதமாக ஆறவில்லை. சில சிறுவர்கள் அவளிடம், "நீ அல்போன்ஸம்மா கல்லறையில் ஒரு மெழுகுதிரி ஏற்றிவை; உன் புண் ஆறிப்போகும்" என்று சொன்னார்கள். அவளும் தன் பெற்றோரிடம் கேட்டு ஒரு மெழுகுதிரி கொண்டு வந்து கல்லறையில் வைத்தாள். மறுநாள் காலையில் எழுந்திருக்கும்போது புண் ஆறியிருந்தது. அதன் பிறகு பர்ணஞானத்திலும், சுற்றுக் கிராமங்களிலுமிருந்து அநேகர் அல்போன்ஸம்மாளுடைய கல்லறையைத் தரிசிக்கவும், அங்கு தங்கள் வேண்டுதல்களைச் செலுத்தவும் ஆரம்பித்தனர். இப்போது இந்தியாவில் மட்டுமல்ல, வெளி நாடுகளிலும் அவளைப்பற்றிய பிரஸ்தாபம் பரவ ஆரம்பித்திருக்கிறது. அவளுடைய சரித்திரம் மலையாளம், தமிழ், கொங்கணி, ஆங்கிலம் முதலிய பாஷைகளில் மட்டிலுமல்ல, பிரஞ்சு, பெல்ஜியம், முதலிய பிற நாட்டுப் பாஷைகளிலும் எழுதப்பட்டிருக்கின்றன. அவளிடமிருந்து பெற்றுக் கொண்ட உபகாரங்களைப் பற்றி அநேகர் கூறும் விருத்தாந்தங்களைப் பார்த்தால், உண்மையாகவே பல முதல்தரமான புதுமைகளும் நடந்திருக்கின்றன என்று சொல்லலாம்.

பங்களூர் மேற்றிராணியாராகிய வந். தாமஸ் ஆண்டவரவர்கள் 1948, பெப்ருவரி 27ம் தேதி மலையாள நாட்டுக்குப் போனபோது, பர்ணஞானத்துக்கும் போய், அல்போன்ஸா சகோதரியின் கல்லறையைத் தரிசித்தார்கள்.

அவர்கள் மலையாள நாட்டில் பல இடங்களிலும் அநேகம் குருக்களையும் பல மேற்றிராணிமார்களையும் சந்தித்து அல்போன்ஸா சகோதரியைப் பற்றி விசாரித்திருக்கிறார்கள். எல்லாருக்கும், அல்போன்ஸா மூலமாக பல புதுமைகள் நடந்ததாகச் சொல்லப்படுகின்றவல்லவா, அவைகளைப்பற்றி ஆராய்வதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று அதிக ஆசையிருப்பதாகத் தெரிந்தது.

ஒரு நாள் ஆண்டவரவர்களிடம் பன்னிரண்டு வயது மதிப்பிடத்தக்க ஒரு சிறுவனைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். பையன் யாரென்று ஆண்டவரவர்கள் விசாரிக்க வில்லையாம். ஒருவேளை அவன், திருகு காலாயிருந்து சுகமடைந்த, தாமஸ் அபிரகாம் அதியாலில் என்ற பையனாக இருக்கலாம். இந்தப் பையனுக்குக் கால்கள் திருகிப் போயிருந்தன; கால்களைப் பிரட்டி, பார்ப்பதற்கு விகாரமாக, நடப்பான்; அவன் சுகப்பட்டது உண்மையாகவே ஒரு அற்புதம் என்று பல டாக்டர்கள் அத்தாட்சி கொடுத்திருக்கிறார்கள். அவன் குணப்படுவதற்கு முன்னும் குணப்பட்ட பின்னும், கோட்டயத்திலுள்ள டாக்டர் C. K. ஜார்ஜும் P. C. வர்க்கீஸும் சோதித்திருக்கிறார்கள். மேலும், காஞ்சிரப்பள்ளியிலுள்ள டாக்டர் K. ஜான், K. E. ஈப்பன், இவர்களாலும் சோதிக்கப்பட்டான். இவர்களெல்லாரும் ஒருவாய்ப்பட, இது உண்மையாகவே ஒரு அற்புதம் என்று சொல்லுகிறார்கள். ஆண்டவரவர்களும் பையனைப் பார்த்துவிட்டு, "எதிர் பாராதவிதமாக சுகமடைந்த இந்தப் பையனைப் பார்த்த யாரும், ஆச்சரிய மடையாமலிருக்க முடியாது" என்று சொல்கிறார்கள். பையன் இப்போது கால்களைப் பிரட்டி வையாமல், உள்ளங்கால்களை ஊன்றி நடக்கிறான். வைத்தியம் ஒன்றும் செய்து கொள்ளவில்லை. பர்ணஞானம் அல்போன்ஸா கல்லறையைத் தரிசித்ததுதான்.

நாம் இங்கு கூறிய டாக்டர்களுள், டாக்டர் K. E. ஈப்பன் என்பவர் பர்ணஞானம் பங்கு சுவாமியாருக்கு

எழுதிய கடிதம் ஒன்றில், இன்னொரு அற்புத சம்பவத்தை யும் குறிப்பிடுகிறார்: "ஒரு தட்டாசாரியின் குழந்தை, ஐந்து வயது; அவனுக்குக் காலிலும் நாவிலும் ஊனம். எழுந்து நிற்கவும், பேசவும் முடியாது. ஒரு வாரத்திற் குள் அல்போன்ஸாளின் வேண்டுதலால் பையன் பூரண சுகமடைந்து விட்டான். இப்போது நன்றாக நடக்கவும் பேசவும் கூடும்" என்று எழுதுகிறார்.

இவ்விதம் அல்போன்ஸம்மாளின் மன்றாட்டினால் உபகாரமடைகிறவர்கள் கிறிஸ்தவர்கள் மட்டுமல்ல; எல்லா வகுப்பாரும் அவளுடைய உதவிகளை அடைந்து வருகிறார்கள் என்பதற்குக் கீழ்கண்ட விருத்தாந்தம் ஒரு அத்தாட்சி.

திரு. சுப்ரமணிய ஐயர், பாலக்காட்டில் ஜில்லாக் கோர்ட் வக்கீல்; பிராமணர்; வயது ஐம்பத்தெட்டு. அவர் தனக்குச் சம்பவித்த ஒரு அற்புத வரலாறு ஒன்றைப்பற்றி எழுதிய கடிதம், அல்போன்ஸம்மாள் மரணமான இரண்டாவது வருஷ நினைவு மலரில் பிர சுரிக்கப்பட்டிருக்கிறது.

திரு. சுப்ரமணிய ஐயருக்கு ஆறுவருஷமாக சரீ ரத்தில் இரத்தக்குறைவு. அவருடைய வயத்துக்கு இனி இரத்தத்தை விருத்தி பண்ணுவது முடியாது என்று டாக்டர்கள் பலரும் அபிப்பிராயப் பட்டார்கள். ஆயுர் வேதிக் மருந்துகளாலும், மாற்று மருந்துகளினாலும் பல னில்லை. கடைசியாக 1947ம் வருஷம் ஜனவரி மாதம் வியாதி மோசமான கட்டத்தை அடைந்து விட்டது. இனி சுகப்படலாம் என்ற நம்பிக்கை அவருக்குக்கூட அற்றுப் போயிற்று. இருந்தாலும், கடைசி முயற்சியாக, சென்னைபட்டணத்துக்குப்போய், சர்க்கார் ஆஸ்பத்திரி யில் சேர்ந்து, அங்குள்ள பிரபல டாக்டர்களால் ஏதாவது செய்யக்கூடுமா, பார்ப்போம் என்று நினைத்தார்.

சென்னை, சர்க்கார் ஆஸ்பத்திரியில் அவரைச் சோதித்ததில், சாதாரணமாய் அவருடைய திரேகத்தில் இருக்க வேண்டிய இரத்தத்தில், நூற்றுக்குப் பத்தொன்பது வீதந்தான் இருந்தது. அங்குள்ள டாக்டர்களுக்கும் அவ்வளவு நம்பிக்கை இல்லை. நாலுநாள் சிகிச்சை பெற்றார்; ஒரு சொற்ப அபிவிருத்தியும் கிடையாது.

ஐந்தாம் நாள் வியாதியஸ்தரைப் பார்க்க அவருடைய நண்பர் ஒருவர் வந்தார். அவர் ஒரு கத்தோலிக்கர்; சென்னையிலுள்ள பாலை சென்டிரல் பாங்கைச் சேர்ந்தவர். அவர் வியாதியஸ்தரிடம் அல்போன்ஸம்மா படம் ஒன்று கொடுத்து, இந்த அம்மாளைப் பார்த்து மூன்று முறை ஜெபம் செய்யுங்கள்; தவறாமல் சுகம் கிடைக்கும்" என்றார். வக்கீலும் நம்பிக்கையோடு ஜெபித்துவர ஆரம்பித்தார். அன்றுமுதல் அவர் உட்கொண்ட மருந்து ஆச்சரியத்துக்குரிய விதமாய் பலன் தருவதை உணர்ந்தார். இரண்டுவாரம் சென்று சோதித்ததில், நூற்றுக்குப் பத்தொன்பதிலிருந்து நாற்பது வீதம் இரத்தம் அதிகரித்திருந்தது. இதைப்பார்த்த டாக்டர் ரெட்டி என்பவருக்கு ஆச்சரியமாயிருந்தது. மூன்றாவது சோதனையில் ஐம்பது வீதம் வரையிலும், நாலாவது சோதனையில் ஐம்பத்தேழு வீதமும் இரத்தம் அதிகரித்திருந்தது. ஆறு வருஷம் குணப்படாத வியாதி இரண்டே மாதத்திற்குள் முற்றிலும் சுகமானது.

ஆஸ்பத்திரியை விட்டு வெளியே வந்தபின் அவர் பரணஞானம் போய் அல்போன்ஸாளுக்கு நன்றி செலுத்த மறக்கவில்லை. அவர் அற்புதமான இன்னொரு சகாயமும் பெற்றதாகக் கூறுகிறார்: அவருடைய மகள் நியூ டெல்லியில் இருந்தாள். அவள் மகன் ராஜனுக்கு நாலரை வயது. அவன் ஒரு வருஷக் குழந்தையாயிருக்கும்போது, நிமோனியா ஜுரம் கண்டது. அதன் விளைவாக இந்த மூன்று வருஷமும் நடக்கவும் பேசவும்

சக்தியற்றிருந்தான். அவனுக்காக அல்போன்ஸாளைப் பார்த்து அதிகம் வேண்டிக் கொண்டதோடு, தன் மகளுக்கும் அல்போன்ஸாளைப் பார்த்து ஜெபிக்கும்படி கடிதம் எழுதினர். அவர் பர்ணஞானத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பிப் போனபிறகு தன் மகளிடமிருந்து வந்த முதல் கடிதம் அவரை சந்தோஷத்தால் பரவசப் படுத்தியது. மூன்று வருஷம் நடக்கவும், பேசவும் சக்தி யற்றிருந்த பையன் இப்போது ஓடியாடி விளையாடு கிறுன்! நன்ருகப் பேசவும் செய்கிறுன்!

கீழ்கண்ட சம்பவம் கிழக்குப் பாகிஸ்தானில், மைமேன்சிங் ஜில்லா, நன்னி போஸ்டு, பராமரி கத்தோலிக்கு மிஷன் ஆஸ்பத்திரியில் நடந்தது. அந்த ஆஸ்பத் திரியைச் சேர்ந்த சங். மரிய எம்மானுவேல் சகோதரி, பர்ணஞானம் சிரேஷ்ட சுவாமியாருக்கு இது விஷயத் தைக் குறித்து எழுதியிருந்தார்கள். அதாவது:

“கடந்த ஏப்பிரல் மாதம் 16-ம் தேதி, ஒரு இந்து வாலிபனை இங்கு கொண்டுவந்தார்கள். அவனுடைய நிலைமை ரொம்பவும் மோசமாயிருந்தது. அவனுக்கு வைத்தியம் பார்த்து வந்த டாக்டர், இனிப் பிழைக்க மாட்டான் என்று கண்டதும், அவனைக் கொண்டுபோகும் படி சொல்லிவிட்டார். வாலிபனுக்கு டைபஸ் (Typhus) என்ற கொடிய ஜுரம்; வியாதி முற்றி, கடைசிக் கட்டத் துக்கு வந்துவிட்டது. அவன் குணமாவான் என்று எங்களுக்கும் நம்பிக்கையில்லை. இருந்தாலும் அவ னுடைய மனைவிக்கும், பெற்ருேருக்கும் திருப்தி கொடுப் பதற்காகவே அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்தோம். அங்கு அவனுக்குக் கிடைத்த இடம் ஒரு சிறு குடிசை தான். அதில் ஒரு கட்டில் கூட கிடையாது.

வியாதிக்காரனுக்கு எப்போதும் புலப்பமாகவே இருந்தபடியால், மருந்து கொடுப்பது அதிக சிரமமா யிருந்தது. இரண்டு மூன்று நாட்களுக்குப்பின் அவன் பிழைக்கமாட்டான் என்று நிச்சயமாயிற்று. இனி

அவனுக்குச் சுகம் ஏற்படவேண்டுமானல், கடவுள் ஒரு பெரிய புதுமை செய்தால்தான் முடியும்; மற்றப்படி நம்பிக்கையில்லை என்று கவலைப் பட்டுக்கொண்டிருக்கும் போது, எங்களுக்கு அல்போன்ஸா சகோதரியின் ஞாபகம் வந்தது. எங்களெல்லாருக்கும் அவன் சுக மடைய வேண்டுமென்று ஆசை. அதனல் அல்போன்ஸா சகோதரியின் படத்தை அவனுடைய தலையணைக்கருகில் வைத்து நாங்களும் அவளைப் பார்த்து வேண்டிக்கொண்ட தோடு, அவனுடைய உறவினரையும் வேண்டிக் கொள்ளும்படி சொன்னேம்.

"ஐந்தாம் நாள் இரவு ஒன்பது மணிக்கு வியாதிக் காரனைப் பார்க்கப்போனபோது அவன் மரண அவஸ்தை யாயிருந்தான். கை நாடியெல்லாம் விழுந்துபோயிற்று. மூச்சு விடுவதுகூட நன்ருகப் புலப்படவில்லை. கண் குளிர்ந்து, பாதி திறந்து பஞ்சடைந்திருந்தது. முகம் பிரேதத்தைப்போல் வெளுத்துப் போயிற்று. இன்று இராத்திரி இறந்துபோவது நிச்சயம்; அதனல் இறந்த வுடன் பிரேதத்தை எடுத்துப் போவதற்கு வண்டி கொண்டு வரும்படியாக அவனுடைய உறவினருக்குச் சொல்லி அனுப்பினேம். இறந்த பிறகு சரீரத்தைக் கொஞ்ச நேரமும் அங்கு வைத்திருக்க எங்களுக்கு இஷ்ட மில்லை. விஷக் கிருமிகள் பரவுமல்லவா? நடு ராத்திரி வண்டியும் வந்தது. வியாதிக்காரனுடைய நிலைமை மாற வில்லை. அதனல் கொஞ்ச நேரம் காத்திருப்போம் என்று இருந்தார்கள். வியாதிக்காரனுக்கு வேதனை குறையும்படி ஒரு ஊசி போட்டோம்.

"இராத்திரி முழுவதும் வியாதிக்காரனுடைய படுக் கையண்டை கண் விழித்திருந்து அல்போன்ஸாளைப் பார்த்து ஜெபித்தவண்ணமாகவே இருந்தோம். ஆனல் வியாதியஸ்தனின் நிலைமை நிமிஷத்துக்கு நிமிஷம் மோசமாகிக்கொண்டுதான் வந்தது. காலை பூசைக்கு நேரமாயிற்று. இறந்துபோனல், நாங்கள் திரும்ப வரு

வதற்குள் சரீரத்தைத் தூக்கிக்கொண்டு போய்விடக் கூடாது என்று அவனுடைய உறவினரிடம் சொல்லி விட்டு, பூசைக்குப் போனோம்.

"பூசையிலும் அல்போன்ஸம்மாளைப் பார்த்து வேண் டிக்கொண்டு தானிருந்தோம். இந்துக்கள் நிறைந்த இந்த நாட்டில் ஒரு பெரிய புதுமை நடந்தால், எத் தனையோ கோடி ஜனங்களுக்கு முன்னால் நமது ஆண்ட வருடைய நாமம் பிரஸ்தாபப்படுமே என்ற ஆசை யோடு ஜெபித்துக் கொண்டிருந்தோம்.

"பூசை முடிந்ததும் வியாதிக்காரனைப் பார்க்கப் போனோம். அவனைப் பார்த்தபோது எங்களுடைய கண் களை நாங்களே நம்ப முடியவில்லை. திக்பிரமை கொண்ட வர்களைப்போல ஸ்தம்பித்து நின்றுவிட்டோம். வியாதி யஸ்தன் தன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பல் விளக்கிக் கொண்டிருந்தான். என்னைக் கண்டதும்: "வாருங்கள் தாயாரே, நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? எனக்கு ரொம்பப் பசி எடுக்கிறது; கொஞ்சம் சோறும் கோழிக்கறியும் தருவீர்களா?" என்று ஆங்கிலத்தில் சொன்னான். எங்களுக்கோ ஆச்சரியத்தால் ஒன்றும் ஓடவில்லை. பேசவும் சக்தியற்று நின்றுகொண்டிருந் தோம். பிறகு இந்த அற்புதத்தைப் பார்க்கும்படி சுவாமி யாரைக் கூப்பிடச் சொன்னோம்.

"இது நடந்த சில நாட்களில் வியாதியஸ்தன் ஊருக்குப் போனான். பிறகு சமீபத்தில் அவன் எங்களைப் பார்க்க வந்தபோது, எங்களால் அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை; தான் இன்னாரென்று அவன் சொன்ன பிறகுதான் தெரிந்தது."

சகோதரி
மரிய எம்மானுவேல்
(கையொப்பம்)

இவை போன்ற அற்புத சம்பவங்கள் கணக்கற்றவை. அவைகளையெல்லாம் ஆராய்ந்து, அவளுடைய ஜீவியத்தைச் சோதித்து அறிந்து, அவள் உண்மையில் புனித பரிசுத்தவதி என்பதைத் தீர்மானிப்பது பரிசுத்த கத்தோலிக்குத் திருச்சபையின் உரிமை. அதற்கிடையில் அல்போன்ஸாளின் பிரஸ்தாபத்தைக் கேள்விப்படுகிற நாம், இந்த அற்புத சம்பவங்களினால் சருவேசுரன் உலகத்துக்குக் கற்பிக்கும் படிப்பினை என்னவென்று சற்றுக் கவனிக்கவேண்டும்.

திருச்சபை சரித்திரத்தை வாசித்துப் பார்த்தால், அந்தந்தக் காலத்துக்கேற்ற போதனைகளைத் தரும் அர்ச்சியசிஷ்டவர்களை சருவேசுரன் உலகத்துக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார் என்று தெரியும். ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் ஐரோப்பாவில் விஞ்ஞான அறிவும் சாஸ்திர ஆராய்ச்சியும் மனிதனை அகங்காரத்தால் தலை சுழலும்படி செய்து கொண்டிருந்தது. அப்போது, மனிதன் "மனந்திரும்பி சிறு குழந்தையைப்போல ஆகாவிட்டால், அவன் பரலோக இராட்சியத்தில் பிரவேசிக்க மாட்டான்" என்று அறிவுறுத்த சருவேசுரன் அர்ச். குழந்தை தெரசம்மாளை அனுப்பினார். இருபதாம் நூற்றாண்டின் மத்திய பாகமாகிய இக்காலம், மனிதன் மிதமிஞ்சிய சுகபோகங்களை நாடும் காலம். அதனால் இக்கால மக்களுக்கு "கோதுமை மணி நிலத்தில் விழுந்து மடியாவிட்டால், அது தனியே கிடக்கும்; மடிந்ததானால் மிகுந்த பலனைத்தரும்" என்ற போதனையைக்காட்ட சங். அல்போன்ஸா சகோதரியை சருவேசுரன் நம் மத்தியில் அனுப்பி இருப்பதாகத் தெரிகிறது.

அல்போன்ஸாளுடைய வாட்கையின் இலட்சியம் "தனக்கு மரித்து, கிறீஸ்துவுக்காக அவரில் ஜீவிப்பது" என்ற கொள்கை. இதை எவ்வளவு அழகாக அவள் விளக்கிக் கூறுகிறாள் என்று பார்த்தோம். "கோதுமை மணிகளைத் திரித்துப் புடைத்தால்தான் அது வெண்மை

யான மாவாகும். இந்த மாவைச்சுட்டு திவ்விய நற் கருணைக்கு ஒஸ்திகள் செய்கிறோம். இந்த ஒஸ்திகளைப் போல நாமும் துன்பதுயரங்களினால் நசுக்கவும் புடைக் கவும்படவேண்டும்” இது நமதாண்டவருடைய படிப் பினையின் உண்மையான எதிரொலி. “கோதுமை மணி நிலத்தில் விழுந்து...மடிந்ததானால்தான் மிகுந்த பலனைத் தரும். தன் ஜீவனை நேசிக்கிறவன் அதை இழந்து போவான்; இவ்வுலகில் தன் ஜீவனைப் பகைக்கிறவனோ, சததமான ஜீவியத்துக்கு அதைக் காப்பாற்றிக் கொள் கிறான்.” கோதுமையை மாவாக அரைக்காவிட்டால் அப்பம் கிடையாது; திராக்ஷைப் பழங்கள் நசுக்கப்படா விட்டால் ரசமும் கிடையாது. அப்படியே ஞான ஜீவியத் திலும், சுய பரித்தியாகத்திலும், உலகப் பற்றறுத்தலி லும் மனிதன் புண்ணிய பலன் தரும்படி அவனுடைய மனம் பண்படவேண்டும். அல்போன்ஸாளுடைய ஜீவி யத்தின் மையமாயிருந்தது சுயநலமல்ல, கிறீஸ்துநாதர். நான் என்பதை அகற்றி, கிறீஸ்துநாதரைத் தன் இருதய பீடத்தில் அரசிருக்கச் செய்தாள். தீர்க்கமான, தவறாத உள் உணர்வோடு கிறீஸ்துநாதரைத் தன் ஜீவியத்தில் சகலமுமாகக்கொண்டு நடந்தாள்.

* * * *

அல்போன்ஸம்மாளின் ஜீவியத்தில் அதிகமாக நமது மனதைக் கவர்ந்து நிற்பது அவள் அநுபவித்த துன்ப துயரங்களும் வேதனை நோவுகளும். அவளுடைய சரித் திரத்தை வாசிக்கும் நாம், துன்ப துயரங்களின் தத்து வத்தை அறியவேண்டும். உலகில் அநேகர் கஷ்ட துன்பங் களையும் வியாதிகளையும் முற்றிலும் போக்கிவிடலாம் என்று கனவு கண்டு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. மனிதனுக்கு சுபிட்ச வாழ்வென்பது கஷ்ட துன்ப மில்லாத வாழ்வு; பாக்கியமான ஜீவியமென்பது உலக சுகபோகங்களை மட்டுத்திட்டமின்றி அனுபவிப்பது என்று தப்பிதமாக நினைக்கின்றார்கள். எந்த சுகபோகங்

களின் மத்தியிலும் நிர்ப்பாக்கியமாய் ஜீவிப்பவர்களு முண்டு; எந்த கஷ்ட நிர்பந்தங்களின் மத்தியிலும், அல் போன்ஸா சகோதரியைப்போல, மனக்களிப்பும் முக மலர்ச்சியும் குன்ருமல் ஜீவிப்பவர்களும் இருந்திருக் கிருர்கள். மனிதனுடைய சுபிட்ச வாழ்வைக் கெடுப்பது பாவம் ஒன்றுதான். அதனின்றும் ஆத்துமத்தைப் பரி சுத்தப்படுத்த உதவுவது கஷ்ட துன்பங்கள். தவிர அவற்ருல் தனி மனிதனுக்கும், சமூகத்துக்கும் ஏற்படும் நன்மைகள் அநந்தம். கஷ்ட துன்பங்கள் மனிதனுடைய மனதைப் பண் படுத்துவதுபோல, வேறு எதுவும் செய்யாது. அநுதாப குணமும், தியாக சிந்தையும், விரிந்த நோக்கமும், பரலோக நாட்டமும் உண்டா வதற்கு கஷ்ட துன்பங்களைபோல எது உதவக்கூடும்? இவற்ருல் வரும் பலன்களைப் பற்றி கிறீஸ்துநாதர் அநு சாரத்தில் எவ்வளவு அழகாகச் சொல்லியிருக்கிறது பாருங்கள் :

"சிலுவையிலேயே ஈடேற்றமிருக்கிறது; சிலுவையில் தான் ஜீவியத்தைக் காணலாம். சிலுவையே சத்துருக் களிடமிருந்து உன்னைக் காக்கும் கேடயம். பரலோக இன்பம் பொழிவதும் சிலுவையிலேயே. சிலுவையினுல் மன உறுதியும் ஞான சந்தோஷமும் உண்டாகும். சிலுவையினுலேயே புண்ணியத்தின் உயர்வும், பரிசுத்த தனத்தின் சம்பூரணமும் ஏற்படும். சிலுவையினுலன்றி ஆத்துமத்துக்குத் திடகாத்திரமும், நித்திய ஜீவியத்தில் நம்பிக்கையுமில்லை....பரிசுத்த சிலுவையின் பாதையும் அன்ருட தியாகங்களையுந்தவிர, ஜீவியத்துக்கும் உண்மை யான மனச்சமாதானத்துக்கும் வேறு மார்க்கமில்லை. எங்கே வேண்டுமானுலும் பேர்ப்பார், எதை வேண்டு மானுலும் தேடிப்பார், பரிசுத்த சிலுவையின் மார்க் கத்தைத்தவிர, மேலே வேறு உயர்ந்த பாதையும் காண மாட்டாய்; கீழே வேறு சிறந்த வழியையும் அறிய மாட்டாய்...."

அல்போன்ஸாளின் ஜீவியத்தில் காணும் கஷ்டதுன்பம், வியாதி நோக்காடுகளைப் பார்த்துவிட்டு, கிறீஸ்தவ ஜீவியமென்றால், அதில் ஒரு சந்தோஷத்துக்கும் வழியில்லை, உலகத்தில் ஒன்றையும் அநுபவிக்ககூடாது, எப்போதும், மனவறட்சியும், கஷ்டமும், தரித்திரமும் பிடித்த இருட்டடிந்த ஜீவியந்தான் கிறீஸ்தவ ஜீவியம் என்று நினைப்பது தவறு. இப்படி நினைப்பதைவிட பெரிய தப்பறை வேறு இருக்காது. கிறீஸ்தவ ஜீவியத்தின் ஏக நோக்கம் மனிதனை இன்பத்தின் பாதையில் இட்டுச்செல்வது. ஆனால் அது இட்டுச்செல்லும் பாதை சிற்றின்பத்தின் பாதையல்ல; பேரின்பத்தின் பாதை. இந்தப் பேரின்ப பாதையில் ஒழுகுவதற்கு மனிதனுடைய மனம் பண்படவேண்டும். பண்பட்ட உள்ளமே புண்ணிய பயிற்சிக்கு ஏற்ற இடம். புண்ணிய பயிற்ச்சிதான் பேரின்ப மார்க்கம். உள்ளத்தைப் பண்படுத்தும் சாதனங்களுள் துன்ப துயரங்கள் ஒன்று.

எந்த சாதனமும் நன்மைக்கும் உதவும், தீமைக்கும் உதவும்; எல்லாம், உபயோகிப்பவன் கையிலிருக்கிறது. அப்படியே துன்ப துயரங்களும். ஒவ்வொரு மனிதனுடைய ஜீவியத்திலும் கஷ்ட நஷ்டங்களுண்டு; வியாதி துன்பங்களுண்டு. இவற்றிற்குத் தப்பிக்க யாராலும் முடியாது. அவனவன் தன் ஜீவியத்தில் வரும் கஷ்ட துன்பங்களை தனது கிறீஸ்தவ கொள்கைகளுக்கிணங்க அநுபவித்தால், அவனுடைய உள்ளம் பண்பட்டு, புண்ணியப் பயிற்சிக்கு ஏதுவாகும்; அதனால் அவன் பேரின்ப பாதையில் ஒழுகலாம்.

தவிர, கிறீஸ்தவனில் ஒருவித இரட்டை ஜீவன் இருக்கிறது. இயல்பான நாட்டங்களையுடைய சுபாவ ஜீவன் ஒன்று; சுபாவத்துக்கு மேற்பட்ட தெய்வீக நாட்டங்களையுடைய ஞான ஜீவன் மற்றொன்று. இவற்றின் நாட்டங்கள் ஒன்றுக்கொன்று முறண்பாடானவை. ஒன்றை அடக்கி மற்றொன்று விருத்தியாக முயற்சிக்கின்றன.

இவை இரண்டும் நல்ல மரத்துக்கும் அதில் விழுந்த புல்லுருவிக்கும் சமம் என்று சொல்லலாம். மரத்தின் சக்தியை உறிஞ்சி புல்லுருவி தழைக்கிறது; புல்லுருவி கெட்டால்தான், மரம் தழைக்கும். அதுபோல, மனிதனுடைய சுபாவ துர்நாட்டம் மட்டுப்பட்டால், ஞான நாட்டம் வளரும்; ஞான ஜீவியம் விருத்தியாகும். ஆனால் சுபாவ நாட்டத்தை அதன்போக்கில் விட்டுவிட்டால், ஞான ஜீவியம் க்ஷீணித்துப் போகும். ஞான ஜீவியமே மனிதனைப் பேரின்பத்துக்கு இட்டுச் செல்வது. ஆகையால் பேரின்பத்துக்குப் போகும்பாதையில் ஒழுக வேண்டுமானால், சுபாவ நாட்டங்களை அடக்கி, ஞான நாட்டங்களுக்குத் துணை புரியும்படி செய்யவேண்டும். இவ்விதம் செய்வதற்கு ஒவ்வொருவருக்கும் வரும் துன்ப துரிதங்கள் பெரிதும் உதவுகின்றன. அவைகளைத்தவிர, தபக்கிரிகைகளையும் ஒறுத்தல் முயற்சிகளையும் மேற்கொண்டு, மனிதன் தன் சுபாவ நாட்டத்தை அதன் போக்கில் விடாமல் அடக்கி, ஞான நாட்டங்களுக்குத் துணை புரியச்செய்யவேண்டும். இது எல்லா ஆத்துமாக்களுக்கும் அவசியம். இதனால்தான் எல்லாருக்கும், தினந்தோறும் தங்கள் சிலுவையைத் தூக்கிக்கொண்டு நம நாண்டவரைப் பின்செல்லவேண்டிய கடமை ஏற்படுகிறது.

அல்போன்ஸா ஒரு "பலியாகும் ஆத்துமமாக" (Victim Souls) இருக்கும்படி சருவேசுரனால் அழைக்கப் பட்டவள். இவ்வித பலி ஜீவியத்துக்கு அழைக்கபடுகிறவர்கள் சிலரே. ஆனால் எல்லாரும் தங்களுக்கு வரும் நோவு நோக்காடுகளையும், கஷ்ட துன்பங்களையும் நம நாண்டவருடைய பாடுகளோடு ஒன்றித்து, அமைந்த மனதோடு அநுபவிப்பார்களானால், அவர்களும் அவரோடு சேர்ந்து, சொற்ப அளவிலாவது, பலியாகும் ஆத்துமங்களாவார்கள். இதனால் அவர்களும் தங்களுக்கு மரித்து கிறீஸ்துநாதரில் ஜீவிக்கலாம். இதுவே கிறீஸ்தவ ஜீவியத்தின் தத்துவம்.

தன்னலமும் பேராசையும் மேலோங்கி, அருளும் அன்பும் கெட்டு நிற்கும் காலம் இது. ஞான ஒளி மங்கி, மனதில் மருள்மண்டி, செல்வழியறியாது சஞ்சரிக்கும் உலக மக்களுக்கு, அறிவொளியின் நிலையம் எது, அருட்புனலின் சுனை எது என்று காட்டப்போந்தவள் அல்போன்ஸா என்றால் பொய்யாகாது. அவளது வாட்கை வரலாறுகளை வாசிக்கும் அன்பர் வாட்கையில் மறம் நீங்கி அறந்தளிர்க்கும்; இருள் நீங்கி அருள் சுரக்கும்; அன்பு மலர இன்பம் மணக்கும். அதனால் உலகியல் வாட்கையின் உயர் கதியறிந்து புத்துணர்வுபெற்று புனித ஜீவியத்தில் தலைப்படுபவர் யாவர்க்கும் இப்புஸ்தகம் பெரிதும் பயன்படும்.

# THE GEM OF KERALA

## Sister Alphonsa

A life of Sister Alphonsa in **English** with colour illustrations is to appear early in 1949.

*De Nobili Press* *Madura*